**சோழநாந சுந்தரசோழ மூவேந்த வேளாநும் ஆக இவ்விருவோம் இப்பிரமாணம் எழுதிநேந் இவ்வூர் காவி-**

16. **திக் காணியுங் கணக்கக் காணியுமுடைய மத்யஸ்தந் வெண்ணைக் கூத்தந் லோகநாதநேந் இவை எந்நெழுத்து இது பந்மஹாயேஸ்வர ரக்ஷை**

## 11:3

**இடம்:** *மேலது, அர்த்தமண்டப வடசுவர்*

**காலம்:** *முதலாம் குலோத்துங்கசோழன் யா-40=பொ.ஆ.1110*

**செய்தி:** *கல்வெட்டு சிதைந்துள்ளது.தியாகவல்லி வளநாட்டுப் பொய்கைநாட்டுச் செம்பியன் துண்டம் என்ற நாட்டுப் பிரிவில் இருந்த ஒரு ஊரைச் சேர்ந்த காலன் குருவாய்ச் சேவகன் என்பவர் விறகாவூர் தொண்டர்கள் ஈஸ்வரமுடைய நாயனார்க்கு ஒரு சந்தி விளக்கு எரிக்க இக்கோயில் சிவப்பிராமணர்களிடம் ஒரு காசு வழங்கி விளக்கு ஏற்றச் செய்துள்ளார்.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவநச் சக்க-**
2. **ரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ**
3. **தேவர்க்கு யாண்டு 40ஆவது தியாகவல்லி வ-**
4. **வளநாட்டுப் பொய்கை நாட்டுச் செம்பியந் துண்---**
5. **ன-----ல காலந் குருவாய்ச் சேவகநாந உடை -----ப்**
6. **--------பக்கல் விறகாவூர் தொண்டர்களீஸ்வரமுடைய நாய-**
7. **னார்க்கு நிசதி ஒரு ஸந்தி விளக்கெரிக்க கடவோமாக**
8. **[க் கொண்ட] ஒரு காசு ஒன்றுங் கொண்டு [எரிக்]**
9. **கு கடவோமாநோம் இக்கோயில் காணியுடைய**
10. **சிவப்பிராஹ்மணந் காப்பியநா -------த -------**
11. **யாதித்தந் சீக்ருஷ்ணந் ------[இது பன்]**
12. **மஹேஸ்வர ரக்ஷை**

## 11:4

**இடம் :** *மேலது, கருவறை மேற்குச் சுவர்*

**காலம் :** *விக்கிரமசோழன், யா-3 = பொ.ஆ.1121*

**செய்தி:** *கல்வெட்டு உடைந்துள்ளது.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரமசோழதேவர்**
2. **க்கு யாண்டு 3ஆவது -----**
3. **க் கடவோமாக இவ்வூரிருக்கும்**
4. .......

## 11:5

**இடம் :** *மேலது, மகாமண்டபத் தெற்குச் சுவர் துண்டுக் கற்கள்*

**காலம் :** *விக்கிரமசோழன், யா-10, பொ.ஆ.1128*

**செய்தி:** *புவனமுழுதுடை வளநாட்டுப் பொய்கை நாட்டு அரிந்தமன் விறகாவூர் தொண்டர்கள் ஈஸ்வரமுடையார் கோயில் சிவப் பிராமணர்களிடம் விறகாவூருடையார் கன்மி அரையன் மாகாள முடையான் என்பவர் ஒரு காசு முதலீடாகக் கொடுத்து சந்தி விளக்கு எரிக்கச் செய்துள்ளார்.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ[விக்கிரம]**
2. **சோழதேவர்க்கு யாண்டு 10ஆவது வடகரை புவனமுழு**
3. **துடை வளநாட்டுப் பொய்கை நாட்டு அரிந்தமன் விறகாவூர்**
4. **தொண்டகளீஸ்வரம் முடையார் கோயில் காணி**
5. **உடைய சிவப்ராஹ்மணந் காப்பியந் இளம்பிறை சூடிமுடிகொண்ட**
6. **டாநேயும் இளம்பிறை சூடி ஆழ்வாநும் இவ்விருவோம் விறகாவூ**
7. **ருடையார் கந்மி அரையந் மாகாளம் முடையாந் பக்கல் நாங்கள் இவ்வா-**
8. **ண்டைச் சித்திரை மாஸம் கொண்ட காசு 1-இக்காசு ஒந்றுக்கும் சந்**

9. **திராதித்தவரை திங்களால் திரமம் பொலிசையாநதுக்கு திங்கள் நாழி**

10. **நெய்யாநதுக்கு நித்தம் ஒரு சந்தி எ**

11. **ரிக்க கடவோமாகவும் இக்கோயிலில் திரு.---------**

12. **டிவித்துக் கொள்ளக் கடவராக ஸம்மதித்து ------**

13. **யிம்மாகாளமுடைய கந்மிக்கு சிவப்ராஹ்------**

14. **றைசூடி முடிகொண்டாநேனும் ------**

## 11:6

**இடம் :** மேலது, மகாமண்ட மேற்கு, தெற்குச் சுவரில் உள்ள துண்டுக் கற்கள்

**காலம்:** *மூன்றாம் இராசராசசோழன், யா-19 = பொ.ஆ.1235*

**செய்தி:** இராஜராஜவளநாட்டுப் பொய்கைநாட்டு அரிந்தவன் விறகாவூர் மற்றும் விறகாவுடையார் கன்மி திரியமுடையான் கூத்தனான தில்லை என்பவர் பெயர் குறிப்பிடப்படுகிறது.

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவ**

2. **த்திகள் ஸ்ரீ இராஜராஜதேவர்க்**

3. **கு யாண்டு பத்தொன்பதாவ**

4. **து இறாறாவளநாட்டுப் பொய்கை நா**

5. **ட்டு அரிந்தவன் விறகாவூர் -----**

6. **விறகாவுடையார் கன்மி திரியமு**

7. **டையான் கூத்தனான தில்லை** (மீதிப்பகுதி கிடைக்கவில்லை)

## 11:7

**இடம்:** மேலது மாவட்டம் வட்டம், திண்ணக்குளம், நெற்குன்றநாதர் கோயில் கருவறை மேற்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்

**காலம்:** *முதலாம் இராஜேந்திரன், யா-14, பொ.ஆ.1026*

**செய்தி:** ஜெயசிங்க குலகால வளநாட்டு வடசிறுவாயில் நாட்டு

*சேவூர் மங்கலமுடையான் விரையாநிலை அரங்கன் தன் உடன்பிறந்த விரையாநிலை கொற்றபிராட்டிக்கு திருநெற்குன்றமுடையார் கோயிலில் நந்தா விளக்கு வைத்துள்ளார். அதற்கு 30 காசுகளை இக்கோயில் சிவபிராமணர்கள் பெற்றுக் கொண்டு விளக்கு எரிக்க ஒப்புக்கொண்டனர். (கல்வெட்டு நடுப்பகுதியில் சுவர் வைத்துக் கட்டப்பட்டுள்ளது)*

1-6. **ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர .... தொடுகழற்**

7. **காவற் கடுமுரட்கடாரமும் மாப்பெருந்தண்டாற்கொண்ட கோப்பர கேஸரிபன்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்த்ரசோழதேவற்கு யாண்டு 14ஆவது இராஜேந் ---- நம்பிப்பிரான் மாடமுடையேனும் என் குடியிலாரும் இக்குடி பொந்மிலி சம்பந்**

8. **தநேனும் என்குடியிலாரும் உள்ளிட்ட சிவப்ராஹ்மணர்களோம் ஜயஸிங்க குலகால வளநாட்டு வடசிறுவாயில் நாட்டு சேவூர் மங்கலமுடையான் உடன் பிறந்த விரையானிலை கொற்றபிராட்டிக்கு சேவூர் மங்கலமுடையான் விரையா நிலை அரங்கன் வைய்த்த திருநொந்தா விளக்கு ஒன்று இத்திரு நொன்தா**

9. **விளக்கு ஒன்றினுக்கு உபையமாக சந்திராதித்தவல் எரிக்க கடவோமாக கொண்ட அன்றாடு நற்காசு வாசிபாடா தீ-------ண்ட காசு முப்ப------இப்படி இ ஸ்ரீகோயிலிலே கல்லிலே வெட்டிக் கொண்டு இன்நிவந்தம் செலுத்தக் கடவோமாக இப்பரிசு கைய்த் தீட்டு இட்டுக் குடுத்தோம் சேவூர் மங்க**

10. **லமுடையான் விரையாநிலை அரங்கனுக்கு திருநெற்க் குன்றத்து சிவப்ராஹ்மணன் குன்றன் நாராயணனும் ந-------ரான மாடமுடையான் சாத்தன் ----- நாலோபாதி உடையான் தண்டன் கூத்தாடியேன் இவை என்னெழுத்து இது பன்மாஹேஸ்வர ரக்ஷை.**

## 11:8

**இடம்:** *மேலது,அர்த்தமண்டப வடக்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *முதலாம் இராஜேந்திரன், யா.30, =பொ.ஆ.1042*

**செய்தி:** *ஊர் மகாசபையார் இவ்வூர் நிலங்களை உழுதவர்கள் செலுத்தி வந்த வெள்ளான் வெட்டி வரியை வேண்டாம் என்று முடிவு செய்து நியோகம் (உறுதிமொழி ஆணை)*

கொடுத்துள்ளனர். கல்வெட்டு பல இடங்களில் படிக்கமுடியாதபடி சுவர்களால் மறைக்கப்பட்டுள்ளது.

1-26. **திருமன்னிவளர (மெய்க்கீர்த்திப் பகுதி)**

27. **-------ஸ்ரீ ராஜேந்த்ரசோழதேவற்குயாண்டு 30ஆவது ராஜேந்த்ர ஸிங்ஹ வளநாட்டுப் பொ -------------**

28. **----------இயாட்டைக் கற்கடக நாயற்றுச் சனிக்கிழமை பெற்ற ஓரோசணி நாள்**

29. **-------யிலியாக கல்மேல் வெட்டிக்கொள்ளப் பெறுவார்களாகவும்**

30. **நிலங்கள் உழுதாரை வெள்ளான் வெட்டியால் வந்த வியங்கொண்**

31. **------த்து நியோகங் குடுத்தோம் மஹாஸபையோம் இப்பரிசு குறியிலி**

32. **-----வித்தனும் கொட்டையூர் சுப்ரஹ்மணியனும்**

## 11:9

**இடம்:** *மேலது, கருவறை அர்த்தமண்டபத் தெற்குச்சுவர்*

**காலம்:** *இரண்டாம் இராஜேந்திரன், யா.6, =பொ.ஆ.1058*

**செய்தி:** மன்னர் பெயர் மற்றும் ராஜேந்திரசிங்கவளநாடு குறிப்பிடப்படுகிறது. கல்வெட்டு முழுவதும் படிக்கமுடியாதபடி உள்ளது.

1. **ஸ்வஸ்திஸ்ரீ இரட்டப்பாடி -------**

2. **----------கோப்பரகேசரிபந்மரான ஸ்ரீ ராஜேந்த்ர தேவர்க்கு யாண்டு 6ஆவது வடகரை ராஜேந்த்ரசிங்கவளநாட்டு**

## 11:10

**இடம்:** *மேலது, கோபுரவாயில் உட்புற திண்ணைச்சுவர்*

**காலம்:** *முதலாம் குலோத்துங்கன், யா.49= பொ.ஆ1119*

**செய்தி:** தியாகவல்லி வளநாட்டுப் பொய்கை நாட்டு வீரராஜேந்திரபுத்து நகரத்தார் திருநெற்குன்றமுடைய மகாதேவருக்கு நாள்தோறும் காவேரித் திருமஞ்சனநீர் கொண்டு வந்து அபிஷேகம் செய்ய தர்ம தானமாக

நிலம் கொடுத்துள்ளனர். அந்நிலம் உத்தமசோழப் பேராற்று (கொள்ளிட ஆறு)க்கு தெற்கில் அமைந்திருந்தது. அந்நிலத்தின் எல்லைகளாக சிங்கன் வாய்க்கால், அலையூர் எல்லைப் பெருவழி தழுவக்குழைந்தான் வாய்க்கால் ஆகியவை குறிப்பிடப்படுகிறது. இந்நிலத்துக்கு ஊர்க் கடமை என்னும் வரிச் செலுத்த முட்டைப்பாடி உடையான் ஆதித்தன் உய்ய வந்தான் ஆன திருபதிய தொண்டர் என்பவர் 25 காசுகள் கொடுத்துள்ளார். இக்காசுக்கு வந்த வட்டிக்கு ஈடாக அந்நிலத்துக்கு அந்தராயக்காசு உள்பட்ட வரிகளை ஊரார் செலுத்த ஒப்புக்கொண்டனர்.

1. **ஸ்வஸ்திஸ்ரீ புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர் மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி மீநவர் நிலை கெடவில்லவர் குலைதர ஏநமன்நவர் இரியலூற்றிழிதர திக்கனைத்துந்தந் சக்கரநடாத்தி வீரஸிங்ஹாஸநத்து**

2. **உலகுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோவிராசகேசரி பந்மராந சக்ரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவற்க்கு யாண்டு 49-தாவது தியாகவல்லி வளநாட்டு பொயிகை நாட்டு வீரராஜேந்த்ரபுரத்து நகரத்துக்கு சமைந்து பட்டமு-**

3. **டையாந் செம்பியந் ஆவூர் நாட்டு வேளாநும் முட்டபாடி உடையாந் ஆதித்தந் மாசறு சோதியும் ஆதித்தந் திருநெற்குந்ற முடையாநும் நல்லாவூருடையாந் பஞ்சநதி திருச்சிற்றம்பல முடையாநும் மேல்மங்கலமுடையாந் திருநெத்தானந் திருவாலவாயுடையாநும்**

4. **மிண்டங்குடையாந் நெத்தானந் திருப்பூவணமுடையானும் உள்ளிட்ட நகரத்தோம் இந்நாட்டு உடையார் திருநெற்குந்றமுடைய மஹாதேவற்க்கு நித்த நிமந்தங் காவேரி திருமஞ்சனம் ஆடி அருளுகைக்கு நாங்கள் தேவர் ஸ்ரீ ஹஸ்தத்திலேயே நீர்வார்த்து தர்ம்ம தான ப்ரமாணம் ப-**

5. **ண்ணிக் குடுத்த நிலமாவது எங்களூர் உத்தமசோழப் பேராற்றுக்கு தெற்கு உள்ள நிலத்தில் தெந்பாக்கெல்லை சிங்கந் வாய்க்காலுக்கு வடக்கும் கீழ்ப்பார்க்கெல்லை அலையூர் எல்லைப் பெருவழிக்கு மேக்கும் வடபார்க்கெல்லை தழுவக் குழைந்தாந் வாய்க்காலுக்கு தெற்-**

6. **க்கும் மீய்பாக்கெல்லை உடைய னம்பிப் பேரையர் உடையார்க்கு கொண்டு விட்ட நிலத்துக்கு கிழக்கும் ஆக இவ்விசைந்த பெருநாந்கெல்லையுள் நடுவுபட்ட நிலம் .. ஆக இந்நிலம் அரையும்**

7. தழுவக் குழைந்தாந் வாய்க்காலுக்கு வடக்கு புறணியில் மண்ணிலைய்க்கு விட்ட நிலம் கவா இ நிலம் ஒரு மா வரையும் ஆக நிலம் அரையே ஒரு மா வரையும் கைக் கொண்டு இறையிறுப் பாரின்றியே ஊருபியா வரு நிலமிகுதிக் குறைவுள்–

8. ளடங்க இந்நிலத்தில் மேநோக்கிந மரமும் கீணோக்கிய கிணறும் அகப்பட தம்மதாந ப்ரமாணம் பண்ணிக் குடுத்தோம் இத்திருநெற்குந்றமுடைய மஹாதேவர்க்கு வீரராஜேந்த்ரபுரத்து நகரத்தோரும் இந்நிலத்துக்கு இந்நாப்பத்தொ–

9. ந்பத்து வைகாசி மாஸத்து ஊர் கடமைக்கு நாங்கள் முட்டைபாடி உடையாந் ஆதித்தந் உய்யவந்தாநாந திருப்பதியத் தொண்டர் பக்கல் கொண்ட காசு உயரு இக்காசு இருபத்தைஞ்சும் கொண்டு இக்காசால் வந்த பலிசைக்கே இந்நில–

10. த்தால் வந்த அந்தராயத்துக்கும் எப்பேறப்பட்டதுக்கும் சந்திராதித்தவற் ஊரோமேய் இறுக்கக் கடவோமாக உபயங்கொண்டு இந்நிலமும் உபையமும் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளப்–

11. பெறுவாராகவும் இப்படி அவ்வக் காலங்களில் இவ்வூர் குடிமக்களேய் இந்த உபையஞ் செலுத்தக் கடவார்களாக இசைந்து ஆதிசண்டேஸ்வரர்க்கு இந்த தம்மதாநப்ரமாணமும் உபையமும் செய்துகுடு–

12. த்தோம் இவர்கள் பணிக்க இத்தந்ம்ம தாந ப்ரமாணமும் உபையமும் எழுதிநேந் இவ்வூர் மத்யஸ்தந் வீரராஜேந்த்ரபுரமுடையாந் சடகோபந் சக்கரபாணியேந் இவை எந்நெழுத்து இப்படிக்குப் பட்டமுடையாந் செம்பியந் ஆவூர் நாட்டு வேளா–

13. ன் எழுத்து இப்படிக்கு முட்டைபாடி உடையாந் ஆதித்தந் மாசறு சோதி எழுத்து இப்படிக்கு முட்டைபாடி உடையாந் ஆதித்தந் குந்றந் எழுத்து இப்படிக்கு நல்லாவூருடையாந் பஞ்சநதி திருச்சிற்றம்பலமுடையாந் எழுத்து இப்படிக்கு மேல் மங்கலமுடியாந் நெத்தானந் திருவாலவாய்

14. உடையாந் எழுத்து இப்படிக்கு மிண்டங்குடையாந் நெத்தானந் திருப்பூவணம் உடையாந் எழுத்து இப்படிக்கு வீராணக் குடையாந் எழுத்து புகழ் ஸ்ரீ மங்கலமுடையான் எழுத்து இப்படிக்கு நெடுங்குன்ற முடையாந் சங்கரந் திருச்சிற்றம்பலமுடையாந் எழுத்து.

**11:11**

**இடம்:** மேலது, கோபுரவாயில் உட்புற திண்ணைச்சுவர்

**காலம்:** *முதலாம் குலோத்துங்கன், யா.49=பொ.ஆ.1119*

**செய்தி:** *தியாகவல்லி வளநாட்டு பொய்கைநாட்டு வீரராஜேந்திரபுரத்து நகரசபை திருநெற்குன்றமுடைய மகாதேவர் கோயிலில் வைகாசித் திருநாளிலும் தைப்பூசத்திருநாளிலும் இறைவனைசேவிக்க வந்த அடியார்களுக்கு அமுது படைப்பதற்காக இவ்வூரிலிருந்த நாற்பத்தெண்ணாயிரவன் திருமடம் என்ற மடத்திற்கு மடப்புறமாக 7 மா நிலம் கொடுத்ததை இக்கல்வெட்டு விவரிக்கிறது. இம்மடம் விறகாவூருடையான் வேளான் நாயகன் என்பவரால் கட்டப்பட்டதாகும். இந்த உபயத்தை அந்தந்த காலங்களில் வாழும் இவ்வூர்க் குடிமக்களே கண்காணித்து நடத்த வேண்டுமெனவும் கொடையாளர் கேட்டுக் கொண்டுள்ளார்.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ புகழ்மாதுவிளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர் மகள் புணர உரிமையிற் சிறந்த மணமுடிசூடி மீநவர் நிலைகெட வில்ல-**

2. **வர் குலைதர ஏந மந்நவர் இரியலுற்றிழதர திக்கனைத்தும் சக்கரம் நடாத்தி வீரஸிங்ஹாஸநத்து உலகுடையாளொடும் வீற்றிருந்தருளி-**

3. **ய கோவிராஜகேசரிபந்மராந சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழதேவற்க்கு யாண்டு 49தாவது தியாகவல்லி வளநாட்டு பொய்கை நாட்டு வீரரா-**

4. **ஜேந்த்ரபுரத்து நகரத்துக்கு சமந்து பட்டமுடியான் செம்பியந் ஆவூர் நாட்டு வேளாநும் முட்டபாடி உடையாந் ஆதித்தன் மாசறு சோதியும் ஆதித்தன் குன்றநும் நல்-**

5. **லூர் உடையான் பஞ்சனதி திருச்சிற்றம்பலமுடையாநும் மேல்மங்கலம் உடையானும் நெத்தானந் திருவாலவாய் உடையாநும் மிண்டங் குடையாந் நெத்தானந் திருப்பூவணமு-**

6. **டையாநு முள்ளிட்ட நகரத்தோம் இன்நாட்டு உடையார் திருநெற்குன்றம் உடைய மஹாதேவர் வைகாசித் திருநாளிலும் தைப்பூசத்திருநாளிலும் சேவிக்க**

7. வந்த அடியார்களுக்கு விறகாவூர் உடையான் வேளாந் நாயகன் செய்வித்த நாற்பத்தெண்ணாயிரவந் திருமடத்திலேய் அமுது செய்தருளுகைக்கு மடப்புறம் ஆக ஆதிசண்டேஸ்வர தேவர்

8. போந்த பேராலடைத்த நிலமாவது இவ்வூர் நிலத்து உத்தம சோழப் பேராற்றுக்கு வடக்கு உலோகமாதேவி வதிக்கு கிழக்கு திரிபுவன சுந்தரவாய்க்காலுக்கு தெற்கு முதல் கண்ணா-

9. ற்று முதற்சதிரத்து நிலம் இந்நிலம் ஆறுமாவுக்கு கீழ்பாற் கெல்லை செம்பியன் ஆவூர் நாட்டு வேளாந் நிலத்துக்கேய் மேற்க்கும் தென்பாற்கெல்லை உத்தமசோழ பே-

10. ராற்றுக்கும் வடக்கும் மேபாற்கெல்லை முட்டபாடி உடையான் ஆதித்தன் மாசறு சோதி அடைகொண்ட நிலத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை அலையூர் எல்லைக்கு தெ-

11.. ற்கும் ஆக இவ்விசைத்த பெருநான் கெல்லை உள் நடுவுபட்ட நிலம் ... இந்நிலம் ஆறுமாவும் மிகுதிக் குறைவு உள்ளடங்கவும் கொலோத்துங்க

12. சோழர் மடப்புறத்துக்கு ஆக இவ்விசைத்த பெருநான் கெல்லையின் நடுவு உள்பட்ட திடல் உள்ப்பட நிலம் ... இந்நிலம் எழுமாவும்

13. ஆக சிலாசாசனம் பண்ணிக்குடுத்தோம் இந்நிலத்துக்கு அந்தராயத்துக்கும் விறகாவூர் உடையாந் வேளாந் நாயகந் பக்கல் கொண்ட காசு 12இக்கா-

14. சு பன்நிரண்டும் கொண்டு இக்காசால் வந்த பலிசைக்கும் இன்நிலத்தால் வந்த அந்தராயத்துக்கும் மற்றும் எப்பேர்ப் பட்டதுக்கும் ஸந்த்ராதித்தவற் இறு-

15. க்கக் கடவோமாக ஸம்மதித்து உபையங் கொண்டு இந்நிலமும் உபையமுங் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவாராகவும் அவ்வக் காலங்களில்

16. இவ்வூர்க்குடி மக்களேய் இவ்வூபையஞ் செலுத்தக் கடவர்களாகவும் ஆதிஸண்டே....

17. ணமும் உபயமும் செய்து குடுத்தோம் வீரராஜேந்த்ரபுரத்து நகரத்தோம் இவர்கள் பணி-

18. யாலும் எழுதிநேந் இவ்வூர் மத்யஸ்தந் வீரராஜேந்த்ரபுரமுடையாந் சடகோபந் சக்கரபாணியேந் இவை எந்நெழுத்து

## 11:12

**இடம்:** *மேலது,கோபுரவாயில் உட்புறம்*

**காலம்:** *விக்கிரம சோழன், யா.3=பொ.ஆ. 1121*

**செய்தி:** *துண்டுக் கல்வெட்டு. மன்னரின் மெய்க்கீர்த்தி, மற்றும் ஊர்ப்பெயர்.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ பூமாலை மிடைந்து ---------------**

2. **ஸிம்ஹாஸநத்து முக்கோக்கிழானடிகளோடு வீற்றிருந்தருளிய திரிபுவனச் சக்கரவந்திகள் ஸ்ரீ விக்கிரமசோழதேவர்க்கு யாண்டு 3ஆவது மேஷ நாயற்று தி-**

3. **யாகவல்லி வளநாட்டு பொய்கை நாட்டு ப்ரஹ்மதேயம் ஸ்ரீ மதுராந்தகச் சருப்பேதிமங்கலத்து வங்கிப்புறத்து தற்பரம் பொருள்பட்ட---------------**

## 11:13

**இடம்:** *மேலது, மகாமண்டப வடக்குச் சுவர்*

**காலம்:** *விக்கிரம சோழன், யா.13, பொ.ஆ.1131*

**செய்தி:** *துண்டுக்கல்வெட்டு.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ பூமாது புணர** (மெய்க்கீர்த்திப்பகுதி)

2. **-----------ஸ்ரீ விக்கிரமசோழ தேவர்க்கு யாண்டு13றாவது வடகரை திருபுவனமுழுதுடை வளநாட்டுப் பொய்கை நாட்டு ---------------**

## 11:14

**இடம்:** *மேலது, மகாமண்டப கிழக்குச் சுவர் உட்பக்கம்*

**காலம்:** *விக்கிரம சோழன், யா.14, பொ.ஆ.1132*

**செய்தி:** *மன்னரின் மெய்க்கீர்த்தி, ஆட்சியாண்டு, திருபுவன முழுதுடை வளநாடு, பொய்கைநாடு ஆகிய பெயர்களும் தைப்பூச விழா பற்றியக் குறிப்பும் உள்ளன.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ பூமாது புணர** (மெய்க்கீர்த்திப் பகுதி)

2. **விக்கிரமசோழ தேவர்க்கு யாண்டு14ஆவது திரிபுவந முழுதுடைவளநாட்டுப் பொய்கை நாட்டு ப்ரஹ்மதேயம் ஸ்ரீ மதுராந்கச் சதுர்வேதிமங்கலத்து இந்நாட்டுத்**

**11:15**

**இடம்:** மேலது, மகாமண்டப வடக்குச் சுவர்

**காலம்:** *விக்கிரமசோழர், யா. 15 =பொ.ஆ.1133*

**செய்தி:** திரிபுவனமுழுதுடை வளநாட்டுப் பொய்கை நாட்டுப் பிரம்மதேயம் மதுராந்தக சதுர்வேதிமங்கலத்து பெருங்குறி மகாசபையார் அவ்வூர் திருநெற்குன்றம் உடைய மகாதேவர்க்கு சபை விலையாக நிலம் விற்றுக் கொடுத்துள்ளார். அந்நிலங்கள் இப்பிரம்மதேயத்தின் தென்பிடாகை நென்மலியான தில்லைநாயக நல்லூர் கட்டளையிலும், ஆதிவிடங்கநல்லூர் கட்டளையிலும் இருந்தன.

1-3. **ஸ்வஸ்திஸ்ரீ பூமாதுபுணர (மெய்க்கீர்த்திப் பகுதி)**

4. **விக்கிரம சோழதேவற்கு யாண்டு 15ஆவது வடகரை திரிபுவன முழுதுடைவளநாட்டுப் பொய்கைநாட்டு**

5. **ப்ரஹ்மதேயம் ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறி மஹாஸபையோம் நம்மூர் மதுராந்தகந் மண்டபத்-----யும் பெற்ற திருவாதிரை நாள்**

6. **திருநெற்குந்றம் உடைய மஹாதேவர்க்கு நாங்கள் ஸபைவிலை விற்றுக்கு குடுத்த நிலம் ஆவது நம்மூர்த்தென்பிடாகை நென்மலி**

7. **யான தில்லை நாயக நல்லூர் கட்டளையில் நித்த விநோத வதிக்கு ங்-க்கு சோழ விச்சாதிர வாக்காலுக்கு வடசிறகு ஏழாம் கண்டத்து கிழக்கடைய -------------**

8. **பன்னிரண்டு மாவும் உட்பட ... மாவும் ஆதிவிடங்க நல்லூர் கட்டளையில் இத்தேவர் இறையிலி நிலத்துக்குதடிமாற்றாக இதன் மேற்க்கு ங்**

9. **மாவும் ஆக நிலம் தலைமாறான நிலம் மூன்றுமாவுக்கும் நிலம் ---- பார்க்கெல்லை ஏழாம் துண்டத்துக்கும் எட்டாம் துண்டத்துக்கும் மேற்க்கு**

10. **தெந்பார்க்கெல்லை சோழவிச்சாதிர வாக்காலுக்கு வடக்கும் கீழ்பாற்கெல்லை வங்கிப்புரத்து பாமடை நிலத்துக்கு ...க்கும்**

11. வடவாற் கெல்லை சீவக வாக்காலுக்கு வடக்கும் ஆக இவ்விசைத் பெருநான்கெல்லை உள் நடுவுபட்ட நிலம் மாவும் இங்கேய் மேட்டுவாய்

12. க்கால் வடசிறகு எட்டாம் சதிரத்து வடக்கடைய நிலம் .... ம் மாவும் இன்நிலம் நாலுமாவுக்கும் ... கீபாற் கெல்லை ஸ்ரீ கரணவதிக்கும் கோட்டை

13. யூர் சாத்தந் திருநீலக்கடந் நிலத்துக்கு மேற்க்கும் தெந்பாற்கெல்லை வங்கிப்புறத்து தற்பரம் பொருள் பட்டர் நிலத்துக்கு வடக்கும் மீபார்க்கெ

14. ல்லை ஏழாம் சதுரத்துக்கு ...க்கும் வடபாற்கெல்லை வங்கிப்புறத்து தற்பரம் பொருள் பட்டர் நிலத்துக்கு தெற்கும் ஆக இவ்விசைத்த பெ

15. ருநான்கெல்லை உள் நடுவுபட்ட ... நிலம் - மாவும் ஆக நிலம் .... மாவும் விற்றுக் குடுத்துக்கொள்

16. வதான இன்நாட்டு வீரராஜேந்த்ரபுரத்து இருக்கும் வெள்ளாளன் முட்டபாடி உடையான் ஆதித்தந் உய்யக்கொண்டாந் ஆந திருப்பதிய தொண்டந் இத்தேவர்க்கு யா-

17. ந்டு 8ஆவது சிவப்ரஹ்மணரில் தேவர்க்கந்மியும் தபஸ்யரில் ஸ்ரீ மாஹேஸ்வரக் கண்காணி செய்வாரும் இவ்விருவருங் கைக்கொண்டு கொண்ட-

18. மைக்கு ----------- (கல்வெட்டு மீதிப்பகுதி மீது சுண்ணாம்புப் பூச்சு மறைந்துள்ளது)

## 11:16

**இடம்:** மேலது, காசி விஸ்வநாதர் சன்னதி அர்த்தமண்டப வடக்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்

**காலம்:** இரண்டாம் இராசாதிராசன், *யா. 10=பொ.ஆ.1176*

**செய்தி:** திருநெற்குன்றம் உடையார் கோயிலுக்கு மதுராந்தகச்சதுர்வேதிமங்கலத்து ஆளும் கணத்தாருள் வல்லூர் நாராயணப்பட்டன் என்பவர் தனக்கு இவ்வூர் தென்பிடாகை இராஜகம்பீரபேராற்றுக்குத் தெற்கு நென்மலியான அழகிய சேமநல்லூர் கட்டளையில் இருந்த நிலத்தை விற்றுள்ளார். கல்வெட்டு பல இடங்களில் எழுதப்படாமலும் முற்றுப்பெறாமலும் உள்ளது.

1. **ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராஜாதிராஜ தேவற்கு யாண்டு பத்தாவது மீனனாயற்று அபரபக்ஷத்து சட்டியும் னாயற்றுக் கிழமையும் பெற்ற மூலத்தின்னாள் வடகரை**

2. **இராஜராஜ வளனாட்டு பொய்கையி னாட்டு பிரமதேயம் ஸ்ரீ மதுராந்தகச் சதுப்பேதிமங்கலத்து யாள்ளும் கணத்தாருள் வல்லூர் னாராயணபட்டன்னேன் இன்னாட்டு உடையார் திருநெற்குந்றமுடை**

3. **யார் கோயில் ஆதிசண்டேஸ்வரப்பிள்ளையாற்க்கு னாந் விற்றுக் குடுத்தனிலம்மாவது தெந்பிடாகை இராஜகெம்பீரபேராற்றுக்கு தெற்கு நென்மலியாந அழகிய சேமநல்லூர் கட்டளையில் நித்த வினோத வதிக்கும் கிழக்**

4. **கு சோழவிச்சாதிர வாக்கால் வடசிற்கு எ⁻ம் துண்டத்து மிகுதிக் குறை --------(எழுதப்படவில்லை)**

5. **லைதிடல்லுள்பட வடக்கு மீபாற்கெல்லை கொள்கின்றான் நிலத்துக்கு கிழக்கு** (முற்றுப்பெறவில்லை.)

**11:17**

**இடம்:** *மேலது, கருவறை தெற்கு, கிழக்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *இரண்டாம் இராசாதிராசன், யா. 13= பொ.ஆ.1179*

**செய்தி:** *இரண்டாம் இராசாதிராசன் ஈழமும் மதிரையும் கொண்டருளின பெருமாள் என்று குறிப்பிடப்படுகிறார். ஸ்ரீமதுராந்தகச்சதுர்வேதிமங்கலத்து உடையார் திருப்பாதாளீஸ்வரமுடையாநாயனார் கோயில் என்று இக்கோயில் அழைக்கப்படுகிறது. இக்கோயில் 30 வட்டத்துக் காணியுடைய சிவப்பிராமணர்கள் இக்கோயில் பண்டாரத்தில் 1714 காசுகள் பெற்றுக் கொண்டு விளக்குக்கு எரிக்க உபயதீட்டுக் கொடுத்துள்ளனர். இச்சிவப்பிராமணர்களின் சிலர் ஏதோ காரணத்தால் ஊரைவிட்டுப்போய் திரும்பவும் வந்து குடியேறாமல் விட்டதால் அவர்கள் செலுத்தவேண்டிய விளக்கு எரிக்கும் பொறுப்பையும் சேர்த்து தற்போதுள்ள சிவப்பிராமணர்கள் எரிக்க ஒப்புக்கொண்டனர்.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஈழமும் மருதையும் கொண்டருளின பெருமாள் ஸ்ரீ ஈராஜாதராஜதேவற்கு யாண்டு 13றாவது மேஷநாயற்று அபரக்ஷத்து த்வாதஸியும் வியாழக்**

கிழமையும் பெற்ற பூரட்டாதி நாள் வடகரை ராஜராஜவளநாட்டு பொய்கைநாட்டு

2. ஸ்ரீ மதுராந்தக ஸதுர்வேதிமங்கலத்து உடையார் திருப்பாதாளீஸ்வரமுடைய நாயநார் கோயிலில் ஸ்ரீ காரியம் பொந்நம்பல நம்பிக்கும் ஆண்டார் அரைய தேவாண்டாற்கும் தேவர்கன்மி திருச்சிற்றம்பல பட்டநுக்கும் கோயில் கணக்கு மூவனூருடையாநுக்கும் இக்-

3. கோயிலில் முப்பது வட்டத்துக்காணியுடைய சிவப்பிராமணரோம் உபையத் தீட்டுக் குடுத்த பரிசாவது எங்களிலே சில சிவப்ராமணர் குடிபோய் அவர்களின் நாள் வரையும் புகிராதே நிற்கையில் இவர்கள் நாளோகரியால் வந்த உபையம் மேற்றி நிலை நிந்றவர் எங்களுக்கே செலுத்த

4. வேண்டுகையில் லிவகள்ளுடையத் தீட்டுக்கு நாங்கள் ஸ்ரீ பண்டாரத்தில் கொண்டு கடவோமாந காசு ஆயிரத்தெழுந்நூற்று ஒருபத்து நாலு இக்காசு ஆயிரத்தெழு நூற்றொருபத்து நாலுங் கொண்டு இக்கோயிலுக்குப் பதிந்மூந்றாவது ஸித்திரை விஷு முதல் இரண்டு திருநுந்தாவிளக்கும்

5. ---------று ஸந்திரதித்தவரையும் எரிக்கக் கடவோமாகக் கைக் கொண்டு காடவோமாந காசு ... வொன்றுக்கும் காசு பதின் மூந்றரையே யரைக்காலாக இப்பொருளால் வந்த நூற்றிருபத்தெட்டு--------ம் நாலும் ஆக வுரு-

6. நூற்று முப்பத்திரண்டும் இப்பசு நூற்று முப்பத்திரண்டுக்கும் பசுவொந்ருக்கு நெய் இருநாழி மூவுழக்கே நாற்செவுட்டுக்கும் வந்த நாள் முந்நூற்றறு பத்தஞ்சுக்கும் நெய் ...... இந்நெய் முந்நூற்றறு பத்தஞ் ஞாழியாக வந்த நெய்க்குப் பசு நூற்று முப்பத்திரண்டுங்கோ

7. ண்டு ஸந்த்ராதித்தவற் திருநுந்தா விளக்கு இரண்டு ஸந்தி விளக்கு பதிநாறும் செலுத்தக் கடவோமாக இப்படி கல்வெட்டிக் குடுத்தோம் இக்கோயிலில் முப்பது வட்டத்துக் காணியுடைய சிவப்பிராமணரோம் இவர்கள் சொல்ல இ-

8. வ்வுபயத் தீட்டெழுதிநேந் மூவலூருடையாந் கணக்குக் குறியாமங்கலமுடையாநேந் இவை எந்நெழுத்து வீரஸுந்தரபட்டந்நேந் எழுத்து திருச்சிற்றம்பலபட்டந் எழுத்து தெக்ஷணமூர்த்தி பட்டந் எழுத்து இப்படிக்கி இவை பொய்யாத நாவந் எழுத்து.

## 11:18

**இடம்:** மேலது, கருவறை வடக்குச் சுவர்

**காலம்:** இரண்டாம் இராசாதிராசன், யா. *13*=பொ.ஆ.*1179*

**செய்தி:** இக்கோயில் சிவப்பிராமணர்கள் திருநெற்குன்ற முடையார் கோயில் அதிகாரிகளுக்கு உபயத்தீட்டுக் கொடுத்துள்ளனர். அதன்படி கோயில் பண்டாரத்தில் *438* கால் காசு பெற்றுக் கொண்டு அதற்கு பலிசையாக *32* பசுக்கள் கொண்டு *91* நாழி உழக்கு நெய் ஒரு ஆண்டுக்கு செலுத்தி விளக்கு எரிக்க ஒப்புக் கொண்டது.

1. **ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள்**
2. **ஈழமும் மதுரையும் கொண்டருளிய**
3. **பெருமாள் ஸ்ரீ ராஜதராஜதேவற்கு யா**
4. **ண்டு பதின் மூன்றாவது மேஷ நாயற்று அ-**
5. **பரபக்ஷத்துத்வாதஸியும் வியாழக்கிழ-**
6. **மையும் பெற்ற பூரட்டாதி நாள் வடகரை இராஜ-**
7. **ராஜ வளநாட்டு பொய்கை நாட்டு உடையார்**
8. **திருநெற்குன்ற முடையார் கோயிலில் ஸ்ரீகாரிய-**
9. **ம் பேழைக் குடையாந் இரார‍ாதேவற்கும் ஸ்ரீமா-**
10. **ஹேஸ்வர கண்காணி அணுக்க நம்பிக்கும் தேவகன்மி வீ-**
11. **ரசுந்தரபட்டனுக்கும் கோயிற் கணக்கு மூவலூர்**
12. **டையான் தேவனுக்கும் இக்கோயில் முப்பது வட்டத்-**
13. **து காணி உடைய சிவப் பிராமணரோம் உபயத்தீ-**
14. **ட்டுக் குடுத்த பரிசாவது இக்கோயில் முப்பது வட்ட-**
15. **த்து காணி உடைய சிவப்பிராமனர் எங்களிலே சி-**
16. **ல சிவப்பிராமணர் குடிபோய் இன்னாள் வரையுங்**
17. **குடி புகுதாதே நிற்கையில் இவர்கள் நாளோகரியால்**
18. **உபயம் ஏற்றி நிலை நிந்ற எங்களுக்கே திருப்படிமா-**
19. **ற்று செலுத்த வேண்டுகையில் இந்த உபையத் தீ-**

20. ட்டுக்கு நாங்கள் ஸ்ரீபண்டாரத்துக் கொண்டு கடமை

21. யான காசு 4381/4 இக்காசு னாநூற்று முப்பத்-

22. தெட்டேகாலும் கொண்டு இக்கோயிலுக்கு பதின்மூன்-

23. றாவது சித்திரை விஷு முதல் ஒரு திருநுன்தா விளக்கு எரிக்க

24. கடவோமாக கொண்டு கடவ காசு 4381/4 இ-

25. க்காசு நானூற்று முப்பத் தெட்டே காலுக்கும் பசு ஒ-

26. ன்றுக்கு -----

27. -----

28. எங்களால் கடவ பசு முப்பத் திரண்டும்

29. இஷபம் ஒந்றும் ஆக உரு 33 இவ்

30. ------

31. ய் இருநாழி மூவுழக்கே நாள் செவுடாக வந்த

32. நாள் முந்நூற்றறு பத்தைஞ்சுக்கு நெய்

33. தொண்ணூற்றொரு நாழி உழக்காக வந்த நெய்

34. ---கொண்டு ---

35. ---இப்படிக்கு கல்லிலும் செம்பிலும் வெ

36. ட்டிக் கொள்வதாகவும் -----

37. உபையதீட்டுக் குடுத்

38. தோம் இக்கோயில் முப்பது வட்டத்துக் காணி

39. உடைய சிவப்பிராமமணரோம் இவர்கள் சொல்ல

40. இவ்வுபயத் தீட்டெழுதிநேன் மூவலூருடையாந்களுக்கு குறி

41. -----மங்கலமுடையான்

42. -----(சில இடங்களில் சிதைந்துள்ளது.)

## 11:19

**இடம்:** *மேலது, முன்மண்டப மேற்குச் சுவர்*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன், யா.38=பொ.ஆ1216*

**செய்தி:** கல்வெட்டு பல இடங்களில் பொரிந்து போயுள்ளது. எனவே கல்வெட்டை முழுமையாக படிக்க முடியவில்லை.

**11:20**

**இடம்:** மேலது, கோபுர வடக்குச் சுவர்

**காலம்:** மூன்றாம் இராசேந்திரன், யா. *31=பொ.ஆ.1277*

**செய்தி:** திருநெற்குன்றமுடையார் கோயிலுக்கு 10 கழஞ்சு திருமேற்பூச்சு மற்றும் சிதாரி உள்ளிட்ட வாசனை திரவியங்கள் வழங்கி பூஜை நடத்த வீரராஜேந்திரபுரத்து நகரத்தார்கள் தங்கம் நகரத்தில் விற்கும் பொருட்களான அளப்பன, நிறுப்பன, முகப்பன, தறி இறை, தட்டாரப்பாட்டம், செக்காயம், மீன் ஆயம் உள்ளிட்ட ஆய வர்க்கங்கள் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொடுத்துள்ளனர்.

1 **.ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்தி கோநேரின்மை கொண்டா**

2. **ன் இறாசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு 31வது கும்ப நாயற்று**

3. **பூறுவ பக்ஷத்து திறுதியையும் பெற்ற உ ----------நாள் விக்கிரம**

4. **சோழவளநாட்டு பொய்கை நாட்டு உடையார் திருநெற்குந்ற முடையார்**

5. **-----நகரமும் வீரரா**

6. **சேந்திரபுரத்து -----**

7. **ளப்பனவும் நிறுப்பனவும் -------**

8. **பனவும் தறி இறை தட்டாரப்பாட்டம் செக்காயமும் மீனாயமும் -----**

9. **யம் உள்ளிட்ட ஆயவற்கங்களும் இந்நாயனாற்கு முத**

10. **ற் செல்லும் நிவந்தங்களுக்கு இறையிலியாக நாள் ஒன்றுக்கு பதிந் க**

11. **ழஞ்சு திருமேற்பூச்சும் ---**

12. **ம் உழக்கும் சிதாரி ----(மீதிப்பகுதி படிக்க முடியவில்லை)**

**11:21**

**இடம் :** மேலது, முன்மண்டப உட்சுவர்

**காலம் :** கிருஷ்ணதேவராயர், சகம், *1439*, = பொ.ஆ.*1517*

**செய்தி:** இப்பகுதியை ஆட்சிசெய்த பெத்தப்ப நாயக்கர் என்பவர் இக்கோயில் பூஜை வழிபாடுக்கு திருநெற்குன்றம் ஊருக்குப் பிடாகையாக இருந்த நென்மலி நத்தம் என்ற ஊர் முழுவதையும் வழங்கியுள்ளார். அவ்வூர் நிலம் இராசவிபாடன் என்ற கோலால் அளக்கப்பட்டது.

1. **ஸுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ மன் மஹாமண்டலேஸ்வ**
2. **ரன் க்ருஷ்ணதேவ மஹாராயர் ப்ருதிராஜ்யம் பண்ணி**
3. **அருளா நின்ற ஸ்காப்தம் 1439ன் மேல் செல்**
4. **-----**
5. **-----**
6. **இராசராசவள நாட்டு**
7. **பொய்கை நாட்டு ஸ்ரீமதுராந்கச் சதுர்வேதிமங்கலம் ஆன**
8. **ஆலம்பாக்கன் நாட்டு திருநெற்குன்றம் நாயனாற் நெற்குன்றம் உடைய**
9. **நயினாற்கு க்ருஷ்ணய நாயக்கர் குமரர் பெத்தப்ப நாயக்கர் தற்ம**
10. **மாக பூசைக்கு சேத்த திருநெற்குன்றம் பிடாகை ஆந நென்**
11. **மலி நத்தம் ஆட்டை குழிப்பள்ளம் உள்ப்பட நான்கு எல்லைக்கு உள்பட்ட**
12. **நன்செய் புஞ்செய் நத்தம் செய்த்தலைத்திடர் உள்ப்படச் சேத்த**
13. **இராசவிபாடன் ரு உரு இந்த நிலம் இரண்டரையும் இதினுள் உண்டான**
14. **மருவாதியும் சந்திராதித்தவரையும் சறுவமானியம் ஆக ------- கொள்ளவும்**
15. **-----**
16. **காராம்பசுவையும் தந் குருவையும் கொன்**
17. **றபாவத்திலே போக கடவிதாகவும்**
18. **இவை. ... .... சோமதேவன் .... ... எழுத்து.**

# 12. மங்காநல்லூர் கல்வெட்டுகள்

**கி.ஸ்ரீ தரன்,சென்னை**

## 12:1

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசிவட்டம், மங்காநல்லூர் சிவன் கோயில் தனிக்கல்

**காலம்:** ராஜாதிராஜன், யா.4 = பொ.ஆ.1018-1056

**செய்தி:** முற்றுப்பெறாத கல்வெட்டு. வெண்குன்றக்கோட்டம் மருதாடு நாடு மங்கல நல்லூரிலுள்ள திருநாகீஸ்வரம் கோயில் பற்றி குறிக்கப்பட்டுள்ளது.

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவந சக்கரவத்-**
2. **திகள் [ஸ்ரீ] ராஜாதி$_3$ராஜ தேவர்க்கு**
3. **[யா]ண்டு [4] வது ஜெயங்கொண்-**
4. **ட சோழ மண்டலத்து வெண்குன்-**
5. **றக் கோட்டத்து மருதாடு நாட்டு ம-**
6. **ங்கல நல்லூர் உடையார் திருவாகீ$_3$-**
7. **ஸ்வரமுடையார் .....வடக்கில்**
8. **......மகன் ஊர**

9-12. **......**



## 12:2

**இடம்:** மேலது

**காலம்:** முதலாம் குலோத்துங்கன், யா.9=பொ.ஆ.1079

**செய்தி:** கோவிலுக்கு சந்தி விளக்கு அளித்தமை



1. ஸ்வஸ்தி ஸ்ரீ
2. குலோத்துங்க-
3. க சோழ தேவற்-
4. கு யாண்டு 9 ஆ-
5. வது வெண்குன்ற
6. க்கோட்டத்து மரு-
7. தாடு நாட்டு மங்க
8. ல நல்லூர் தேவற்
9. [வாகீஸ்ரீசுரமுடை[யா]-
10. [ர்க்கு]இவ்வூர் வரகூ-
11. ந அருமொழி அருளா[ன்]
12. ந் வைத்த சந்தி விள-
13. க்கு ஒன்றுக்கு யிக்கோ[யி]-
14. ற்[சிவ] ப்பிராமண ஒரா
15. க . . ணை பட்டனு[ம்]
16. க... நாயக பட்டனும்
17. கைக்[கொ]ண்ட பொங்கழ[ஞ்]
18. ச[ரை]க்கு சந்திவிள[க்கு]
19. ஒந்று சந்திராதித்தவ-
20. ற்

## 12:3

**இடம்:** *மேலது*

**காலம்:** *இராஜராஜன்-III, யா.5 வது= பொ.ஆ.1221*

**செய்தி:** *சந்தி விளக்கு அளித்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன ச-**
2. **க்கரவத்தி இரா(ரா) தேவற்**
3. **க்கு யாண்டு 5ஆவ-**
4. **து வெண்குன்ற கோ-**
5. **ட்டத்து மருதாடு நாட்-**
6. **டு மங்கல நல்லூர்**
7. **ர் திருவக்கீஸ்வரமுடை-**
8. **ய மகாதேவற்-**
9. **கு மோ..[ஈ] சந்நான**
10. **அழியோ நிலை[ய]ந் வி-**
11. **ட்ட சந்தி விளக்கு ஒ-**
12. **ந்றுக்கு கைக் கொ[ண்ட]**
13. **பசு மூந்றுங் கை[க்]**
14. **கொண்டு எரிக்க்க**
15. **ட வோம் இக்கோயில்**
16. **[கா]ணி உடைய சிவ**
17. **பிராமணரோம்**



# 13. கீழ் சேவூர் கல்வெட்டுகள்

சி.வீரராகவன், வீ.மங்கையர்கரசி,விழுப்புரம்

## 13:1

**இடம்:** *விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம், கீழ் சேவூர் சிவன் கோவில் கருவறை,மேற்கு அதிட்டானம்*

**காலம்:** *இரண்டாம் இராஜதிராஜன்,யா.7 =பொ.ஆ.1170*

**செய்தி:** *செங்கேணி அம்மைப்பனனான எதிரிலி சோழச்சம் புவராயன் கோவிலின் திருப்பணிக்கு வரிவருவாயை அளித்தமை.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவற்குயாண்டு ஏழாவது ஜயங்கொண்ட சோழமண்டலத்துச் சேவூரான சீகரண நல்லூரான உடையார்த் திருவகத்தீஸ்வரமுடையாற்குச் செங்கேணி அம்மையப்பனாக சம்புவராயனான இத்தேவற்கு திருப்பணிக்கு னாந் விட்ட ஆயம் தேவ தானத்தில்**

2. **பாழகாவலுமான காணி.... மாப் பதக்கும் வெட்டி அரிமுக்கையும் முள்ளபடி குடியிருப்பும் இவ்வூரார் கொல்லைக் கடமையும் மற்றும் பல ஆயங்களும் விட்டேன். செங்கேணி அம்மையப்பனாக எதிரிலி சோழச் சம்புராயன்-**

3. **னேந் இத்தன்மம் இறக்குவாந் கெங்கையிடை குமரியிடைக் கோவதைப் பண்ணினான் பாவங் கொள்வாந்**

## 13:2

**இடம்:** *மேலது, கருவறை மேற்குக் குமுதம்*

**காலம்:** *மேலது,யா.7=பொ.ஆ.1170*

**செய்தி:** *சேவூரான ஸ்ரீகரணநல்லூரிலுள்ள கோயிலுக்கு பத்துவேலி நிலம் அளித்தமை*

1. **ஸ்வஸ்தி திரிபுவன சக்கரவத்தின் கோநேரின்மேல் கொண்டான் ஜெயங்கொண்ட சோழமண்டலத்து ஓய்மா நாடான விஜயராஜேந்திர வளநாட்டுச் சேவூரான ஸ்ரீகரணநல்லூர் திருவகத்தீஸ்வர முடையார் கோயிலில் தேவகன்மிக்கும் ஸ்ரீமஹேஸ்வர கண்காணி செ-**

2. **ய்வார்களுக்கும் ஸ்ரீகாரியம் இத்தேவற்கு வேண்டும் நிமந்தகளுக்கு**

இறுப்பதாக இவ்வூர்ப் பிடாகை புத்தேரியிலே பதிற்று வேலி நிலம் தேவதான இறையிலியாக இடம்பெற வேணுமென்று எதிரிலி சோழச் சம்புவராஜன் நமக்குச் சொல்லி காட்டினாவாறே

3. இவ்வூரிலே பதிற்று வேலி நிலம் ஏழாவது முதல் தேவதானம் இறையிலியாக இட்டு வரியிலாரும் வரிக் கூறு செய்வார்களுக்கும் எழுத்திட்ட உள் தரச் சொன்னோம் இந்நிலம் இயாண்டு ஏழாவது முதல் தேவதானம் இறையிலியாகக் கைக்கொண்டுத் தேவற்கு வேண்டும் நிமந்த.

4. ஞ் செலுத்தப் பண்ணுக எழுதிநான் திருமந்திர வோலை இராசேந்திர சிங்க வேளாலன் இவை சிங்களராயன் எழுத்து இவை நீலங்கரையாந் எழுத்து இவை இராஜேந்திர சோழக் களப்பாளராயன் எழுத்து இவை வானாதராயன் எழுத்து இவை

5. சித்தராயன் எழுத்து

## 13:3

**இடம்:** *மேலது,முக மண்டபதெற்கு முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா.4= பொ.ஆ.1137*

**செய்தி:** *சந்தி விளக்கு எரிக்க தேவன்...பெற்றான் என்பவர் கொடை அளித்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு நாலாவது ஜெயங்கொண்ட மண்டலச் ஓய்மா நாடான விஜயராஜேந்திர வளநாட்டு சேவூர் நாட்டுச் சேவூரான சீகரண நல்லூர் உடையார்

2. திருவகத்தீஸ்வர முடையார் கோயிலில் காணியுடைய சிவபிராணமந் பாரத்துவாசித் தமையாந்முடையாந் ஆட்கொண்ட நாயக பட்டநேந் உபையங் கைக்கொண்டபடி இந்நாயனாற்கு .... தேவன் பெற்றாந் வைத்த சந்தி-

3. விளக்கு ஒன்றுக்கு நான் கைக்கொண்ட பசு நாலு இப்பசு நாலுங் கைக்கொண்டு இச்சந்தி விளக்கொன்று சந்திராதித்தவரை செலுத்த கடவேந் நாங்கள் சம்மதித்து உபையங் கைக்கொண்டேன்...... நாயக பட்டனேன் இவை.

4. என் எழுத்து

## 13:4

**இடம்:** *மேலது, முக மண்டபகிழக்கு அதிட்டானம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா.4= பொ.ஆ. 1137*

**செய்தி:** *சந்தி விளக்கெரிக்க விழுப்பரை நாட்டுக் கழும பற்று பல்லவ மங்கலங்கிழான் மாந்தை பிச்சனும் காரியும்இம்பனும் நான்கு பசுக்களை கொடையாக கொடுத்தமை.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு நாலாவது ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஓய்மா நாடான விஜையராஜேந்திர வள நாட்டுச் சேவூரான சீ கரணநல்லலூர் உடையார் திருவகத்திஸ்வரமுடைய**

2. **கோயிற் உண்ணாழிகை சபையோம் உடையங் கொண்ட படி இம்மண்டலத்து விழுப்பரைய நாட்டுக் கழும பற்று பல்லவ மங்கலங்கிழாங் மாந்தை பிச்சனும்இ காரியும் நம்பனும் இம்முவரும் இந்நாயனார்க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்றுக்கும் விட்ட பசு நாலுங்கைக் கொண்டு சந்திராதித்த --**

3. **விற் சிவபிராமமணரோம் இது பந்மாஹேஸ்வர ரகைஷ**

## 13:5

**இடம்:** *மேலது,முக மண்டப நுழைவாயில் இடதுபுற அதிட்டானம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன் யா.4 = பொ.ஆ.1137*

**செய்தி:** *சந்தி விளக்கு எரிக்க நான்கு பசுக்கள் கொடுத்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு நாலாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஓய்மாநாடான விஜையராஜேந்திர வள நாட்டுச் சேவூரான**

2. **சீ கரண நல்லூர் உடையார் திருவகத்தீஸ்வர முடையார் கோயிலிற் காணியுடைய சிவபிராமணந் பரத்துவாஜி திருமயான முடையயாந் ஆள்க் கொண்ட நாயக பட்டனேந் உபையங் கைக்கொண்ட படி**

3. **இம்மண்டலத்துக் களத்தூர் கோட்டத்து வலிவல நாட்டு வைவழுதூற் பாக்கமுடையார் சிங்க குமர இந்நாயனாற்கு நாந் வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்குவிட்ட பசு நாலு நாலுங் கை-**

4. **க் கொண்டு இச்சந்தி விளக்குகொன்றுஞ் சந்திராதித்தவரை செலுத்த கடவேநாகச் சம்மதித்தேந் பரத்துவாஜி திருமயாநமுடையாந் ஆள்க் கொண்ட நாயக பட்டனேன் இது என் எழுத்து**

## 13:6

**இடம்:** *மேலது,முக மண்டப கிழக்கு முப்பட்டை குமுதம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா.4=பொ.ஆ.1137*

**செய்தி:** *சந்தி விளக்கு எரிக்க பசு நான்கு கொடுத்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு நாலாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஓய்மானாடான விஜையராஜேந்திர வளநாட்டு சேவூர் நாட்டு சே-**

2. **வூரான சீ கரண நல்லூர் உடையார் திருவகத்தீஸ்வர முடையார் கோயிலின் காணிவுடைய சிவபிராமணந் கௌதமந் ஆடவலாந் திருச்சிற்றம்பல முடையாந் பட்டநேந் உபயங் கைக் கொண்டபடி**

3. **இவ்வூரியிருக்கும் சிற்றம்பல முடையான் அருளாள பட்டன் இன்னாயனாருக்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்கு கைக் கொண்ட பசு நாலு நாலுங்கைக் கொண்டு இச்சந்தி விளக்ககொன்று சந்திராதித்தவரை எரிக்க கடவேன் என-**

4. **ச் சம்மதித்தேன் கௌதமன் ஆடவலான் திருச்சிற்றம்பல முடையான் பட்டனேன் இவை எழுத்து.**

## 13:7

**இடம்:** *மேலது,முக மண்டபக் கிழக்கு அதிஸ்டானம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா.5=பொ.ஆ.1138*

**செய்தி:** *சந்தி விளக்கு எரிக்க நான்கு பசுக்களை கொடை அளித்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 5 வது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து**

**ஒய்மானாடன விஜையராஜேந்திர வள நாட்டு சேவூரான சீ கரண நல்லூர் உடையார் திருவகத்தீஸ்வரமுடையார் கோ-**

2. **யிலிற் காணியுடைய சிவபிராமணரோம் உபையங் கொண்ட படி இவ்வூர்க் காணி உடைய சாத்தந்தை பெரியான் அருளாளனும் பெரியான் மலையனும் இவ்விருவரும் இந்நாயனாவுக்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்கு விட்ட பசு நாலுங் கைக்கொண்டு சந்திராதித்தவரை செலுத்தக் கடவோமா-**

3. **னோம் இக்கோயிற் சிவபிராமணரோம் இது பன்மாஹேஸ்வர ரக்ஷை**

## 13:8

**இடம்:** *மேலது, முக மண்டப கிழக்கு முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா. 5 = பொ.ஆ.1138*

**செய்தி:** *சந்தி விளக் கெரிக்க நான்கு பசுக்கள் கொடையளித்தமை.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு அஞ்சாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஒய்மா நாடாக விஜையராஜேந்திர வளநாட்டுச் சேவூர் நாட்டு சேவூரான சிகரண நல்லூர் உடையார் திருவகத்தீஸ்வர முடையார் கோயிலிற் திரு உண்ணாழிகை ஸபையோம் உபையங்**

2. **கைக் கொண்டபடி புரட்டாசி சந்திக்கு இந்நாயனார்க்கு இவ்வூர்** …… **விளக்கு ஒன்றுக்கு விட்ட பசு நாலுங்கைக் கொண்டு வைத்த விளக்கு சந்திராதித்தவரை செலுத்தக் கடவோமாக உபையங் கைக் கொண்டோம் இக்கோயில் உண்ணாழிகை சபை யோம்.**

3. **இது பன் மாஹேஸ்வர ரக்ஷை**

## 13:9

**இடம்:** *மேலது,முக மண்டபக் கிழக்குப்பட்டி*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா. 9 =பொ.ஆ. 1142*

**செய்தி:** *சந்தி விளக்கு ஒன்று எரிக்க பெருமண்டைச் சாத்தந்தை பிச்சன் அமுதன் என்பான் உண்ணாழிகை சபையாரிடம் நான்கு பசுகள் கொடுத்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ஒன்பதாவது சேவூரான ஸ்ரீகரண நல்லூர்**

**உடையார் திருவகத்தீஸ்வர முடையார் கோயிற் திரு உண்ணாழிகை ஸபையோம் உபையங் கொண்ட படியாவது பெருமண்டைச் சாத்தந்தை பிச்சன் அமுதன் இந்நாயனார்க்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்கு நாங்கள் கைக் கொண்ட பசு நாலு இப்பசு நாலுங்கைக் கொ.**

2. **ண்டு இவ்விளக்கு ஒன்றும் சந்திராதித்தவரை செலுத்தக் கடவோமாக ஸம்மதித்து உபையாங் கொண்டோம் இக்கோயிலிற் திருவுண்ணாழிகை சபையோம்**

## 13:10

**இடம்:** *முக மண்டப நுழைவு வாயில் இடதுபுறப்பட்டி*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன்,யா.14 = பொ.ஆ.1147*

**செய்தி:** *முற்றுபெறாத கல்வெட்டு*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு பதிந்நாலாவது ஜயங்கொண்ட சோழ மண்ட**

2. **லத்து ஒய்மா நாடான விஜயராஜேந்திர வள நாட்டு சேவூரான ஸ்ரீ கரண நல்லூர் உடையார் திருவகத்தீஸ்வரமுடையார்கோயில் இவ்வூர் மண........**

## 13:11

**இடம்:** *முக மண்டப தெற்கு அதிட்டானம்*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜன், யா.5 =பொ.ஆ.1221*

**செய்தி:** கோயிலில் விளக்கு எரிக்க பசுக்கள் கொடையாக அளித்தமை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராஜராஜ தேவற்கு யாண்டு ஐஞ்சாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஒய்மானாடான விஜையராஜேந்திர வளநாட்டு சேவூரான சீகரண நல்லூர் உடையார்**

2. **திருவகத்தீஸ்வர முடையார் கோயிலிற் காணிஉடைய சிவப் பிராமணநரில் ஆடவல்லான் திருச்சடைய முடையார் ஆட்கொண்டானான இப்பட்டனும் இவ்விருவரோம் கைக்கொண்டானான இவ்வூர் கிளியூர்கிழவந் சேவூழான் ஆலைத் திருமறைக்காடு**

3. **தேவந் இந்நாயனாற்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்கு விட்ட பசு நாலுங்கைக் கொண்டு சந்திராதித்தவரை செலுத்தக் கடவோமாக உடையங் கொண்டோம் இக்கோயிலில் சிவப்பிராமணர் இவ்விருவரோம் இது**

4. **பந்மாஹேஸ்வர ரகைஷ**

## 13:12

**இடம்:** *மேலது,கருவறை தெற்கு அதிட்டானம்*

**காலம்:** *பொ.ஆ.13ஆம் நூ*

**செய்தி:** *பாடல் கல்வெட்டு . பூசைத் திருப்பணிக்காக திருமடை வளாகத்திலுள்ள மனை ஒன்றினை மூன்று பணத்திற்கு ஒற்றி வைத்தமை*

1. **ஆதிசண்டேசு எல்லை தாபரம் சூழ வய்யகத்து கணம சுரனக்கும் ஆராயப் பண்டே அறம் செய்தான்|செய்தான் அறம் காத்தான் பாதம்திறம்பாமல் சேனன் மேல் வைய்த்து நாயனார் திருவகத்தீஸ்வரமுடைய நாயனார் திருமடை வளாகம் மனை ஒன்றுக்கு விலை நீற்செய்த இப்பணம் மூன்று**

2. **விலையாவதாகவும் இம்மனை விற்று ஒற்றிவைத்து கொளக் கடவார்களாகவும் இப்பணம் மூன்றும் பூசைத் திருப்பணிக்கு**

## 13:13

**இடம்:** *மேலது, கருவறை தெற்குக்குமுதம்*

**காலம்:** *வீரகம்பண்ண உடையார், சகம்-1360=பொ.ஆ.1438*

**செய்தி:** *திருவகவத்தீஸ்வர முடையார்க்கு தறி, நூலாயம் ,காணிக்கை, செக்கிறை, ஆகியவற்றால் வரும் வரி வருவாயும், நஞ்சை புஞ்சையால் வரும் பணம் ஐந்தும் கொண்டு பூசை , திருப்பணி செய்தமை.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ மன்மஹா மண்டலீஸ்ரன் ராய விபாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் பூர்வ பக்ஷத்து சமுத்திரபதி மூவராய . . . . . ஸ்ரீ வீரகம்பண்ண உடையார் . . . . .ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஒய்மா நாட்டு விசையராஜேந்திர சோழ வளநாட்டு சேவூரான ஸ்ரீ கரண நல்லூர் உடையார்க்கு திருவகவத்தீஸ்சுவரமுடைய நாயனார்க்கு திருமடை வளம் பூறுபத்தி உள்ள நான்கெல்லைக்கு முட்பட்ட நிலத்தில் குடியிருக்கும் செட்டியரே கைக்கோளர்**

2. **வீரகம்பண்ணாரு சகாப்தம் 1360 மேல் செல்லா நின்ற ரத்தாக்ஷி வருஷம் 13 நாயிற்று அமரபக்ஷத்து . . . . . கார்த்தியுதியுமுடைய பெற்ற ஆநிமுத்து நாள் வொளியா மற்றும் இருக்கும் மகாசாப . . . . சில் பணம் பெற கடமை தறிகடமை நூலாயம் காணிக்கை எப்பேற்பட்ட உபாதியும் உளிட்ட கடவ செக்கிறை எண்ணை ஒன்றுக்கு கொள்ள நாங்கள் செய்த கடமை நஞ்சை புஞ்சை ஒன்றுக்கு பணம் ஐஞ்சும் கொள்ள**

3. **க்கடவது இப்பண[ம்] ஐந்தும் இன்னாயனாற்கு பூசை திருப்பணிக்கு கொடுத்தேன்.**

## 13:14

**இடம்:** *மேலது, அர்த்த மண்டப தெற்குக் குமுதம்*

**காலம்:** *விஜயநகர, பொ.ஆ.15-16ஆம் நூ*

**செய்தி:** *கோயிலுக்கு விளக்கெரிக்க மானியம் கொடுத்தமை.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ மண்மகா மண்டலீசுரர் அஞ்சாது கண்ட கட்டாரி சாளுவ . . . . . யித்திர மங்கு தேவமகாராசா விருப்பாட்சி குமாரனான ஸ்ரீ கண்டன் .........**

   **இந்த திருமடை விளக்கேற்ற**

2. **மானியமாக குடுத்தோம் இது சந்திராதித்தவரையும் மானியம் செல்லகடவது இதுக்கு அகிதம் பண்ணாருண்டாகில் கெங்கைக் கரையில் பிராமணணையும் பசுவையும் கொன்ற பாவம் அனுபவிக்கக் கடவன . . . .**

## 13:15

**இடம்:** *மேலது, முக மண்டபம் பட்டி*

**காலம்:** *விஜயநகரம், தேவராயர்,ருத்ரொத்காரி, பங்குனி -12=பொ. ஆ.16ஆம் நூ*

**செய்தி:** *வெகுவாக சிதைந்துள்ளது. திருவிளக்குப்புறமாக நிலம் அளித்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன்மகாமண்டலீசர மேதினி மீசுர கண்ட சுவர . . . . கட்டாரி சாளுவ ஸ்ரீ கண்ட தேவ மகாராசா

2. உத்ரோ காதி வருஷம் பங்குனி 12 சேவூர் உடையார் திருவகத்தீஸ்வர முடைய நாயனாற்கு ஸ்ரீ கண்ட தேவமஹாராசா விட்ட திருவிளக்குப்புறம் . . . . . . . ருமாள் . . . . .

**காணியானதும் . . . .. பட்டத்து . . . . . .சந்திராதித்த வரையும் சறுவமானியமாக விட்ட . . . . . நடத்தவும் இது பன். . . . .**

## 13:16

**இடம்:** மேலது, முகமண்டபம், வடக்கு குமுதம்

**காலம்:** கோப்பெருஞ்சிங்கன்,யா.11,= பொ.ஆ.1254

**செய்தி:** சேவூர் புனரமைத்தமை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ சகலபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ கோப்பெருஞ்சிங்க தேவற்கு யாண்டு 11 சேவூர் உடையார் திருவகத்தீஸ்வரமுடைய நாயனார் கோயில் . . . . . . .**

2. **. . . . . . .குலைந்து கல்லால் எழுகையிலிவ்வூர்ப் பள்ளி சேவூர் நானாழி வான மங்கை அணியானை கலக்கிப் பேரையன் தடயோம் இட்டுக் பழம் பா . . . . . .**

3. **. . .ல் கோயில் உண்டாக்கி வேகப்ப நம் எழுத்து**

## 14. முக்குணம் - உரல் கல்வெட்டு

**சி.வீரராகவன்,** விழுப்புரம்

**இடம்:** விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், முக்குணம் ஊருக்கு மேற்கே வயல் வெளியில் கன்னிக்கோயில் அருகில் உள்ள மொட்டைப் பாறை

**காலம்:** பொ.ஆ.14ஆம் நூ

**செய்தி:** உரல் வெட்டி வைத்தமை

1. **தெள்ளாற்றுப்பற்றில் புலினூரிலிருக்கும்**
2. **நாரத கோத்திறத்து அந்தரி பாப்பாரில் திருக்கோலூர்**
3. **உடையான் உய்யங்கொண்டான் திருக்கை வேல்லழகியான்**
4. **மகன் பெருங்கருணைப் பெருமாள் திருவாய்பாடிப் பிரம்மராயன்**
5. **பெற்று முடிவாகண்டன் தன்மம் இவ்வுரல்**

# 15. கோனூர் சிவன் கோயில் கல்வெட்டுகள்

சு.இராசவேலு,தஞ்சாவூர்
சி.வீரராகவன்,விழுப்புரம்

## 15.:1

**இடம்:** விழுப்புரம் மாவட்டம் வட்டம், கோனூர் சிவன் கோயில், அர்த்த மண்டபம், தெற்கு முப்பட்டைக் குமுதம்

**காலம்:** கோப்பெருஞ்சிங்கன்,யா.5=பொ.ஆ.1248

**செய்தி:** சிதைந்துள்ளது.திருக்கோயில் திருப்பணிக்காக முருகன் சோழங்கதேவ முத்ததையன் என்பான் அரைக்காணி நிலம் தானமாகக் கொடுத்தமை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ அவனி ஆளப்பிறந்த கோப்பெருஞ்சிங்க தேவற்கு யாண்டு 5 ஆவது கோனூர் உடையார் மிளகாண்டார்க்கு**

2. **முருகன் சோழங்க தேவ முத்தரையன் திருப்பணிக்கு விட்ட .... நிலம் அரைக்காணி ...**

## 15:2

**இடம்** : கருவறை, தெற்கு கிழக்கு முப்பட்டைக் குமுதம்

**காலம்** : கோப்பெருஞ்சிங்கன், யா. 5=பொ.ஆ.1248

**செய்தி** : நிலம் தானமாக அளித்தமை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ அவனி ஆளப்பிறந்த கோப்பெருஞ்சிங்க**

2. **தேவற்கு யாண்டு 5 ஆவது கோனூர் உடையார் மிளகாண்டார்க்கு கோனூர் கொக்கனார் விட்ட நிலம் அரைக்காணி**

# 16. மனப்பாறை வட்டாரக் கல்வெட்டுகள்

**வி.ப.யதீஸ்குமார்,** திருச்சி
**அ.சங்கர்,** தஞ்சாவூர்

**இடம்:** திருச்சிராப்பள்ளி மாவட்டம். மணப்பாறை வட்டம், வடக்குச்சேர்பட்டி (பெரியபட்டி) , தனிக்கல்

**காலம்:** *பொ.ஆ.11ஆம் நூ.*

**செய்தி:** *இரட்டபாடி சோழவளநாட்டு உறத்தூர் கூற்றத்து மரவனூர் கடாரன், மரவனூர் கிழவர்க்கு தலை நீரழிந்து நாட்டிய (நினைவுக்கல்) கல்.*

**16:1**



1. **ஸ்வஸ்தி ஸ்ரீ இரட்ட**
2. **பாடி கொண்ட**
3. **சோழவளநாட்[டு]**
4. **உறத்தூர் கூற்றத்[து]**
5. **மரவனே[ரில்] மற-**
6. **வநேரி [உடையார்]**
7. **சூரியதாணா. . ..**
8. **கடாரான் மறவநேரி**
9. **கிழவர்க்கு தலைநீரழி-**
10. **ந்து நாட்டினகால்**

**16:2**

**இடம்:** மேற்படி மாவட்டம், வட்டம், மொண்டிப்பட்டி, தனிக்கல்

**காலம்:** பொ.ஆ. 11ஆம் நூ

**செய்தி:** கோனாட்டு திருமால் உதாரவிடங்க முத்தையனுக்கு தலை நீரழிந்து நாட்டின கல்

1. **கோநாடு.**
2. **திருமா**

3. ல் [தாத]

4. உதாரவி-

5. டங்க மு-

6. த்தை-

7. யைனுக்கு

8. தலை நீர்-

9. அழிய

10. நாட்டி-

11. யகால்



## 16:3

**இடம்:** மேற்படி மாவட்டம், வட்டம், கிழப்பொய்கைப்பட்டி(பொய்கைப்பட்டி), தடாகேஸ்வர் கோவில், கருவறை வாயில் நிலைக்கால் (வடக்கு)

**காலம்:** பொ.ஆ. 12ஆம் நூ.

**செய்தி:** மீழமகன் அவையன் அரச கண்டராமன், தடாகேஸ்வர் கோவிலுக்கு திருனிலைக்கால் தானம் கொடுத்தது.

1. ஸ்வஸ்தி

2. ஸ்ரீ மீ-

3. ழம் ம-

4. கன் அ-

5. வைய-

6. ன் அர

7. ச கண்-

8. ட ராம-

9. க்கோ

10. ன் தன்

11. மம்



## 16:4

**இடம்:** மேற்படி. தெற்கு நிலைக்கால்

**காலம்:** பொ.ஆ.12ஆம் நூ.

**செய்தி:** மீழமகன் திருமாளிகை இளமைக் கோன், தடாகேஸ்வர் கோவிலுக்கு திருநிலைக்கால் தானம் கொடுத்தது.



1. ப.
2. .ழம்ம
3. கன் தி-
4. ருமாளி-
5. கை
6. கோன் [ரெ
7. ச] ப்பிள்
8. ளை ஆந
9. இளமை
10. கோன்
11. தன்ம-
12. ம் திருநி-
13. லை கா-
14. ல்.

## 16:5

**இடம்:** மேற்படி, தனிக்கல்

**காலம்:** பொ.ஆ.16ஆ ம் நூ

**செய்தி:** ஆட்பெயர் உள்ளது.



1. திருக்கு-
2. னம் திரு-
3. இ[வ்]வடி-
4. உம் முதி-
5. யார்

# 17. அத்திவெட்டிக் கல்வெட்டு

மா. பவானி, தஞ்சாவூர்

**இடம்:** தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம், மதுக்கூர்-அத்திவெட்டி சௌந்தரேஸ்வரர் கோயிலில் உள்ள கல்

**காலம்:** இரண்டாம் இராஜேந்திரன், யா. 9+1=10 = பொ.ஆ.1061

**செய்தி:** சோழகங்கன் என்னும் அலுவலர் அகம்படி மற்றும் நாட்டுப் பற்றுகளில் நிச்சயித்த வரிகள் தவிர பிற வரிகளை இறுக்கக் கூடாது என்ற செய்தி

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்ரவத்திகள் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவற்கு யாண்டு ஒ-**
2. **ன்பதாவதி நெதிராமாண்டு ஸிம்ஹ நாயற்று அபர பக்ஷத்து சதுர்த்தியும் நாயற்றுக்-**
3. **கிழமையும் பெற்ற அஷ்வத்து நாள் தொண்டைமண்டலமான ஜெயங்கொண்ட சோ-**
4. **ழ மண்டலத்துப் பைய்யூர் கோட்டத்துப் பைய்யூர் பெரியானழகிய பெ-**
5. **பருமானான சோழ கங்கனென் படைப்பற்றான அகம்படிப் பற்றுக்கும்**
6. **நாட்டுப் பற்றுக் கடமையும் முதலிகளுக்கு இறுக்கும் பொன் வரியும் கொ-**
7. **ள்ளக் கடவதாக நிச்சயித்தபடி தேவதான மடபபுறம் [பிராமணர்] இறையிலி நில நீக்கி நிலத்துக்குத் தலை-**
8. **கடை நீர் விக்காதக் கடமைக்குக் கொள்ளு மாத்தால் காசு . . . லே மாத்தால் அறுநூற்றுக் கலந்-**
9. **த காசு பொன் வரி இறுக்கவும் கடமைக்கு மாத்தால் இறுக்கவுமாக வந்த நெல் 20 இறுக்கவும் தேவதான் மடப்பு-**
10. **ரங்களுக்கும் ப்ராமணர் இறையிலிக்கும் நிச்சயித்துக் கொள்ளவும் இப்படீல் வந்த காசும் நெல்லும் ஒ-**
11. **ழிய வேறு ஒரு வரி கொள்ளாதொழியவும் கடவது இப்படி செய்யாதவன் இந்த வம்ஸத்திலே பிறந்தானல்ல**
12. **நனாகக் கடவன் இதுவே சோழகங்கன் எழுத்து**

## 18. மகாராஜ சமுத்திரம் கல்வெட்டு

**இரா.கார்த்திகேயன்,ஒரத்தநாடு**

**இடம்:** தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம், மகாராஜசமுத்திரம் பெருமாள்கோயில் துண்டுக் கல் வெட்டு

**காலம்:** பொ.ஆ.11.ஆம் நூ.

**செய்தி:** திருநாமத்து காணியாக நிலம் வழங்கப்பட்டமை.

1. . . . .வது ராஜராஜ வளநாட்டு செல்ல . . ..
2. . . .டுருடையார்ஆளவந்தான் இளங்கா . . .
3. . . .ன கோட்டுரில் கோட்டுடையார்ஆ . . .
4. . . . யார்க்கு திருநாமத்து காணியாகநிர்வாத் . . .
5. . . . தெற்றமாகப் பூண்டு இறுத்து வருகிறப் . . ..
6. . . . .யில்இந்நிலம்இப்பிள்ளையார்க்குதெவ . . .
7. . . . .எதிரிலி சோழப் பிரமாகார்யன்காணியிலிறுத்து . . .



# 19. மிலிதிகி கல்வெட்டு

**சீ.பரந்தாமன்,** தருமபுரி
**ப.த.நாகராஜன்,** சென்னை

**இடம்:** கிருஷ்ணகிரி மாவட்டம், தேன்கனிக்கோட்டை வட்டம், மிலிதிகி, ஊரின் மேற்கிலுள்ள நடுகற்களுக்கு அருகிலுள்ள கற்பலகை

**காலம்:** முதலாம் குலோத்துங்கன். பொ.ஆ.(1070-1120)

**செய்தி:** விஜெயராஜேந்திர சோழ மண்டலத்தில் ஊள்ள தகடு நாடு மற்றும் குயில் நாடு குறிக்கிப்பட்டுள்ளது.

1. நிலமகள் வளர மலர் மகள்..
2. நிமையிற்சிறந்த மணி முடிசூடி...
3. து ந்த சக்கர நாடதி வீரஸிம்ஹா..
4. புவன முழுதுடையா ரோடும் விற்..
5. கோப்பர கே(ரி)சரி பன்மர்ந் உடை..
6. லொத்துங்க சோழ தெவற்க்கு யா..
7. ஆவது விஜெயராஜேந்திர சோழ மண்..
8. தகடு நாடுக்கு குயில்நாட்டு நாட்டு காமுண்ட...
9. ந்திர சோழக் குயிநாடாழ்வாந் தம் நா...
10. ட்டு சிர்யகல நாட்டுக் கல்ல கந்..
11. க்கு மந்திர குலத்து வ..
12. ம் சோழப் பல்..
13. ந்திர சொ[ழ]..

# 20. எண்ணாயிரம், எசாலம் கல்வெட்டுக்கள்

கோ.விசயவேணுகோபால்,புதுச்சேரி

20:1

**இடம்:** *விழுப்புரம் மாவட்டம், எண்ணாயிரம், அழகிய நரசிம்மர் கோயில்,தெற்கு அதிட்டானம்,குமுதப் படை*

**காலம்:** *சோழர்,இரண்டாம் இராசராசன்,யா.11=பொ.ஆ.1157*

**செய்தி:** *எசாலம் கல்வெட்டு எண் 9 இதனுடன் தொடர்புடையது. இங்கு அதே அரச ஆணை ராஜராஜசருப்பேதிமங்கலத்து சபையாருக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ பூமருவிய திருமாதும் புவிமாதும் ஜயமாதும் ...விய கலைமாதும் புகழ்மாதும் நயந்து புல்க அருமறை விதி நெறி யனைத்துந் தழைப்ப வருமுறை யுரிமையில் மணிமுடி சூடித் திங்கள் வெண்குடைத் திசைக்கள் ளெட்டுந் தங்கு தனிக் கூடந் தாநென விளங்கக் கருங்கலிப் பட்டியைச் செங்கோல் துரப்பப் பொருங்கதி ராழி புவி வளர்ந்துடன்வர வல்ல**

2. **வரிரட்டர் மீனவர் க...கணர் பல்லவர் நுதலிய வர் பணிய எண்ணருங் கல்பம் மண்ணகம் புணர்ந்து செம்பொன் வீரஸிங்ஹாஸநத்துப் புவனமுழுதுடையாளொடும் வீற்றிருந்த ருளிய கோப்பரகேசரி வர்தரான திரிபுவநச் சக்ரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவற்கு யாண்டு 11 ஆவது ப்ரஸாதஞ் செய்தருளி வந்ததிருமுகப்படி திரிபு**

3. **வநச் சக்கரவத்திகள் நேரின்மைகொண்டான் ராஜராஜ வளநாட்டு ராஜராஜச்சருப்பேதி மங்கலத்து ஸபை$_4$யாற்குத் தங்களூர்ப் பிடாகை எய்தார்த் திருவிராமீச்$_2$வர முடையார் தேவதாநம் ஏற்பாக்கமான விக்கிரம சோழநல்லூர் பொத்தகப்படிநிலம் நூற்றெந்பதே முக்காலே அரை மா முந்திரிகைக் கீழிரண்டு மா முக்காணி**

4. **முந்திரிகைக் கீ ழொன்பது மா முக்காணி யரைக்காணியும் முந்நுடையாரும் பழம்பேருந் தவிர்ந்து அருமொழிதேவ வள நாட்டுப் புலியூர் நாட்டு வாஞ்சியூர் வாஞ்சியூர் கிழவந் உய்யக் கொண்டாந் பஞ்சநெதி வாணனுக்கும் இவந் வற்கத்தாற்கும் பதிநொந்றாவது முதல் ஐந்மக் காணியாக குடுத்து ராஜராஜந்**

**வாஞ்சியூ ரெந்நும் பேரால்**

5. **வரியிலிடக் கடவதாகவுஞ் சொல்லி இப்படி கணக்கிலு மிட்டுக் கொள்ளக்கடவதாக வரிக்குக் கூறுசெய்வர்களுக்குஞ் சொந்நோம் இந் நிலம் பதிநொன்றாவது முதல் வாஞ்சியூர் கிழவநுக்கும் இவந் வற்கத்தாற்கும் ஜந்மக்காணியாகக் கைக்கொண்டு அநுபவிக்கப் பண்ணுக எழுதினாந் திருமந்திரவோலை சோளேந்திரசிங்க மூவேந்த வேளான் இவை விழிஞுத்தரைய நெழுத்து இவை நுளம்பாத ராயந் எழுத்து. இவை குருகுல ராயந் எழுத்து இவை மழவராயந் எழுத்து இவை முத்தரையந் எழுத்து இப்படி திருவாய் மொழிந்தருளி ப்ரஸாதஞ் செய்தருளிந திருமுகம் வந்தது**

## 20:2

**இடம்:** *மேற்படி மாவட்டம்,வட்டம், எசாலம்,ராமீசுவர முடையார் கோயில்,மகா மண்டபம்,வடக்குச் சுவர்*

**காலம்:** *முதலாம் இராசேந்திரன், ஆட்சி யாண்டு இல்லை.*

**செய்தி:** *முதலாம் இராசேந்திரனின் 'திரு மன்னி வளர' என்று தொடங்கும் மெய்க்கீர்த்திப் பகுதி (52 வரிகள்) மட்டும் உள்ளது.*

## 20:3

**இடம்:** *மேற்படி*

**காலம்:** *முதலாம் இராசேந்திரன்,யா.10=பொ.ஆ.1022*

**செய்தி:** *ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ப்$_3$ரஹ்ம தேச3யந் தநியூர் ஸ்ரீ ராஜராஜ சதுர்வேதி$_4$ மங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்கள், முதலாம் இராசேந்திரனின் குருக்கள் ஸர்வசிவ பண்டிதருக்கு விற்றுக் குடுத்த நில விலை யாவணம்.*

1-40. [மெய்க்கீர்த்திப் பகுதி] **திருமந்நி வளர இருநில...ந்தையும் போற்செயப் பாவையும் சீர்த்தநி**

40. **மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி பந்மரான உடையார்**

41. **ஸ்ரீ ராஜேந்தி$_3$ர சோழ தே$_3$வர்க்கு யாண்டு 10+.. ஆவது னா[ள்] 244**

42. ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ப்$_3$ரஹ்ம தே$_3$யந் தநியூர்

43. ஸ்ரீ ராஜராஜ சதுர்வேதி$_4$மங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்

44. களோம் விற்றுக் குடுத்த நில விலை யாவணம் இவ்வாட்டை கும்ப$_4$

45. நாயற்று பூர்வ பக்ஷத்து ஸப்தமியும் வ்யாழக் கிழமையும்

46. ப் பெற்ற ப$_4$ரணி நாள்பகல் நம் ப்$_3$ரஹ்மஸ்தாநம் க$_3$ங்கை$_3$ கொண்

47. ட சோழநிலே கூட்டக் குறைவின்றி கூடி யிருந்து பணிப்பணியால்

48. ப் பணித்து உடையார் ஸ்ரீராஜேந்த்$_3$ர சோளதே$_3$வர் கு$_3$ருக்கள் ஸ

49. ர்வ சி$_2$வ பண்டிதர் நம்மூர் எதார் திருவிராமீச்$_2$வரமுடைய மஹா

50. தே$_3$வர்க்குத் திருவமி

[கருவறை,அர்த்த மண்டபத்தில் உள்ள அங்கணம்]

51. ர்தும் திருச்சந்நடையும் மீமாம்ஸை ப$_4$ட்டவ்ருத்தி

52. யும் சாத்ரற்கும் சா$_2$லாபோ$_4$க$_3$மும்

53. உள்ளிட்டு உடையார் செய்தருளுகின்ற த$_4$[ர்]மத்துக்கு நிப$_3$

54. ந்த$^3$மாக நாங்கள் விற்றுக் குடுத்து இறை இழிச்சின நிலமாவ

55. து நம்மூர் தென் பிடாகை ராஜராஜ வள நாட்டு செஞ்சி உ

56. ள்ளிட்ட சோளேந்த்$_3$ர ஸிம்ஹ நல்லூர் பெ.......

57. ஊர் நந்நாடும் பிடாகை மதுராந்தக வள நாட்டு ஆரியூரான வானவ

58. ன் மஹாதேவி நல்லூரொடும் அமைந்த ஊர் ஏர்ப்பாக்கம்மும் இவ்விர

59. ண்டூரும் கூறிட்டபடி அளவு சாத்துப்படி நிலன் 28 [வேலி]... இந்நில

60. ன் 28...லும் கூறழியப் பணித்துக் கூறழித்து நம்மூர் தே$_3$வர்கள்

61. சா$_2$ஸந ப$_3$ந்த$_3$த்தால் உடைய பங்குகளால் வந்த நிலமும் நம்மூர் தே$_3$

62. வர்களுக்கேய் பலரும் விலைக்கு விற்றுப் பலரும் தே$_3$வர்களுக்கேய் குடு

63. த்ததும் பங்குகளால் வந்த நிலமும் ஆகப் பங்கு நாலாயிரம்

பின்பக்கம்

46. து விடுறேன் யென்றுன் சொன்னான் அப்படி ஆனாலும் ஊரை எளு-
47. திக் குடுத்துப் பணத்தைச் செலுத்தி வைய்க்க சொல்லி சொ-
48. ன்னாபடியினாலே அமரகான் செல்லப்பகவுண்டன் கையில் ஆ-
49. யிரம்பொன்னு நா கரம் வாங்கி அரமணைக்கிச் செலுத்தி
50. வைச்சு குடுத்துப்போட்டு [ப]ங்கயத்திலே அகத்தீசுபரார்ச-
51. ன்னிய்தானத்திலே பட்டயமெளுதி வைச்சது கெட்டிமுதலி-
52. யார் பூந்துறை வாறணவாசிக்கவுண்டரு வெள்ளோடு செ-
53. ன்னிமலைக்கவுண்டரு நசையனூரு செங்கோடகவுண்
54. டரு காங்கியம் மண்ணாடியார் குருப்பனாட்டுத் தண்டிகை னாசப்பக்
55. கவுண்டன் ஒடுவங்கனாடு சிதேவிக்கவுண்டரு யிவர்கள் முன்பதா
56. க பட்டயமெளுதிக் குடுத்தது யிதுக்குசாட்சி பூந்துரை வா[ற]
57. ணவாசிக்கவுண்டன் காங்கயம்மன்னாடியார் வெள்-
58. ளோடு பயரங்கூட்டம் சென்னிமலைக் கவுண்டன் சாத்த[ந்தை]
59. கூட்டத்தில் வெலப்பகவுண்டன் நசையனூருக் கண்ண
60. கூட்டத்தில் செங்கோட கவுண்டன் செம்பங் கூட்டத்தில்
61. அவினாசிக்கவுண்டன் பூச்சந்தை கூட்டத்தில்ப் பழனி-
62. க்கவுண்டன் குருப்பனாட்டுத் தண்டிகை னாசப்பகவுண்டன்
63. ஒடுவங்கனாடு செம்பங்கூட்டம் சீதேவிக்கவுண்டன் க-
64. ன்னங் கூட்டம் றாவத்தகவுண்டன் திருவாச்சி சிவாலையம் வி-
65. சுபரர் விஷலாச்சியம்மன் யிதுக்கு பூசை பன்னுகிறவன் சுப்ப-
66. யன் சாச்சி வெ[ள்ளை]வினாயகன் கரியகாளியம்மன் கோ-
67. வில் தானியன் பழனியாண்டி சாட்சி தொட்டிப் பிறமன்
68. தொட்டிப் பழனிசாட்சி யிதுயெளுதினவன் காங்கையம்
69. சீனிவாசன் பாளையம் செம்பாசாரி உ இசுபரன் துணை உ

## 42:2

**காலம்:** *சகம் 1690, கொல்லம் ஆண்டு 945, சறுவதாரி, தை, 13 = 1768*

**செய்தி:** இச்செப்பேடு *53* வரிகளை கொண்டுள்ளது. இவை குடனாட்டில் இருக்கும் திருச்செந்தூர் ஆன திருபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்தில் உள்ள சுப்பிராயினார் கோயில் சன்னிதானத்தில் அர்த்தசாம அபிசேகம், நெய்வேத்தியம், பிராமண போசனம் மற்றும் விலவர் அர்சனை நடைபெறுவதற்கு நிலம் தானமாக பெரியசுவாமி என்பவரால் கொடுக்கப்பட்ட செய்தி உள்ளது. பெரியசாமி முள்ளிநாட்டில் சிங்கப்பட்டியைச் சேர்ந்தவர்

**முன்பக்கம்**

**உ சரவணபவனஓம் உ**

1. **சுப[4]மஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாத்தம் சூ-**
2. **1690 ன் மேல்ச் செல்லானின்ற கொல்லம் கூளசுய-**
3. **ரு (945) சறுவதாரி ஹூ தை மீ . யிரு . . . வாரமும் பவூறன**
4. **மியும் . . சினாமயோக முப்பது கரணமும் பெற்ற பூசாட சேம-**
5. **த்திரத்தில் நாள்ச் செய்தி பூமி தான பிராமாண . ரம்**
6. **பிரசாதனமாவது குடனாட்டுத் திருச்செந்தூ**
7. **ரான திருபுவனமாதேவிச்சதுர்வேதிமங்க**
8. **லம் நாயனார் யிச்சுப்பிராயினார் சன்னிதானத்தி-**
9. **ல் அர்த்தசாமத்தில் அபிஷெகம் நெய்வேத்திய-**
10. **ம் விலவா அர்ச்சனையும் பிராமணபோசனமும் நட-**
11. **க்கும் படிக்கு கட்டளைக்கு விட்டது முள்ளி**
12. **நாட்டில் சிங்கம்பட்டியான முருகன்பட்டி**
13. **யூரிலிருக்குந் தென்னாட்டுப்புலைநல்லகு-**
14. **ட்டி தேவர்[கு ம]காண அடியென் பெரிய சுவாமி**
15. **யென் ஆண்டவன் கட்டளைக்கு நிலம் விட்டு**
16. **க்குடுத்துத்தர பிரசாதனத்தில் எழுதிக்குடுத்-**
17. **த நிலமாவது சன்னிதானதில் சீராமன் குள**
18. **ஞ்சேகரத்தில் அம்மச்சியார் பத்தில் வி-**
19. **ரைகோட்டைக்கு படிக்கு மூன்றரைச் சே . . மெ**

20. ய்பாடுஞ் சறுவமானியமா கு[டு]த்தான் சாதன-
21. ம் பண்ணித் தந்த நிலத்துக்கு நாலெல்கை-
22. யாக வேலும் மயிலும் கல்லும் போட்டுத் தந்-
23. து விட்டபடியினாலே திருநெல்வேலி சீ-
24. மை அதிபத்தியஞ் செய்யு[ம் ரா]சமான்னியா . .
25. ஸ்ரீ மகாராசாகளுக்குப் புண்ணியமாகவும் சறுவாதி
26. டசஞ்செய்யுந் துரைமாருக்கு புண்ணியமாக
27. வும் சம்பிறிதிகரண கோவிக்கரை வாசல்க் கணக்கதி-
28. காரியளுக்குப் புண்ணியமாகவும் கொ[டு]த்த தர்மத்-

பின்பக்கம்

29. துக்கு வாக்குச் சகாயஞ் சரிரசகாய அர்த்த
30. சகாயஞ் செய்யிர பேருக்குப் புண்ணியமா-
31. கவும் சிங்கம்பட்டி ஆதிக்கத்தில் அதிபதியா
32. க மென்மேலும் யிருக்கிற அவர்களுக்கு பு-
33. ண்ணியமாகவும் திருச்செந்தூர் கோவில்
34. த்தலத்தாரில் அத்தென்பட்டர்களில்ப் பா-
36. ரதுவரதகோத்திரத்தில் அசுலாயன சூத்திர-
37. தில் ஸ்ரீ புண்டரீகவர்த்தனத்தில்ச் சரவணபட்டர் புத்-
38. திரன் நாராயணவர் . . . . சந்திராதகஞ் சந்தி தீபம்
39. வெ[ச்]சம் யிந்த நிலத்தைக் கையாடிக் கொண்-
40. டு யிந்தப் படிக்குக் கட்டளையாக அரச
41. சாமத்தில் அபி$_4$ஷேகம் [நெய்]வெதனம . .
42. அரிசனையும் பிராமண போசனமும் நட-
43. த்திவிச்சுக் கொண்டு புத்திரபாரம்பரை-
44. யாக தானாகி விநிமயவிற்க்கிரயங்களு-
45. க்கும் யோக்கிதாராகவும் அனுபவித்து-
46. க் கொள்வராகவும் 935 ளு திருச்செந்
47. தூர் சன்னிதானத்தில் பூமிதானம் பண்ணினா-
48. ரை கோட்டை யிரண்டும் பட்டவிரித்தியாக . .
49. துக்கனுபவித்துக் கொள்வராகவும் யிந்த தந்மத்து-
50 க்கு வாக்குச்சகாயம் சரிரசகாயம் அர்த்தசகாய-

51. ம் பண்ணி போர்கள் சுப்பிரமணியசுவா-

52. மி கிடாட்சத்தினாலே சந்தவிருத்தியும்

53. தீர்காயத்தும் [சிவ]வரவிட்டமும் வளந்தே-

54. ரியிருப்பாராகவும் உ

## 42:3

**காலம்:** *ராமநாதபுரம் சேதுபதி,விசையரெகுனாத சேதுபதி, சகம் 1661, பிங்கல=பொ.ஆ.1739*

**செய்தி:** *விசையரெகுனாதச் சசிவறன தேவரவர்கள் சத்தியலூர் சககுருசுவாமிக்கு நிலமும் தோட்டமும் தானமாக கொடுத்தமை. இந்த நிலமானது வடதலைச்செம்பி நாட்டில் வைகை ஆற்றின் வடகரையில் உள்ள இயமனிசுரம் (இன்றைய பரமக்குடி வட்டம்) பெங்குளத்தில் உய்யவந்தாளம்மன் கோவில் பெரியமடை பாசனத்துக்கு உட்பட்டதாகவும் அவற்றின் எல்லையும் குறிப்பிடப்பட்டுள்ளது.*

### முன்பக்கம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன்மகாமண்டலேசுவரன் அரியயாயிரதளவிபாடன் பாஷைக்குத் தப்புவரா

2. யகண்டன் மூவராயகண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான்

3. பாண்டி மண்டலதாபனாசாரியன் சோழமண்டலப் பிரதிஷ்ட்டா பனாசாரிவன் தொ-

4. ண்ட மண்டல சண்டமிறகண்டன் இளமுங் கொங்கும் யாட்பாணார்ப்பட்டின-

5. மமளித்துக் கெசவேட்டை கண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்தாண்-

6. டன் ராசகெம்பிரன் ராசகுலதிலகன் சேது காவலன் செங்காவிக்குடையான்

7. செங்காவிச்சிவிகை பாடி . . வேட்கையர் உடையான் வேள்வி நாடுடையான் கு-

8. [ளந்தைமான]காரண் முல்லைமாலிகையான் ருத்தராட்ச

மாலிகையான் ப-

9. கைக்குப் இனையான் மும்மதயானை . . . . . கொடியான் புலிக்-

10. கொடியான் . . . . கொடியான் கெருடக்கொடியான் மகரக்கொடியா-

11. ந் மும்முகதரும மூன்றிலையுடையான் திக்கெல்லாஞ் செங்கோல் செலு-

12. த்து மா. . யினான் வடகரைப்புலி மேனாட்டுப்புலி தொண்டியந்துறை

13. காவலன் பரதேசிகாவலன் பஞ்சகாலப் பயங்கரன் தாலிக்கி வேலி

14. பட்ட மானங்காத்தான் யிவுலிபாவ[டி]மிதித்தயேறுவார் கண்டன் நவகொடிநாரா

15. யணன் பஞ்சவறனப் பாவாடையான் ரணகேசரி தளன் சிங்கம் இளஞ்சி-

16. ங்கம் மதுரை வளிகண்ட மண்டலீகாமதகண்டன் துட்டநிலத்துட்-

17. டன் துட்டர் கோடாரி துட்டர் நீக்கிரதன் சிட்டாபரிபாலன் ஆத்துப் பா-

18. ச்சி கடலில்ப்பாச்சி வன்னியராட்டந் தவிள்த்தான் சொரிமுத்து வன் -

19. னியன் மலைகலங்கினும் மனங்கலங்காதான் வயசுக்கு மாற்க-

20. ண்டன் அறிவுக்கு அகத்தியன் போருக்கு வீமன் பொறுமைக்கு தற்ம-

21. ன் சொல்லுக்கு அரிச்சந்திரன் வில்லுக்கு விதுரன் குடைக்கி கற்ண-

22. ந் பரிக்கி நகுலன் அட்டலெட்சுமிவாசன் நிற்தியகலியான் கூற்-

23. றதான தளங்கண்டு தத்தளிப்பார்கண்டன் பூறுவபச்சம் சித்தமுத்திரை-

24. தனெ இரவிகுலசேகரன் அசுபதி கெசபதி நரபதி தனபதி யாகிய அரசு நி-

25. லைவிட்ட விசைய ரெகுநாதச்சிவரன் முத்துவடுகநாதப் பெரிய உடை-

26. யாத்தேவரவர்களும் பிறிதிவிராச்சியம் பரிபாலனம் பண்ணியருளா-

27. ய நின்ற சாலிவாகன சகாத்தம் 1661 மேல் செல்லா நின்ற பி-

28. ங்கல ஹ சி[த்]திரை மீ ௲ய உ புதன் கிளமை . திரிதிகை

நாள் . .

29. கை யிரு மிரிகசிரிகம் நட்செக்திரம் நாழிகை உய னாட்டிகரம் நாமற

பின்பக்கம்

30. யோகமும் கிரசைவாகரணமும் இ . . . கோரா சுபயோக சுபகரணமும் . . . ந

31. சுபதினத்தில் குளந்தை நகர நீதியாளன் அரசு நிலையிட்ட விசைய ரெகுனாதச்சசிவறன . .

32. பேர்வுடையாத் தேவரவர்கள் சத்தியலூர் சககுருசுவாமியவர்களுக்குத் த-

33. ன்மம் பண்ணிக்குடுத்த சேத்திரம்மாவது மதுரை மண்டலத்தில் வைகைய் யா-

34. ற்றுக்குத் தெற்கு வாணரவீரைமதுரைச் சீர்மையில் துகவூர்க் கூற்றத்தில் வடத-

35. லைசெம்பி நாட்டில் இயமனிசுரம் பெங்குளத்தில் உய்யவந்தாளம்ம-

36. ன் கோவில் பெரியமடைப் பாசனத்தில் நீர் பாய்ந்து நெல்விளையும் நில-

37. த்துக்கு எல்லையாவது வ உயசு .உந யும் சுலுத்தர் மயாபள்ளிவா-

38. சலுக்கு வடக்கு மடத்துமனை மனைக்கோட்டம் அக்கரகாரத்து வடகிளக்கு

39. சமாதுக்கொல்லை தெற்குக்கெல்லை குருபூசைக்கு ராமலிங்கப்படி அரிசி 200

40. கிரையம் விலைக்கு வ உய ஔ கட்டளை பெரிய ராமலிங்கப்படித்தம் இலாம-

41. ல் உள்ளப் பெரியராமலிங்கப்படி நெல்லிக்காய் 1000 மாங்காய் 5000 இ-

42. வளவும் தானம் பண்ணிக்குடுத்தபடியினாலே கல்லுங் காடுவரியும் பு-

43. ல்லும் பூமாதேவியும் இது சந்திராதித்தவரைக்கும் புத்திர பௌவுத்திரப் ராம-

44. டபதாயாக ஆண்டனுபவிதுக் கொள்ள கடவராகவும் இருபத்தினாலு மா-

45. முக்காணி முந்திரியும் குளவெட்டு உள்பட சறுவமாணியமாகவும் மூன்று

46. கொல்லையும் சறுவமானியமாகவும் ஆண்டனுபவித்துக் கொள்வார்ரா-

47. கவும் இந்தப்படிக்கு சமிதானம் பண்ணி குடுத்தோம் சத்தியலுர் சக-

48. குருசாமியாரவர்களுக்கு அரசு நிலைவிட்ட விசையரகுனாதச்சசி பேர்யுடையர்-

49. த்தேவரவர்களோம் இந்தத் தர்மத்தைப் பரிபாலனம் பண்ணினபேர்-

50. கள் இன்மைக்குத் தற்மமும் மறுமைக்குக் கீர்த்தியும் கெங்கைகரை-

51. யிலே கோடி சிவலிங்கப் பிரதிஷ்டை அனே-

52. கமடாலையங்கள் பிரதிஷ்டை பண்ணின பலனை அனுவவிப்பர்ராக

53. ம் இந்தத் தர்மத்தை யாதாமொரு[வ]ன் அகிதம் பண்ணினவன் கெங்

54. கைக்கரையிலே காராம் பசுவையும் பிராமணனையும்[மா]தா

55. பிதாவையும் வதை பண்ணின தோஷத்திலே போவராகவும் வ

56. தா$_3$நபா$_4$லந யோர்ம்மதரசேய த$_3$யேநாத் ஸ்ரீ யோந்த ஸ்ரேயோறு பா$_4$

57. லநம் தா$_3$நாத் ஸ்வாக்$_3$ய ப$_4$வாப்நோதி பாலநாதச்$_1$சா$_1$த

58. ம் பதம் உ சிவகாமி அம்ம(ந்)துணை உ

## 42:4

**காலம்:** *விசையரெகுனாத சேதுபதி, சக ஆண்டு 1668 அக்ஷய = பொ.ஆ.1746*

**செய்தி:** *விசையரெகுனாதசேதுபதியின் சிறப்பு பெயர்கள் மற்றும் கொடை பற்றிகூறும் இச்செப்பேட்டின் முழுபகுதியும் கிடைக்கவில்லை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸாலிவாஹந ஸகாப்த$_3$ம் 1668 கலிப்த$_3$ம் இ-

2. தன் மேல்ச் செல்லா நின்ற அக்ஷயநாச்சம் வச்சாத்தி 12 சதளயணத்தில் ஹெ-

3. மந்தரிதுலை தை மாசத்தில் பூற்வபக்ஷத்தில் 4 உதிரதில் 18 ம் சுக்கிற வாரமு

4. அவிட்ட நக்ஷத்தரமும் சுபபோகம்மு காணமும் பொத்த சுபதினத்தில் ஸ்வஸ்தி ஸ்ரீ

5. மன் மஹா மண்டலேசுவரன் தெனவ நகராதிபன் சேது மூலாக்ஷா துரந்தான்

6. ராமநாத சுவாமி காரியா துரந்தான் சிவபூசா துரந்தான் அரியராயிரதளவிபா–

7. டன் பாஷைக்குத் தப்புவரயிரகண்டன் மூவராயிர கண்டன் கண்ட நாடு கொ–

8. ண்டு கொண்ட நாடு கொடாதான் பாண்டி மண்டலத்தாபனாசாரியன் சோள ம–

9. ண்டலப் பிறதிஷாபனாசாரியன் தொண்டமண்டல சண்டப்பிறசண்டன் பூறுவ தேவ–

10. முங் கொங்கும்மி யாட்பாணபட்டணமும் எம்மண்டலமுமளித்து கெசவே–

11. ட்டை கண்டருளிய ராஜாதிராஜன் ராசபரமேசுவரன் ராசமாத்தாண்டன் ராசகுலதி–

12. லகன் வீரரில் வீரன் வீரகஞ்சுகன் வீரவளநாடன் துட்டாகொட்டமடக்கி உரிகோ–

13. ல் சுரதரனன் கிற்திப்பிறதாபன் ஆரியமானங்காத்தான் வைய்கை வளநாடன் கொ–

14. ட்டமடக்கி வையாளி நாராயணன் யிவுளி பாவடியித்தேறுவார கண்டன் இள–

15. ஞ்சிங்கம் பகைமன்னர் சிங்கம் ஆற்றில் பாச்சி கடலில் பாச்சி மதட்பு–

16. லங்காத்தான் தாலிக்கு வேலி சத்துராதியள் மீண்டன் வன்னியராட்டந் தவிள்த்–

17. தான் கருணாகடாக்ஷன் குன்றினுவர் மேருவைக் குன்றாய வளைக்குணில்ப் பி–

18. றித்தவன் திலதநுதல் மடமாதர் மடலெளுதுப் பசுமுகன் விசையல–

19. க்ஷமிகாந்தன் துரகரேவந்தன் அனுமகேதன்ன குடைக்கு கர்ணன் பரிக்–

20. கு நகுலன் வில்லுக்கு விசையன் மல்லுக்கு வீமசேனன் பொறுமைக்கு–

21. க் தற்மபுத்திரன் ப்ரசங்கத்துக்கு ஆதிசேடன் அளகுக்கு வாலைசீவகன் ஆக்–

22. கினைக்கு சுக்கிறீபன் சத்தியாஅரிச்சந்திரன் சங்கீத சாயித்தய வித்தியா–

23. வினோதன் வீரகண்டைசேமத்தலை விளங்குமிரு தாளினான் கருகலர்க–

24. ளமுடியிடறுகவன் துரகதறகுலன் அரசராவணராமன் பாதாள விபாடன் . .

25. ட்டியாதளவிபாடன் ஒட்டியார் மோகந்தவிளத்தான் துலுக்கர் தளவிபாட–

26. ன் துலுக்கர் மோகந் தவிளத்தான் மலைகலங்கினும் மனங்கலங்காதான்

27. சொரிமுத்து வன்னியன் புவனெகவீரன் வீரரணகுரன் வீரமன்னர் சற்–

28. பகெருடன் கிறதிப்பிறதாபன் சறபன்ன பாஷாதுரந்தான் சகல சீவித்யா–

29. பரன் தந்தார் தராதராபரதரர் சகோதரன் மன்னரில் மன்னன் வலிடச்ச–

30. ருவி வளியிற்கால் நீட்டி சொன்ன மொளிமர் தேசுமுகன் கெருடத்$_3$வஜம் அ–

31. னுப$_3$த்$_3$வஜம் மீநம்வஜம் நேமலிம்வஜம் குக்குடம்வஜம் த$_3$–

32. ண்டான் வனசகலசாமமறாச்சியலக்ஷமி காந்தன் அசுபதி கெசபதி நரபதி

33. சேதுபதியாகிய துகவூர் கூற்றத்துக் காத்தூரான குலோத்துங்க சோ–

34. ள நல்லூற் கீள்பால் விரையாத கண்டனிலிருக்கும் ராசமான்ய ராஜ ஸ்ரீ ஹி–

35. ரண்ய கெற்பயாசி முத்து விசைய ரகுனாதச் சேதுபதி காத்த தேவரவர்கள்

36. மெகனான அரசு நிலையிட்ட விசையரகுனாதச் சசிவறன பெரிய உடைய ரகு–

37. தேவரவர்கள் பிறிதிவிராச்சியம் பரிபாலனம் பண்ணியருளா நின்ற கா–

38. லத்தில் [மக்குவமாதி ஷி]வரப்பிறசாதத்தினாலே வேதாகம புராணச் [சாத்திர]

39. த்து கோஷிகக்பட்ட சிவபூசையும் திருமாலையும் செய்கின்ற கரவோம்

# 43. நடு நாடு மற்றும் தொண்டை மண்டலப் பகுதியில் சில கல்வெட்டுகள்

**கோ.உத்திராடம்,** சென்னை

**ப.பூபாலன்,** இராணிப்பேட்டை

**43:1**

**இடம்:** *விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம், குரூர் ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் திருப்பணி செய்வதற்காகத் தோண்டியபோது கிடைத்த கற்பலகை.*

**காலம்:** *செஞ்சி நாயக்கர்; பொ.ஆ.16-17ஆம் நூ.*

**செய்தி:** *கோயில் திருப்பணி செய்யவும் பூஜை நடைபெறவும் தானம் வழங்கியமை.*

1. **சறுவதாரி வ[ரு]ஷம் மா[ர்]கழி மா[தத்]-**
2. **து கிட்ஷண இராயனாதன் னா . . .**
3. **க்கிட்ஷண இராயப்[பன்ட ]மன் . . .**
4. **பார் நாதர்க்கு தேவ்வதானம்**
5. **நடக்கவும் யினி . . .த்த . . .**
6. **ன்பாதி சீர்மை யிருந்த . . .ளம்ம**
7. **...கவல் ஏந்தல் தேவ்வதானம்...**
8. **...தென்னம்மாக பூசைக்-**
9. **கு திருப்பணிய்க்கு தேவதானம்**
10. **ஆக விட்டோம் இந்த தன்மத்துக்-**
11. **கு யாது ஒருவன் அகுதம் பண்ணி-**
12. **னவன் கங்கைகரையிலே காராம்பசு-**
13. **வை கொன்ற பாவத்திலே [குமரி]**
14. **டை போவராவும்**



43:2

**இடம்:** காஞ்சிபுரம் மாவட்டம், திருப்பெரும்புதூர் வட்டம், நெமிலி (காலனி) காமராசர் தெருவில் அமைந்துள்ள சிறுவர் பூங்காவில் உள்ள கல்.

**காலம்:** *17ஆம் நூ.*

**செய்தி:** ஆதிகேசவப் பெருமாள் கோயிலுக்கு அளிக்கப்பட்ட திருவிடையாட்டம் ஊர் நென்மேலி என்று குறிப்பிடுகிறது.

1. **ஆதிகேசவப்பெ-**
2. **ருமாள் திருவிடை-**
3. **யாட்டம் நென்**
4. **மேலி**

# 44. கீரனூர் மடைக்கல்வெட்டு

கரு.இராஜேந்திரன்,மேலப்பனையூர்

**இடம்:** சிவகங்கை மாவட்டம், சிவகங்கை வட்டம், கீரனூர்குளத்து மடைக்கல்வெட்டு

**காலம்:** பொ.ஆ.17ஆம் நூ

**செய்தி:** ராமநாதபுரம் சேதுபதிகளில் ஒருவர்கீரனூர்குளத்தில் மடை அமைத்தமை.

1. **விரோ-**
2. **தி வரு**
3. **சித்திரை**
4. **மீஉ 25**
5. **சேது-**
6. **பதி ம-**
7. **டை வ-**
8. **ச்சது**

# 45. வெங்கலம் கல்வெட்டுகள்

பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்

## 45:1

**இடம்:** பெரம்பலூர் மாவட்டம் வேப்பந்தட்டை வட்டம் வெங்கலம்[வெண்குளம்] என்ற ஊரில் உள்ள தாராபுரீஸ்வரர் கோயிலில் உள்ள தரையில் புதைந்திருந்த துண்டு கல்வெட்டு

**காலம்:** *18ஆம் நூ*

**செய்தி:** மாச்சி ரெட்டியார் அய்யன் என்பவர் வெண்குளத்தில் தானம் குறித்த செய்தி.

1. **சோபகிருது வரு**
2. **ஷம் சித்திரை மா[தம்]**
3. **27 மாச்சி ரெட்டி-**
4. **யார் அய்யந் வெ**
5. **.ங்குளத்தில் சா**
6. **. த்தைப்பாடு நா.**
7. **...வருதி...**
8. **பிறகுடி பசு - -**
9. **ம் பனை..லங்**
10. **ரு தாமலுய .**
11. . . . .



## 45:2

**இடம்:** மேலது கோயிலின் நவகிரகத்தின் கீழ்

**காலம்:** *18ஆம் நூ*

**செய்தி:** வெண்குளத்தில் உள்ள பெரியப்பண்ணை பெரியம்ம நாயக்கியார் என்பவர் கொடுத்த உபயம்.

1. **ஸ்ரீ அக்ஷித வருஷம் தை மாதம் 13 தே[தி]**
2. **யில் வெங்களம் பெரியப்**

3. பண்ணை பெரியம்மநாயக்கி

4. யார்க்கு.டு உபயம்



## 45:3

**இடம்:** மேலது கோயில் மகாமண்டபம் வடக்கு சுற்று குமுதப்படை

**காலம்:** பொ.ஆ.19ஆம் நூ.

**செய்தி:** ஒரே ஒரு வரி மட்டும் உள்ளது

1. **குருவன் தாண்டி சய ஈங்கு**

## 45:4

**இடம்:** மேலது கோயிலின் மகாமண்டபத்தின் கீழே தரையில் பதிக்கப்பட்டுள்ள கற்கள்

**காலம்:** பொ.ஆ.19ஆம் நூ

**செய்தி:** வினைதீர்த்த செட்டி, சிலம்பா நாயக்கன் ஆகியோர் திருப்பணி செய்தமை

### கல்–1

1. **வினைதீர்**
2. **த்த செட்டி**
3. **சதாசேவை**

### கல்–2

1. **சிலம்பா நாயக்கன்**

2. பெரியநம்பி

3. சதா செருவை

**45:5**

**இடம்:** *மேலது கோயிலின் மகாமண்டபத்தின் நுழைவு வாயிலில்*

**காலம்:** *பொ.ஆ.19ஆம் நூ.*

**செய்தி:** *நஞ்சை புஞ்சை அளவு என எழுதப்பட்டுள்ளது.*

1. நஞ்
2. சை
3. புஞ்
4. சை
5. அ
6. ள
7. வு

# 46. புத்தூர் கல்வெட்டு

**சி.வீரராகவன்,**விழுப்புரம்.
**பொன்.வெங்கடேசன்,**ஆறகழூர்.
**கோ.பெருமாள்,**பேளூர்.

**இடம்:** *சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் புத்தூர் மாரியம்மன் கோயில் பின்புறம் நடப்பட்டுள்ள கல்.*

**காலம்:** *பொ.ஆ.17-18ஆம் நூ*

**செய்தி:** *இடது புறம் ஒன்றின் கீழ் ஒன்றாக இரு சூலம் கீழ் பகுதி இரண்டு பாம்பு கோட்டுருவங்கள். சிவபெருமான் இருக்க பாம்பால் பயமில்லை என்று குறிக்கிறது.*



1. **குரு மஹாதேவ**
2. **குருவே சிவா சே[ஸ]**
3. **[க]ர மகாறாசா சற்ப**
4. **[யா] கம் பண்ணுகின்ற**
5. **சகல குருநாதனே**
6. **பாம்பால் ப[ய]ம் ஏது**
7. **பாவ சக்கத**
8. **[மே]ப் பண்ணின**
9. . . . . .
10 . . . ..

# 47. வைகை நதி வட்டாரக் கல்வெட்டுக்கள்

**மு.ராஜேஷ், நா.வீரராகவன்,பெங்களூரு**

**47:1**

**இடம்:** சிவகங்கை மாவட்டம் திருபுவனம் வட்டம், மணலூர் அகரம் பகுதி அம்மன் கோயில் அருகில் நடப்பட்ட கல்

**காலம்:** சகம்,1715, பிராமாதீட்ச = பொ.ஆ.1793

**செய்தி:** மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலுக்குத் தேவாரக் கட்டளைக்காக மணலூரில் நிலம் உம்பளமாக கொடையளிக்கப்பட்டமை.



1. உ சாலிவாகன
2. சகாப்தம் 17-
3. 15 மேல் செ-
4. லா நின்ற பிரமா-
5. தீட்ச வருஷம் சித்திரை மாதம்
6. 30ம் தேதி சங்கிலி சேரு-
7. வைகாறாவர்கள் ப-
8. ட்டையமாவது மது-
9. ரையில் மீனாட்சி சுந்-
10. தரேரை சுபாள தேவா-
11. ரைக் கட்டளைக்கி
12. காந்திமதி மகள் தா-
13. யம்மாளுக்கு நம்மிட
14. பேற் குடுத்து மண-
15. லூரில் கொராஞ்
16. செய் தடி [ங் ற உ ய] யும்
17. உம்பளமாக கல்-
18. லுங் காவேரி வரை-
19. க்கும் ஆண்டு கொள்-
20. வதாகவும் [அகுதம்]
21. பண்றவன் கங்கைக் கரையில்

22. காரம் பசுவை கொ-

23. ன்ன பாவத்திலே போ-

24. கவும்

## 47:2

**இடம்:** மதுரை மாவட்டம்,வட்டம், சிந்தாமணி, விநாயகர் கோயில் சுவரில் பதிக்கப்பட்ட கல்

**காலம்:** *பொ.ஆ.1901*

**செய்தி:** மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் கதிர் அறுப்பு உத்சவத்தன்று பிராமணர்களுக்கு உணவு வழங்க ஏற்பாடு செய்து அதற்காக அனுப்பானடியைச் சேர்ந்த இருவர் நிலக்கொடை வழங்கப்பட்டமை. மற்றும் சவுந்திரபாண்டிய விநாயகர் கோயில் மண்டபம் கட்டியமை.

1. மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்பறாள்
2. தை மீ கறுதறுப்பு உத்சபத்தன்று பிறாம-
3. னாள் சமாறாதனைக்கி அனுப்பானடி சிங்க-
4. ன் செட்டி எ.சி.செ. சிங்கம நாயுடு மகன் ந-
5. ல்லைய நாயுடு திருக்கானையில் நீ. 29 ஏ.லை.யும்
6. அனுப்பானடி கீ. 424,426 நீ. காணியும்
7. இந்த சவுந்திரபான்டி விநாயக-
8. ன் மன்டபம் கட்டிவிடப்பட்டது உப
9. யம் யிந்த தர்மத்தை யாறாளும் கெ-
10. டுதி செய்தால் பசுவை கொன்-



11. ற பாவத்தில் போவான் 1901

## 47:3

**இடம்:** மானாமதுரை மானாமதுரை வட்டம் சிவகங்கை மாவட்டம்), சோமநாதசுவாமி கோயில் அம்மன் சன்னதி முன்பு திருவாசியிலுள்ள பொறிப்பு

**காலம்:** *பொ.ஆ.1904*

**செய்தி:** பளையனூரைச் சேர்ந்த இருவர் வானாமதுரை கோயிலில் அம்மனுக்கு திருவாசி அமைத்தமை

1. **சிவமயம்**
2. **சாலிவாகன சகாப்தம்**
3. **1826 க்கு 1904 வருஷம்**
4. **க்கு சோபகிருது வருஷம் தை மீ**
5. **19 ம் தேதி வானாமதுரை ஸ்ரீ**
6. **சோமநாதசுவாமி கோ-**
7. **யில் ஆனந்தவல்லி அம்-**
8. **மனுக்கு பளையனூர் சுடளை**
9. **முத்துப் பிள்ளை மகன் கரு-**
10. **வேலம் பிள்ளை நாகலி-**
11. **ங்கம் பிள்ளை மகன் சித்-**
12. **தநாத பிள்ளை இவர்களா-**
13. **ல் திருவாசி உபயம்**



# 48. திருவிடைமருதூர் பாவை செப்பு விளக்கு பொறிப்பு

சு.இராசவேலு,தஞ்சைாவூர்.
பா.அருண்ராஜ்,தஞ்சாவூர்.

**இடம்:** தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம், திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி கோயில் மாகமண்டபத்திலுள்ள பவை விளக்கின் பீடப்பகுதி.

**காலம்:** பொ.ஆ.*1775*, மராட்டியர், பிறதாப சிம்மர்.

**செய்தி:** திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி கோயிலுக்கு பாவை விளக்கு கொடையாக வழங்கியமை.

1. **சாலிவாகன சகாப்த்தம் 1775 க்கு பிறமாதிச ஹூ ஆணி மீ**
2. **22 உ சோம வாரம் மத்தியாற்ஜுனு ஸ்ரீ மகாலிங்க சுவாமி**
3. **சன்னிதானத்தில் ஸ்ரீ பிறதாப சிம்ம மகாராஜா அவர்களுடைய**
4. **அம்மான் பொன் ஒருத்தரு சொர்நத்தர மனசினாலே வரிக்கப்படட**
5. **பாரியை ஆகிய அம்முனு அம்மணி அவர்கள் லட்ச தீபம் உத்தி-**
6. **யாபனு பண்ணினத்துக்காக தன்னுடைய சுவநூபமாகிய தீபம் பிரதிமா**
7. **ஸ்தாபன தற்மத்தை நிரந்தரமாயி நடப்பிவித்துக் கொண்டு வருகிறவர்கள்**
8. **சிவ தறும பலத்தை அடைய்வார்கள் நிருத்துக்கண்ட சேர் 410 ளு**





# 49. அக்கினி தீர்த்த ஓலைப்பட்டையம்

கு.பாபு,புதுச்சேரி

**இடம்:** திருவண்ணாமலை வாணியர் மடத்தைச் சேர்ந்த திரு நித்தியானந்தன் என்பவரிடமிருந்து பெறப்பட்டது. 20 ஏடுகளைக் கொண்டது.

**காலம்:** கலி 4699 விகாரி = பொ.ஆ 1598. [ ஆனால் இதில் வரும் சில நிர்வாகச் சொற்கள் பிற்காலத்தவை. ஆர்க்காடு நவாப் குறிப்பிடப்படுவதால் பெரும்பாலும் 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மூல ஓலையின் நகலாகலாம்.]

**செய்தி:** ஆயிரங்கோத்திர (வாணியர்) குலத்தின் ஆயி அம்மாள் என்பவர் அக்கினி தீர்த்தக் குளம் செய்து அதை அறிவித்து ஒரு எழுத்துக் கல் (சாதனக்கல்) நட்டதாகவும், அக்கல்லை திருவண்ணாமலையைச் சேர்ந்த சோணாசல தம்பிரான் சிலருக்கு பணம் கொடுத்து தன் வீட்டிற்கு கொண்டு வந்து பூமாந்தை குளத்தின் கரையில் புதைத்து வைத்து விட்டு குளத்தை தன் உரிமையாக்க முயற்சி செய்ய, அதை வாணியர் எதிர்த்தனர். சோணாசல தம்பிரான் குளத்து வேலைக்கு தான் செலவு செய்த 118 விராகனை திருப்பிக் கொடுத்தால் அதை அவர்களுக்கு விட்டு விடுவதாகச் சொல்ல, சிலநாள் சென்று அப்பணத்தைச் செலுத்த வரும் போது தம்பிரான் ஒளிந்து கொண்டதால் திருவண்ணாமலை தாசீல்தார் முன்பாக செலுத்தினர். பின்னர் 24 ஊரைச் சார்ந்த உறவின் மக்கள் ஒன்றுகூடி கூட்டம் போட்டு அக்கினி தீர்த்த குளத்து வேலை தர்மத்துக்கான செலவு பணத்துக்கு ஒரு தீர்வு சொல்லும் வரை ஒருவரும் தம்முடைய சொந்த வேலையை செய்யக்கூடாதென தீர்மானஞ்செய்தனர். இந்த வேளையில் ஆற்காடு ராஜா அசறகிருது கான் சாய்ப்பு காசம் சாய்ப்பு தம் அரண்மனைக்கு வழக்கமாக வரும் விளக்குகளுக்கான (வாணியர் செலுத்தும்) எண்ணெய் வராத காரணத்தை அறிய வெள்ளித்தடிக்காரன் ஒருவனை அனுப்பினார். காரணத்தை அறிந்து குஞ்சா செட்டியாரை அழைப்பித்து மரியாதை செய்து, அக்கினி தீர்த்த தர்மத்து வேலை

*தடையின்றி நடைபெற பட்டையத்தில் கையொப்பம் இட்டார். அதற்காக மண்டிகளுக்கு 6 பணம், கடைக்கு 3 பணம், எண்ணெய் மண்டிக்கு 4 பணம், தக்கடிக்கு 3 பணம், பல்லாயிக்கு 1 பணம், பொதிமாட்டுக்கு பெரிய துட்டு 1 என்று சென்னப்பட்டணம் முதல் ஆற்காடு, அஞ்சிப்பேட்டை, புதுப்பேட்டை முதலிய ஊர்களில் வசூல் செய்த 12,225 விராகன் பணத்தை சார்வதி வருஷம் தை மாதம் 15 தேதி வரையில் செலவு செய்யப்பட்ட்து. குஞ்சா செட்டிக்குப் பிறகு அவர் மகன் தர்மத்து வேலையை தொடர்ந்து வரும் போது மீண்டும் சோணாசல தம்பிரான் சுபாபிலே போய் முறையிட, விசாரணைக்குப் பின் தேசத்தில் தண்டலிட்டு ராஜா முன்பாக 756 ¼ விராகனைச் செலுத்தி கடனைத் தீர்த்து தர்மம் மீட்கப்பட்டது.*

ஏடு-1

**தக்ஷணை கைலாசம் திருவண்ணாமலை அக்கினி தீர்தம் தற்மம்**

**கலியுகாதி வருஷம் 4699 தாவது வருஷம் ஆயிறங்கோத்திரத் விகாரி வருஷம் சித்திரை மாதம் 15 தேதி ஆயிறங்கோத்திரத்தில் பிறந்த ஆயி அம்மாள் செய்த தற்மத்தை ஆயிறங்கோத்திரத்தில் யாறாமொருவர் யிந்த தற்மத்தை யெடுத்து செய்யாவிட்டால் இந்த கெங்கைக்கரையின்**

**பின்பக்கம்**

**பேரில் காறாம் பசுவை கழுத்தை அறுத்த தோஷத்தில் போக கடவதென்று சாதனைகல் போட்டு விட்டாள்அதின் பேரில் திருவண்ணாமலையிலிருக்கும் சோணாசல தம்பிறான் தன் வீடு கட்டிக் கொள்ளுகிறதற்காக வேட்டவலத்திற்கு போய் நாலு மேஸ்திரிகளை அழைத்துக் கொண்டு வந்தான் அந்த மேஸ்திரிகள் நாலுபேரும் வந்து அந்த கொளத்திற்க்கு கால் கை சுத்தம் செய்ய போனார்கள் போனவிடத்தில் சாதன-**

ஏடு-2

**கல்லை கண்டார்கள் அதை சோணாசல தம்பிறானோடு சொன்னார்கள் நல்லது அந்த சாதனகல்லை நீங்கள் நாலுபேரும் போய் யென்வீட்டிற்கு கொண்டு வந்தால் உங்களுக்கு நாலு விறாகன் குடுக்குறேனென்று சொன்னான்அந்த நாலு பேரில் இரண்டு பேரை நீக்கி விட்டு மைத்த**

(மற்ற) இரண்டு பேரும் சாதனகல்லை யெடுத்துக் கொண்டு போய் சோணாசல தம்பிறான் வசம் சேர்த்து விட்டு நாலு விறாகனை வாங்கிக் கொண்டார்கள் மை-

பின்பக்கம்

த்த [மற்ற] இரண்டு பேருக்கும் சங்கதி தெரிந்து நாங்கள் கொண்டு வந்த சாதனகல்லுக்கு நீங்கள் யேன் யின்னம் விறாகன் குடுக்க யில்லை யென்று தம்பிறானை கேட்டார்கள் அதற்கு அவன் அந்த இருவர்களிடத்தில் குடுத்து விட்டேனென்று சொன்னான் அதைக் கேட்டுக் கொண்டு அவர்கள் இரண்டு பேரையும் கண்டு நீங்கள் தம்பிறானிடத்தில் வாங்கிக் கொண்டு வந்த விறாகனை யெங்களுக்கு யேன் குடுக்கயில்லை யென்று கேட்டார்கள் அதற்கு அவர் யென்-

ஏடு-3

ன சொன்னார்களென்றால் நாங்கள் இருவரும் தானே கொண்டு போய் அந்த கல்லை போட்டு தம்பிறான் வசம் சேர்த்து விட்டு அவர் சொன்னப்படி நாலு விறாகனையும் பெற்று கொண்டோம் நாங்கள் உங்களுக்கு யேன் அந்த விறாகனை குடுக்கிறது யென்று சொன்னார்கள் அதற்கு அவர்கள் துற்பாஷையான பேச்சுகளெல்லாம் பேசிக்கொண்டு வாணிய தெரு வீதியில் போகும் போது நாற்தாம் பூண்டி பட்டர் மணியம் முனிசீப்பு குஞ்சா செட்டியும் தயி-

பின்பக்கம்

னாத்தையும் அவாள் இருவரும் விகாரி வருஷம் கார்த்திகை மாதம் 11 தேதி திருவண்ணாமலை கச்சேரிக்கு இருசால் செலுத்த வந்தார்கள்அந்த பணத்தை செலுத்தி விட்டு வாணிய தெருவுக்கு போஜனத்திற்கு போனார்கள் போன போது அந்த மேஸ்திரிகள் இருவரும் துற்பாஷையான பேச்சுகளை பேசிக்கொண்டு போகும் போது அவர்களை அந்த குஞ்சா செட்டியார் அழைத்து யென்ன சங்கதி யென்று கேட்டார்கள் அவர்களிருவரும் ஆயிரங்கோத்திரத்தில் ஒரு கோத்திரம்

ஏடு-4

மருத உடையான் மகாரிஷி கோத்திரம் ஆயி அம்மாள் போட்ட சாதன கல்லை தம்பிறான் மேஸ்திரிகளை விட்டு யெடுத்துக் கொண்டு போய் அந்த கொளத்தை வேலை செய்குறானென்று சொன்னார்கள் அதன் பேரில் குஞ்சா செட்டியார் திருவண்ணாமலையிலிருக்கும் பந்துகர் கோல்கார மொட்டைய செட்டியார் எழலன் பச்சியப்ப செட்டியார் பூசாலி பச்சியப்ப

செட்டியார் சடையப்ப செட்டியார் திருவேங்கிட செட்டியார் நாகமணி செட்டியார்

பின்பக்கம்

வெள்ளவேங்கான் செட்டியார் மன்னபெருமாள் செட்டியார் நெட்டகால் சந்தியப்ப செட்டியார் மைத்து முண்டான [மற்றுமுண்டான] பந்துக்களனவரும் கார்த்திகை உச்சபத்திற்கு வந்த காஞ்சீபுரம் படுதா செட்டியார் திருவேங்கிட செட்டியார் பச்சவேங்கிட செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் மலையனூர் பூங்காஞ்செட்டியார் அப்பாசாமி செட்டியார் முனிசாமி செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் படவீடு

ஏடு–5

அதிக வீறப்ப செட்டியார் யெல்ல முதலி செட்டியார் யிரிச்சப்ப செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் ஆற்காடு அஞ்சிபேட்டையாரும் அனைவரும் கூடிக்கொண்டு திருவண்ணாமலை சர்க்காரிலே போய் தாசீல்தார் கேசவறாய அய்யறோடே நடந்த சங்கதிகளை சொல்லிக் கொண்டோம் கோவில் நயினாக் குருக்களைஅழைப்பித்தார்கள் திருவண்ணாமலை மணியம் நயினாத்தை நயினாரையும் பல பட்ரை பஞ்சாயத்தாரையும்

பின்பக்கம்

அழைப்பித்தார்கள் சோணாசல தம்பிறானையும் அழைப்பித்தார்கள் அவனை விஜாரிக்கும் போது அந்த சாதனகல்லை பூ மாந்தை கொளத்தின் கரையில் புதைத்து வைத்து யெடுத்து குடுத்தான் அதை வாசிக்கும் போது பல பட்டரை பஞ்சாயத்தாரும் தாசீல் கேசவய அய்யர் முன்பாக பட்டணம் கோவிந்த செட்டியாரும் பல பட்டரை பஞ்சாயத்தாரும் கோவில் குரு நாதசுவாமியும் வாணியர் தர்மந்தான் என்று சொல்லி போட்டார்கள்

ஏடு–6

அதன் பேரில் சோணாசல தம்பிறான் அந்த தற்மம் அவாள்ளுது ஆயி போச்சுதே நான் கொளத்திற்கு வேலை செய்வதற்காக குடுத்த விறாகன் நூத்தி பதினெட்டு கணக்காயிருக்கிறது அதை குடுத்து விட்டால் உங்களுதுதான் தற்மமென்றுமேற்படியாறோடே சொல்லிக் கொண்டான் மேற்படியாரும் பத்து பேர் தற்மமானதினால் உனக்கு விறாகனை நாற்பத்தி யெட்டு னாளைக்குள்ளாக குடுத்து விடுகிறோம் அந்த கெடுவு தப்பினால் அந்த தற்மம் சோணாசல தம்பிறானதுதான்

பின்பக்கம்

யென்று மேற்படி பஞ்சாயத்தார் சொல்லி போட்டார்கள் அதன் பின்பு வாணியர் அனவருங்கூடி கோவிலுக்குப் போனார்கள் போன விடத்தில் சுவாமிக்கு அந்து விறாகன் அபிஷேகம் குடுத்து சுவாமி தெரிசினம் ஆன பின்பு நாற்தாம் பூண்டி பட்டர் மணியம் முனிஷீப்பு குஞ்சா செட்டியார் பந்துக்களை நான் ஊருக்குப் போறேனென்று கேட்டார்கள் அதற்கு பந்துக்கள் யின்னேரம் பாடுபட்ட வேலை யென்ன நீங்கள் ஊருக்குப்-

ஏடு-7

போறேனென்று சொல்குறீரே அது தகுதியல்ல வென்று பத்து பேரும் சொன்னார்கள் அதற்கு குஞ்சா செட்டியார்அந்த கொளத்திற்கு லஷ விறாகன் வேலையிருக்கிறது யென்னாலேயும் ஆகாது யிந்த ஊர் வாணிய றாலேயும் ஆகாது யென்று சொன்னார் மேற்படியார் பந்துகளும் யிந்த சன்னதி முன்பாக யிந்த வாற்தை சொல்லாதேயென்று சொல்லி நீரேயிருந்து வேலையை முடிக்க வேண்டும் யென்று சொன்னதிற்கு

பின்பக்கம்

நீங்களனவரும் எனக்கு கையொப்பம் செய்து குடுத்தால் நானே யிருந்து வேலையை முடிக்குறேன்அப்படியே அந்த பத்து பேரும் கையொப்பம் குடுத்தார்கள் அதன் பிறகு சோணாசல தம்பிறான் கடனுக்குகுஞ்சா செட்டியார் சறாப்பிலே போய் நூத்திபதினெட்டு விறாகன் வாங்கிக் கொண்டு வந்து சோணாசல தம்பிறானை தேடும் போது அவன் ஒளித்துக் கொண்டான் பிறகு திருவண்ணாமலை தாசீல்தார் கேசவ-

ஏடு-8

றாய அய்யர் முன்பாக செலுத்திவிட்டேன் பிற்பாடு ஆலோஜனை செய்யும் போது மலையனூர் பூங்காஞ் செட்டியார்மைத்து முண்டான (மற்றுமுண்டான) பந்துக்கரும் (உறவினர்களும்)காஞ்சீபுறம் படுதா செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் படவீடு அதிகவீறப்ப செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் வேலூர் திருவேங்கிட செட்டியார் மைத்து முண்டானபந்துக்கரும் சந்தவாசல் பெரிய வீறப்ப செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் களம்பூர் முத்துமணி

பின்பக்கம்

செட்டியார் மத்து முண்டான பந்துக்கரும் விளாங்குப்பம் யெல்லப்ப செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும்யெககலாபுறம் ஆண்டியப்ப செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் கொளத்தூர் குய்யம்

வெங்கிடாசலசெட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் போளூர் பச்ச வேங்கிட செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் அத்திமூர் திருவேங்கிட செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் விலவாறணி அருணா-

ஏடு-9

சல செட்டியார் மத்துமுண்டான பந்துக்கரும் கலசபாக்கம் முத்துதம்பி மைத்து முண்டான பந்துக்கரும் அருணகிரிமங்கலம் மெய்போக செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் மகாதேவிமங்கலம் குருநாத செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் புதூர் வெங்கிட்டாம் பாளையம் பெருமாள் செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் மூலக்காடு அருணகிரி செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும்

பின்பக்கம்

கடலாடி சுப்புறாய செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் கீழப்பாலூர் கோனேரி செட்டியார் வடமலை செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் மேலப்பாலூர் ஆண்டியப்ப செட்டியார் முனிய செட்டியார் பனஓலப்பாடி மெய்யாண்டி செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் செங்கமாவு தாண்டவறாய செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் புதுப்பாளையம் பச்சியப்ப செட்டியார் கோலகாற மொட்டைய செட்டியார் மைத்து முண்-

ஏடு-10

டான பந்துக்கரும் திருவண்ணாமலை எழலன் பச்சியப்ப செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் யிவர்களனவரையும் நாற்தாம் பூண்டி பட்டர் மணியம் முனிசீப் குஞ்சா செட்டியார் வறவழைத்து ஆனமல்லூர் அம்மன் கோவிலண்டைகூட்டம் போட்டு ஆற்காடு அஞ்சி பேட்டையாருக்கு ஓலை குடுத்து வறவழைத்து நம்முடைய ஜாதியில் யேற்பட்ட அக்கினி தீற்த்ததுக்கு வேலை செய்வதற்காக செல்லுமான விறாகன் யெவ்வளவோ அதை உங்கள்

பின்பக்கம்

யாவத்ராளையும் கேட்டுக் கொள்ளுகிறேன் இதற்கு விபஜனை சொல்லும் வரைக்கும் தாங்கள் தங்கள் தொழிலை செய்யத்தகாது அப்படி மீறி நடந்ததேயாமானால் மடத்துக்கும் யினத்துக்கும் பெரியோர்களாலே யென்ன வில்லங்கம் யேற்படுதோ அதை யேற்றுக் கொள்ள வேண்டியது பிறகு யிவர்களுக்கு சாப்பாட்டுச்சிலவு தினம் ஒண்ணுக்கு சத்துவாச்சாரி மரக்காலில் ஐ கலனே தூணி பதக்கு அரிசியும் சாத்துச்சிலவு

ஏடு-11

அந்து விறாகனும் சிலவு இப்படியிருக்கும் போது ஆற்காடு ராஜா அசறகிறுது கான் சாய்ப்பு காசம் சாய்ப்பு இவர்களிருவரும் நம்பள் தேவடிக்கு தீபத்துக்கு யெண்ணெய் வராத காறணமென்ன வென்று ஒரு வெள்ளித் தடிக்காறனை அனுப்பி வைத்தார் அவன் ஆற்காடு அஞ்சிபேட்டையாரையும் பார்த்து இரண்டு மூன்று நாளாய் யெங்கள் தேவடிக்கு தீபத்திற்கு யெண்ணையில்லாமல் படிக்கு யெங்கள் ராஜா யென்னை அனுப்பி வைத்தார் யென்று

பின்பக்கம்

கேழ்க்கும்போது அதற்கு மேற்படியார் அஞ்சிபேட்டையார் யெங்களுக்கு பெரிய செட்டியார் குஞ்சா செட்டியார் அக்கினி தீர்தம் வேலை செய்வதர்கு தற்மத்துக்காக யென்ன யோஜனை யென்று யெங்கள் யாவத் றாளையும் ஒரு வேலையும் செய்யக்கூடாது யென்று சொன்னார் அதினால் தான் யெண்ணை வராமல் நின்று விட்டது யென்று அந்த வெள்ளித்தடிக்காறனோடு சொன்னார் பிறகு வெள்ளித்தடிக்காறன் நடந்த சங்கதிகளெல்லாம் ராஜாவோடு போ-

ஏடு-12

ய் சொன்னான் அதற்கு ராஜா மறுபடி போய் அந்த பெரிய செட்டியாரை அழைத்துக் கொண்டு வாவென்று உத்திறவு செய்தார் வெள்ளித்தடிகாறன் வந்து பெரிய செட்டியாரை சீக்கிறத்தில் அழைத்து வாவென்று சொன்னவுடன் பெரிய செட்டியார் யென்ன செய்தாறென்றால் தூணி யெள்ளைக் கழுவி செக்கிலே கொட்டி அரைத்து வாரி சர்க்கரை கலந்து ஒரு குடத்தில் வாரிக்கொண்டான் வாழைப்பழம் பிலாப்பழம் மிந்திரி

பின்பக்கம்

பழம் பேரிகாய் கொய்யாம்பழம் அன்னாசிப்பழம் தாடிப்பசுந்து கற்பூரப்பசுந்து மாம்பழம் பேரீச்சம்பழம் அத்தர்புனுகு பன்னீர் சவ்வாது சந்தணம் வெத்திலை பாக்கு தேங்காய் மல்லிகை புஷ்பம் இதுகளெல்லாம்நிறை நிறையாய் தட்டில் வைத்துக் கொண்டு எருதின் பேரில் டங்கா சின்னம் முறசு யெக்காளை பூரிகை மல்லரி உடுக்கை பம்பை வேலு உலக்கை மழுவு கத்தி யெித பதினெட்டு வாத்தியம் தாம் தாமென்

ஏடு-13

று முழங்க ராஜாவுக்கு குஞ்சா செட்டியார் வரிசை கொண்டு போகும் போது ராஜா யெதிரில் வந்து அழைத்துக் கொண்டு போய் சிலாம் குடுத்து யெதிரில் ஒரு குரிசி குடுத்து உட்காற வைத்தார் ஜோடு பாகை சொக நாத சிருப்பு குடுத்தார் அதின் பிறகு யென்னை நீர் அழைத்த காறணமென்னவென்று குஞ்சா செட்டியார் கேட்டுக்கொண்டார் யெங்கள் தேவடிக்கு யெண்ணை வறாமல் போனதை பற்றி உம்மை வறவழைத்தேனென்று

பின்பக்கம்

ராஜா சொன்னார் பிறகு குஞ்சா செட்டியார் அக்கினி தீற்தம் காலியாயிருக்கிறபடியால் வேலை செய்வதற்கு தற்மவிஷயமாய் யெங்கள் யினத்தாரை பத்து பேரையும் அனைவரையும் கூட்டி பேசுகுறது போது அதினால் தான் யெண்ணைவறாமல் தவறி விட்டது யென்று சொன்னார் அதற்கு ராஜா சந்தோழப்பட்டு உங்களுடைய ஆனைஆக்கினைக்கி மீறி தவறி போறவனை ஜானு காயத்தால் கட்டி வெட்டிப் போடும் படி வெட்டருவாளும்

ஏடு-14

குடுத்து ஆக்கிரனை செய்யும் படி கையொப்பமும் பட்டையமும் ஒப்பி வைத்தார் அதன் பிறகு குஞ்சா செட்டியார் ஆற்காடு அஞ்சி பேட்டையாரையும் தற்மத்திற்கு யென்ன யோஜனை செய்தீர்கனென்று கேட்டார் அதற்கு அஞ்சிபேட்டை செட்டியாரும் மண்டிகளுக்கு ஆரு பணமும் கடைகளுக்கு மூணு பணமும் யெண்ணை மண்டிக்கி நாலு பணமும் தக்கடிக்கி மூணு பணமும் பல்லாயிக்கு ஒரு பணமும் பொதி மாட்டுக்கு பெரிய துட்டு

பின்பக்கம்

ஒண்ணும் வசூல் பண்ணும்படியாய் உண்டு பண்ணா சொன்னார்கள் அதன் பேரில் குஞ்சா செட்டியாரும் சென்னப் பட்டண முதல் கொண்டு மூன்று ஸ்தளத்திலேயும் ஆற்காடு அஞ்சிபேட்டையிலேயும் புதுப்பேட்டையிலேயும் யிந்த அக்கினி தீற்தம்தற்மவிஷயத்துக்கு தண்டல் பண்ண விறாகன் பன்னீறாயிறத்தி இரனூத்தி இருபத்தி அஞ்சே காலறிக்கா விறாகனும் குஞ்சா செட்டியார் வசம் சேற்த்து அந்த தற்மத்தை நடத்திக் கொள்ளுகிற விதம் யெப்படியோ அப்படி

ஏடு-15

**கோருகிறோம் யிந்த விறாகன் சார்வதி வருஷம் தை மாதம் 15 தேதி வரையிலும் தண்டலிட்ட விறாகன் வேலை செய்து சென்று விட்டது பட்டணம் கோவிந்த செட்டியார் நூரு விறாகனும் குடுத்து மகா மண்டபமும் கட்டச்சொல்லி யோ்ப்பாடு செய்தார்குஞ்சா செட்டியார் மறுபடியும் தண்டலுக்கு போகும் போது சந்தவாசலில் வீறப்ப செட்டியார் தன் யினத்தில் ஒரு ஸ்திரீயை சேர்ந்த தோஷத்திற்கு பத்து பேரும் சேற்ந்து கேழ்வி கேழ்க்கும் போது மறு உத்தாறம் சொல்லாத-**

பின்பக்கம்

**தினால் அவனை ஆள் பையில் போட்டு கட்டி தூக்கிக்கொண்டு போய் கோவிந்த யிரிச்சய்ய செட்டியார் கொளத்தில் போட்டு மெறித்து அவனிடத்தில் நூரு விராகனும் வாங்கி மடமும் கட்டச் சொல்லி என்னிடத்தில் குடுத்தார்கள் இது தவிற தேசத்தில் தண்டல் செய்த விராகன் பதினோறாயிரத்தி இரனூத்தி அன்பதும் தண்டல் செய்து தற்மத்தை நடத்தும் படியாக ஒப்புக்குடுத்தார்கள் அது முதல் கொண்டு தற்மத்திற்கு ஒரு விகல்பமில்லாமல் நடந்து**

ஏடு-16

**வருகிறது பண்ணுருட்டி வெங்கிடாசல செட்டி பிள்ளையார் கோவில் கட்டும்படி அன்பத்தாரு விறாகனும் குடுத்து வேலையை நடத்தும் படியாய் ஒப்புக்குடுத்தார் வேலை பூற்தியான பிறகு கும்பாபிஷேகம் ஆனதிற்கு விறாகன் செண்ணது ஒம்பனாயிறத்தி இரனூரும் சிலவு செய்து ஆன பிறகு அங்கே யிருந்த பந்துகளனவரும் கூடி குஞ்சா செட்டி வம்மிஷத்தில் புத்திர பவுத்திர உள்ள மட்டும் புல்லு பூமியுள்ள வரைக்கும் தற்மகற்தா செட்டியாற் யென்றதை தள்ளி**

பின்பக்கம்

**விட்டால் அக்கினி தீற்தத்து கறையின் பேரில் காறாம் பசுவை அருத்த தோஷத்தில் போறோமென்று கையொப்பம் குடுத்தார்கள் இந்த கையெழுத்து எழலன் பச்சியப்ப செட்டியார் பூசாலி பச்சியப்ப செட்டியார் கையெழுத்து சிங்குவாதா செட்டியார் பழனி செட்டியார் குட்டைய செட்டியார் சித்தம்பல செட்டியார் பேறம்பல செட்டியார் மைத்துமுண்டான பந்துக்கரும் கையெழுத்து பாலூர் கோனேரி செட்டியார் சுப்புறாய செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும்**

ஏடு-17

கையெழுத்து மேலப்பாலூர் முனிய செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் கையெழுத்து மூலக்காடு யெல்லமுதலி செட்டியார் மைத்து முண்டான பந்துக்கரும் கையெழுத்து சோபகிருது வருஷம் சித்திரை மாதம் 15 தேதி வரையிலும் யிந்த தற்மத்திற்கு ஒரு விகல்பமில்லாமல் நடந்து வருகிறது மருப்படி காற்திகை உச்ச பத்தும் போது கையெழுத்து செய்தவர்களெல்லாம் குஞ்சா செட்டியாருக்குப் பிறகு தற்மத்து வேலையை யார் பாக்குறது

பின்பக்கம்

யென்று கேட்டார்கள் திருவண்ணாமலை கோல்கார மொட்டைய செட்டி குஞ்சா செட்டிக்கும் பிறகு யிந்த வேலையை பார்க்க யாருமில்லையென்று சொன்னான் அவர்களனவருங்கூடி குஞ்சாசெட்டிக் குமாறன் சின்னுவ செட்டியை அழைத்து யிந்த தற்மத்து வேலையை நடத்தும் படியாய் உத்திரவு செய்தார்கள் கல்யாணத்திற்கு ஆறு பணமும் அறிக்கால் வீசை பாக்கும் ஒரு கட்டு வெத்திலையும் தேங்காயும் குடுக்கும் படியாய் உண்டு பண்ணார்கள் சென்றனாள் போக

ஏடு-18

குஞ்சாசெட்டிக்கும் பிறகு சின்னாவ செட்டி தற்மத்து வேலையை பாற்து வரும் போது மறுபடி திருவண்ணாமலை சோணாசல தம்பிறான் வெள்ளாஞ்செட்டி அக்கினி தீற்தத்து தற்மத்தை பத்தி சுபாபிலே போய் சன்னது பண்ணி அசரகிருது சாய்ப்பு காசம் சாய்ப்பு இவர்களிருவர்களையும் பாற்து சலாம் செய்து அக்கினி தீற்த்தம் தற்மத்தை பத்தி செலவிட்ட ரூபாயை சென்று போன குஞ்சா செட்டியார் ஒன்றும் தீற்மானமாகாமல்ப் படிக்கி மறுபடி

பின்பக்கம்

சின்னுவசெட்டி பேரில் ராஜாவோடு சொல்லி வழக்கிட்டுக் கொண்டான் பிறகு ராஜா சின்னுவசெட்டியாரை அழைத்து கேழ்க்கும் போது என் தகப்பனார் குஞ்சாசெட்டியார் தீற்மானம் செய்து அந்த விறாகனை குடுத்து விட்டதாக பெரியோர்களால் யேர்ப்பட்டிருக்கிறது யென்று சொன்னார் அதற்கு சோணாசல தம்பிறான் றேமானமாகவில்லை யென்று சொன்னான் பிறகு திருவண்ணாமலை கோலகாற மொட்டைய செட்டி எழலன் பச்சியப்ப செட்டி பூசாலி பச்சியப்ப செட்டி சிங்குவாதா செட்டி

ஏடு-19

போஜனம் செய்தாலும் கோழி ஆடு வளர்த்தாலும் இதை விஜாரிக்கும் பொருட்டு நாங்களனவரும் குஞ்சாசெட்டி யார் குமாறன் சின்னுவசெட்டியாருக்கு உத்திரவு குடுத்திருக்குறோம். தஷணை கைலாசம் திருவண்ணாமலை அருணாசலேஸ்வரரும் அம்பிகையும் துணையாக. இதை வாசித்தோரும் கேட்போரும் எழுதினோரும் வாழி வாழி

பின்பக்கம்

யிவர்களெல்லாம் தேசத்தில் தண்டலிட்டு சோணாசல தம்பிரான் கடனை ராஜா முன்பாக எழு நூத்திஅறுபத்தி அஞ்சேகால் விறாகனையும் செலுத்தி விட்டு அக்கினி தீர்தம் தற்மத்தை மீட்டுக்கொண்டோம் யின்றைய வரையிலும் நம்பள் யினத்தார் அன்னியாள் வீட்டில் தாகத்திற்கு சாப்பிட்டாலும் சரி (இதற்குமேல் ஓரிரு ஏடுகளில்லை)

# 50. போத்தம்பாளையம் கல்வெட்டு

**ச.மு.ரமேஷ்குமார்,**அவிநாசி.
**து.சுந்தரம்,**கோவை.
**க.பொன்னுசாமி,**பல்லடம்.

**இடம்:** *திருப்பூர் மாவட்டம், அவிநாசி வட்டம், போத்தம்பாளையம் வேணுகோபால சுவாமி கோயில்*

**காலம்:** *பொ.ஆ.18ஆம் நூ*

**செய்தி:** *சுப்ரமணியர் சிலை அமைத்தமை*

1. **[சுப்ர]மணியன் சிலை**
2. ………………..
3. **சறுவதரி வருசம்**
4. **அப்பிசை [மா]தம்**
5. **15 தேதி செல்லி-**
6. **ன குப்பயி மகள்**
7. **பாகாயி சி**
8. **[லை] வய்தன்ம**
9. **முதல் பெரும**
10. **தனகோபால்**

# 51. ஆலங்குடி வட்டத்தில் சில கல்வெட்டுகள்

த.தங்கதுரை,பாத்தம்பட்டி.

## 51:1

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், ஆலங்குடி வட்டம், கீரமங்கலத்தை அடுத்த சேந்தன்குடி பெரியாத்தாள் ஊருணி வடகரை குமிழி மடை

**காலம்:** *சகம் - 1730, கலியுகம்- 4696, விபவ, 23 =பொ.ஆ.1808,*

**செய்தி:** தென்தானவ நாட்டை சேர்ந்த ஜெயநகரத்திலுள்ள ஸ்ரீபாலசுப்பிரமணியர் சுவாமி கோயில் குறித்தும் இடும்பன் நதிக் கண்மாய்க்குறித்தும் குறிக்கப்பட்டுள்ளது.



1. சுபமஸ்து
2. சாலிக வா-
3. கன சதாற்த-
4. ம் 1730 கலியு-
5. க சகாப்$_3$தம் 49-
6. 09 ம் [மெல்]
7. செல்லா நின் -
8. ற வாரம் உத்-
10. திராட நட்செ-
11. த்திரத்தி கூ-
12. டின சுபதின-
13. த்தில் தனுசு
14. லெக்கினத்தி-
15. ல் தென்னாடு க-
16. றை வளநா-
17. டு தெந்தா-
18. னவ(ன) நாட்-
19. டில் செய நக-
20. ரம் பிள்ளையா
21. சுப்பிறமணி-
22. ய சுவாமி கொ-
23. யில் த . . ம .

24. ம் இடும்பன்

25. நதி கம்மாய்-

26. க்கு

## 51:2

**இடம்:** மேலது, வடகாடு பிலாக்கொள்ளைபகுதிஆனந்தன் என்பவருக்கு சொந்தமான நிலத்திலுள்ள சூலக்கல்.

**காலம்:** பொ.ஆ.19ஆம் நூ

**செய்தி:** பிரளைய விடங்கன் எனும் சிவன் கோயிலுக்கு வ ட காட்டில் சந்தையில் ஆயம் வரி தன்மமாக கொடுத்தமை



1. பிர-
2. ளை-
3. ய-
4. விடங்-
5. கற்கு
6. வ ட காட்டி-
7. ல் சந்தயி-
8. லாயம் அ-
9. ரச மானிய
10. ர் தன்ம-
11. ம்

# 52. அரித்துவார மங்கலம் கல்வெட்டு

இரா.கார்த்திகேயன்,ஒரத்தநாடு

**இடம்:** திருவாரூர் மாவட்டம், வலங்கைமான் வட்டம், அரித்துவாரமங்கலம் விநாயகர் கோயில் .

**காலம்:** பொ.ஆ.1896

**செய்தி:** நிலம் தானமாக வழங்கப்பட்டது.

1. உ
2. 1896 வருடம் சூ துன்-
3. முகி வருடம் வைகா-
4. சி மீ 17 அப்பாவு-
5. னார் மகன் வீற றாக-
6. வனாறால் இந்த சா-
7. ந்தப் பிள்ளையா-
8. ர் கோயிலை கட்டி கு-
9. ம்பா அபிஷேகம்
10. செய்து கட்டலையி-
11. ல் மா.5.80 குழி நஞ்சை
12. யை தானசாதனமா-
13. க விடப்பட்டிருக்கிறது.

# 53. தோவளை, அகஸ்தீஸ்வரம் வட்டாரக் கல்வெட்டுகள்

**செந்தீ நடராசன்,** நாகர்கோவில்

**53:1**

**இடம்:** கன்னியாகுமாரி மாவட்டம், தோவாளை வட்டம். பூதப்பாண்டி அருகில் உள்ள சீதப்பால், அவ்வையாரம்மன் கோவில் சாலையின் கிழக்கில் உள்ள பாறைக்கல்

**காலம்:** பொ.ஆ.18-19ஆம் நூ

**செய்தி:** பத்மநாப நல்லூர் ஊர் குறிப்பிடப்பட்டுள்ளது. சீதப்பால் எனத் தற்போது அறியப்படும் ஊர் முன்பு ஸ்ரீபத்மநாப நல்லூர் என வழங்கப்பட்டதை அவ்வூர் கோவிலின் அறநிலையத்துறை ஆவணத்தில் இருந்தும் அறிய முடிகிறது. இப்பெயரும் பொ.ஆ. 1750 ற்குப் பிறகே வந்திருக்கவேண்டும். வேணாட்டு அரசர் வீர மார்த்தாண்ட வர்மா ( 1729 - 55) நாட்டை 1750 ஐ ஒட்டி திருவனந்தபுரம் ஸ்ரீ பத்மநாப சுவாமிக்கு அர்ப்பணித்த பின்னரே இது நிகழ்ந்திருக்கவேண்டும்.

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ**
2. **வெட்டு கு செந்தில் ராம்**
3. **ஸ்ரீ பத்மநாப நல்லூர்**
4. **சுபமஸ்து**





## 53:2

**இடம்:** மேற்படி மாவட்டம், அகஸ்தீஸ்வரம் வட்டம். கொட்டரரம் ஊர் கல்மண்டபத்தின் வெளிப்புற வலது தூண்.

**காலம்:** கொல்லம் *1035*, வைகாசி, *11=1860*

**செய்தி:** ராமநாதபுரம் பேட்டை செட்டிச்சி வயிரமுத்து இருளம்மை என்பார் கல்மடமும் அதில் சிலை (இறக்கி) வைப்பதற்கான தாங்கியும் அமைத்தமை. கொட்டாரம் என்ற இவ்வூர் ராமநாதபுரம் பேட்டை என வழங்கியதாகத் தெரிகிறது.



1. 103-
2. 5 வருடம் வை-
3. காசி மாதம்
4. 14 தேதி ரா-
5. ம நாதபு-
6. ரம் பேட்-
7. டையி-
8. லிருக்-
9. கும் செ-
10. ட்டிச்சி
11. வயிர மு-
12. த்து இரு-
13. ளம்மை
14. வச்ச க-
15. ல் மடமு-
16. ம் சில-
17. தர ங்கி
18. யும் யிந்த
19. பணி வக-
20. க்கு சில
21. உ101-
22. 1

# 54. கொட்டாரம் கோவில் கல்வெட்டு

செந்தீ நடராசன், அ.கா.பெருமாள்,நாகர்கோவில்

**இடம்:** கன்னியாகுமாரி மாவட்டம், அகஸ்தீஸ்வரம் வட்டம். கன்னியாகுமரி அருகில் உள்ள கொட்டரரம் என்ற ஊரில் உள்ள ராமநாதபுரம் ஊர் செட்டு வெள்ளாளர் சமூகக் கல்பக விநாயகர் கோவிலில் கிடைத்தத் தனிக்கல்.

**காலம்:** கொல்லம் 1036, சித்திரை,9=1861

**செய்தி:** கோவிலுக்கு மடப்பள்ளியும் முத்துச்சிவிகையும் செய்து கொடுத்தமை

1 [ஸ்வஸ்தி ஸ்ரீ விரிச்]
2 [சக]ம் சனி யில் க-
3. ற்க்கடக வியாழ-
4. ம் நின்ற கொல்லம்
5. 10 36 வருடம் துற்-
6. முக வருடம் சித்திரை மாதம்
7. தியதி புதன் கிழமை
8. யும் புனர் [வ] சு நச்ச-
9. த்திரம் பூறுவ பச்-
10. சத்து [சஷ்டி] யும் [சு
1. கர்ம] யோகம்
2. கெஜகர்ண னா
3. யிருக்கிற ஸ்ரீ கணபதி
4. னா [ய] கல்பக
5. வினாயகா கோவில்
6. மடப்பழி செயித-
7. து தாணுபிள்ளை நாரா-
8. யணன் கணக்கா-
9. யிட்டு முத்துசிவிகெ யும்
10. தாணுபிச்ச நாரா-
11. யணனுக்கு பிள்ளயா
12. ர் சதாசேவை சுபமஸ்து



# 55. தொண்டைமண்டலத்தில் சில கல்வெட்டுகள்

இரா.சுபாஷனி, சென்னை

**55:1**

**இடம்:** காஞ்சிபுரம் மாவட்டம், உத்திரமேரூர் வட்டம், படூர், ஊர் மண்டபத்தின் முன் நடப்பட்டுள்ள கல்

**காலம்:** பொ.ஆ.19நூ

**செய்தி:** திருமலை நாயுடு என்பவர் நிலம் தானமாக வழங்கியமை



1. எம்பெரு
2. மானார் திருவ
3. டிகளை சரண
4. ம்

1. உத்திரன் மேருரடி விஜனிலாதா
2. 259 நெ படு ஊர் பெருமாள் கோ-
3. வில் தர்மகர்த்தா திருமலை நா-
4. யடு எழிதிவைத்த சிலாஸாஸ-
5. னம் னடி படுஊர் மதரா உழுதவா-
6. டியில் 28 நெ பட்டாவில் தாக்-
7. கலாய் வரும் அடியில் கண்ட
8. நிலங்கள் என் சுயாரிச்சிதம்தை
9. இதில் கண்ட தர்மங்களுக்கு விட்டு
10. விட்டேனாகை யாவிதை யாராவ-
11. து கேடு செய்தால் காராம் பசுவை
12. கொன்ற தோஷமடைய வேண்டியது
13. படூர் பெருமாளுக்கு விட்டது 158-நெ 066
14. 125.நெ.எ.வ தெரு 117டிக. 047 ஆக நெ டி 13
15. ஸ்ரீ பெரும்பூதூர் தண்ணீர் பந்தற்கு
16. 143-ல.வ. 0.66 காஞ்சிபுரம் 143.ல கெ. 066
17. திருப்பதி மேற்படி நெ மே.0.66 டி 125ல் 139
18. கா மணவாளமாமுநி சந்திக்கி 158 ல்
19. 0.32 யீ ஆசாரியர் சன்னதிக்கி 158ல்

20. தெ.எ.10 மேற்படியார் தீர்வை கட்டி மேல்

21. வாரம் அடையவும் யிந்த நி -

22. லங்களை என் குமாரன் யா-

23. தவ கிருஷ்ணசாமி னாயடு சாகு-

24. டி செய்து சற்கார் தீர்வை கட்டி தோ-

25. நே குடிவாரம் 2 பங்கு எடுத்துக் கொ-

26. ள்ளவும் மேல் வாரம் 1 பங்கை மேற்படி

27. தர்மங்களை நடத்தி வரவும் தவறி

28. னால் ஜி கோமகள் திட்டையூர் சி.கோ-

29. தண்டனும் நாயடு மேற்படி பராங்குச நா-

30. யடு புருஷோத்தம நாயடு சுபம்

## 55:2

**இடம்:** மேலது, பொன்னேரி வட்டம், திருப்பாலைவனம் கோயில் மண்டபத் தூண்

**காலம்:** பொ.ஆ.1912

**செய்தி:** கோனார் முனிசாமி பண்டிதர் மனைவி அகிலாண்டாம்மாள் கொடுத்த தூண்

1. 1912
2. இ.பிப்-
3. ரவரி மா
4. ..உ
5. கோணார்
6. தி முனி
7. சாமி பண்-
8. டிதர் பாரி-
9. யாள்
10. அகிலாண்
11. டம்மால்
12. கையிங்-
13. கிரியம்
14. தூணு



## 55:3

**இடம்:** மேலது

**காலம்:** *20நூ*

**செய்தி:** *சாமிபண்டிதர் மனைவிஅன்னம்மாள் என்பவர் மற்றொரு தூணை தானமாக கொடுத்தமை.*



1. பெ. மே-
2. ளும் சாமி பண்-
3. டிதர் பாரி-
4. யாள்
5. அன்ன-
6. ம் மாள்
7. கைங்-
8. கிரியம்
9. தூணு

# 56. திருவள்ளூர் பகுதி கல்வெட்டுகள்

ச.கிருஷ்ணமூர்த்தி,சென்னை

## 56:1

**இடம்:** *திருவள்ளூர் மாவட்டம்,வட்டம், திருவள்ளூர், வீரராகவப் பெருமாள் கோயில் கொடிமரத்திலுள்ள பித்தளைப்பகுதி.*

**காலம்:** *ஈஸ்வர வருஷம், கார்த்திகை, 23=பொ.ஆ.19ஆம் நூ.*

**செய்தி:** *தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கில் கொடி மரம் ஏற்படுத்திய விவரம் வெட்டப்பட்டுள்ளது. 41வது பட்டம் (அகோபில மடத்தின் தலைவர்) அழகிய சிங்கர்ஜீயரின் உருவமும் உள்ளது. தமிழ்க்கல்வெட்டு தாமரைப்பீடத்தின் மேற்கு, தெற்கில் தொடர்ச்சியாக உள்ளது. சமஸ்கிருதம் மற்றும் தெலுங்குக் கல்வெட்டு சதுரப்பீடத்தில் உள்ளது. காமதேனு, கர்ப்பக விருட்சம், முனிவர் சிற்பம் ஆகியவை உள்ளன.பொற்கவசம் செய்தமை இரண்டாவது பொறிப்பில் உள்ளது.*

1. **முன் கனகம்மா[வா]ல் பிரதிஷ்டிதமான இந்த துவஜஸ்தம்பம் சாய்ந்து விட்டதால் இந்த தேவஸ்தானம் பரம்பரை தர்மகர்த்தா ஸ்ரீ அகோபில 41வது பட்டத்தில் மூர்த்தி ரபிக்ஷக்தராய் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ வன்சடகோப ஸ்ரீ லக்ஷமி நரசிம்ம.**
2. **சடகோ யதீந்திர மகாதேசிகறால் மேல்ஜோடத் தவலை தவிர மரம் தங்ககமலம் கீழ் கட்டடங்கள் பிரதிஷ்டை முதலியவைகளுக்கு திரவியம் ஸாதிக்கப்பட்டு ஈச்வரஸ்ரீ கார்[த்]திகை மாதம் 23நாள் க்ஷ.**
3. **தேவஸ்தான மஹாநாரி ஏஜண்ட் ஸ்ரீமான் சேட்டலூர் பருத்திச்சேரி கிருஷ்ணசாமி அய்யங்கார் மூலம் பிறதிஷ்டை நடத்தி முடிக்கப்பட்டது சுபம்.**

56:2

**இடம்:** மேலது

**காலம்:** *பொ.ஆ.19ஆம் நூ*

**செய்தி:** கவசம் அமைத்தமை

1. **ஸ்ரீ மதேராமாநுஜாய நம**
2. **ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹந சகாப்தம் 1733 க –**
3. **லியுகம் 4912 ப்ரபவாதி சகாப்தம் 40 இமலநகக் கவசம்**

56:3

**இடம்:** திருவள்ளூவர் மாவட்டம் கடம்பத்தூர் முக்தீஸ்வரர் கோயில்- திரிபுரசுந்தரி அம்மன் கோயில் மண்டப வெளித்தூண்

**காலம்:** *பொ.ஆ.1893*

**செய்தி:** துளுவ வேளாளசாதி மழவராயர் கோத்திரத்தைச் சேர்ந்த சுப்பராயமுதலியார் கோயிலுக்கு நிலக்கொடை வழங்கியமை.

1. **கலியுகாதி வருஷம் – 4994**
2. **விஜய வருஷம் – சித்**
3. **மீ – கடம்பத்தூ**
4. **ர் ஸ்ரீமுத்தீஸ்வர சுவாமி**
5. **யார் ஆலைய சந்தி கால**
6. **பூசைக்கி க்ஷயூர் மழ**
7. **வராயர் கோத்திரம் வே**
8. **ளாளசாதி கந்தசாமி**
9. **முதலியார் குமாரன் சுப்ப**
10. **ராய முதலியாராகிய நா**
11. **ன.. செ.கசவநல்லா**
12. **சாலை நஞ்சை**
13. **மே நெ. செங்கேணி புல**

14. டிஸ்மல-87 – 66 நெ. பிர

15. சாயிப்புதளை டிஸ்ம

16. ல் 4.6.144 நெ நாத் சிங்

17. கால் டிஸ். மல் 17217

18. நெ. கத்துகுழி டிஸ்மல்யு

19. ஆக ஏக்கர் சி-டிஸ்மல் 71

20. ம் இதில் வரிக்கப்பட்ட வ

21. ரும்படியை யேற்படுத்தி

22. யிருக்கிறே இதை

23. பற்றி 1892 வருஷம்

24. தர்ம்ம சாதன பத்திரம் எழுதி ரிஜீஷ்ட்

25. ரில் ரிஜிஸ்தர் செய்திரு

26. க்கிறேன். இந்தப்படி எழுதிவைத்த

27. சிலாசாசனம் எனப்பட்டது.

# 57. காவேரிப் படுகையில் கல்வெட்டு மற்றும் ஓலை ஆவணங்கள்

**ச.கிருஷ்ணமூர்த்தி,** சென்னை

**57:1**

**இடம்:** நாகப்பட்டினம் மாவட்டம், சீர்காழி வட்டம், சீர்காழி, நாகேசுவர முடையார் கோயில் வளாகத்தில் பொன்னாக வல்லியார் சன்னதி எதிரே தரையில் கிடந்த தூண்

**காலம்:** ஆற்காடு நாவபு? ,சித்திரை, மாசி, 15= பொ.ஆ.18நூ.

**செய்தி:** நவாப்பின் சுங்கவரி சாசனம் உள்ளது. பல்லக்கின் மீது வருபவர்க்கும் ஜீவிக்க பொருள்கொண்டு வருபவர்க்கும் வரியில் வேறுபாடில்லை. நவாப்பின் உத்தரவை மீறினால் 1200 பொன் வாங்க அரண்மனையார் ஆக்கினைசெய்ய வேண்டும். கல்வெட்டின் தொடக்கத்தில் இரண்டு வரி அராபி எழுத்து உள்ளது. பின் தமிழ்க் கல்வெட்டு உள்ளது.

1. **சித்தார்த்தி வருஷம் மா -**
2. **சி.மீ 15 வந்து க -**
3. **ன் ஆலி நவ்வாபு[ள]**
4. **தாலிதான் சாய்பு**
5. **கட்டளையாவது யி-**
6. **சுலாமானவர்களுக்கு**
7. **ம் அவர்கள் ஏறிவருகு-**
8. **ற பல்லக்கு திரையா -**
9. **தூக்கும் தீருவையில் ஜீ-**
10. **விக்க கொண்டு வ-**
11. **ருகிற சரக்குக்கு தீரு-**
12. **வை வாங்குறதுக்கு [மேல்]**
13. **வாங்கினால் அரமனை-**
14. **யார் ஆயிரத்தி யிருநூ-**
15. **று பொன்னும் வாங்கி ஆ-**
16. **க்கினையும் பள்ணுவா-**
17. **ர்கள் யிதுக்கு யிசுலான-**
18. **வர்கள் வியாதம் பண்-**

19. ணினால் வெத்துத்தரு-

20. மாது கொண்டா வன-

21. தமுளார் வியாதம் பண்ணி-

22. னால் கங்கைக் கரையில்

23. காராம் பசு கொண்ட

24. தோஷத்தாவார்கள்

## 57:2

**இடம்:** *தஞ்சாவூர் மாவட்டம், வட்டம். நல்லிச்சேரி, தனியாரிட மிருந்து பெறப்பட்டது.*

**காலம்:** *பொ.ஆ.1834*

**செய்தி:** *நிலம் கிரயம் செய்தமை*

**பக்கம்-1**

1. **ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1756 கலி 4935 யிதின் மேல் செல்லாநின்ற 1834ம் வருஷம் சூலாயி மீ 7க்கு சறியான.**

2. **செயவருஷம் ஆனிமீ 20 தேதி நல்லிச்சேரியிலிருக்கும் வயறச்சேரி ஆதிசுப்பிரமணிய்யனெங்குற வேம்பு வய்யனுக்கு மேற்படியூரில் அகரத்திலி[ருந்து] யெறுந்துபோன சாத்தி அய்யாதுரை அ.**

3. **ய்யன் புத்திரன் றாமசுவாமியய்யன் பங்கு வழி நஞ்சை நிலம் ஸஹிரஸோதக தார பரகமாக சுத்த கிரய சாஸநம் பண்ணிக் குடுத்தபடி யித்தனை னான் மேற்படி நல்லிச்சேரி கிறாம கெண.**

3. **சங்கர பாகம் பங்கு 32இல் யென் சகோ திறாளும் னானும் பண்ணிக் கொண்ட விபாக பத்திரம் ஒடம்படிக்கை ஆதிரபிறகாரம் எனக்கு சேர்ந்த பங்கு.... ந்தில் 3 தமக்கு.**

4. **ஸஹிர ஸோதகயார் பூர்வமாக னான் சுத்தக்கிரய சாஸநம் பண்ணிக் கொடுத்து பங்கு 3 இந்த மூணு வீசம் பங்கும் 3 விவரம் கண்டு நீ பதிவும் குடுத்து மேற்படி 3.**

5. **பங்கும் உபயாந்தமாயி நிச்சித்த மூலியம் யின்னேறம் கும்பினி செலவாக்கு ரெண்டு பண வெள்ளி மேற்படி 80 இந்த யென்பளது பொன்னையும் பற்றிக்கொண்டதுக்கு விவரம்.**

6. **கல்லியாணத்துக் கென்று என்றுனெறு .... ய இருபோக பாகி - 65 - காப்புவாங்கி அதையிந்த சாஸனத்தில் கண்ட பூமியின் பேரில் அனுபோக ஒத்தியாலே முன்னாலே.**

7. குடுத்த மேற்படியூற் கைலாசய்யன் கடனுக்கு றொக்கத்தில் செலுத்தி ஒத்தியைத் திர்த்து வாங்கின ஆத்திரவுடனே நீ யிதையு மீட்டு தம்முடயல் 4 படுத்தி அவ்வி...றங்கண்டு பண்ணிக்குடுத்த சுத்த.

பக்கம்–2

8. கிரய சாஸனத்தை கட்டிக் கொண்டு அசலொப்பந்தம் யிந்த மூறு.

9. வீசம் பங்குக்கும் வரும் 3 திடல்திட்டு மரவடைமாவடை தோப்பு.

10. துரவு குளகுட்டை நத்தம் தெருவிருப்பு அடிச்சேறி பறச்சேறி கம.

11. றடை ஊட்டமான பிஞ்சருள்பட்ட முரயிகிறாம நாங்கெல்லை உள்.

12. பட்ட சகல சமுதாயங்க ளுடனே ஆசந்திறற் றாயியாய் ப்ரகு.

13. வளபாறம் பறயா யிதானாதிலி நிமயவிக் சிறயங்களுக்கும்.

14. யேரநிய நாக அஷ்ட்டபோக நேஜகாமியங்களுடனே கூட ஆண்.

15. டு அனுபவித்துக் கொள்வீராகவும் யிந்த சம்மதிச்சு வேம்பு வய்ய.

16. னும் இராமசாமியின் பங்கு சுத்தகிரய சாசனம் பண்ணிச் குடுத்தேன்.

17. இந்த படி ராமசாமியையனெழுத்து

# 58. உத்தமதானபுரம் - குத்தகைச் சீட்டு ஆவணங்கள்

**கோ.உத்திராடம்,சென்னை.**

**58:1**

**இடம்:** *சென்னை, டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், ஆவணக் கருவூலம்.*

**காலம்:** *பொ.ஆ.1893*

**செய்தி:** *கும்பகோணம், உத்தமதானபுரம் வெங்கிடசுப்பய்யர் மகன் சாமிநாதய்யருக்கு மேற்படியூர் நாகன் சேருவகாரன் மகன் ராமசாமி சேருவகாரன் என்பவன் மூன்று தென்னை மரங்களைக் குத்தகை பெற்றுக்கொண்டு ஓர் ஆண்டிற்கு 100 தேங்காய் வழங்க எழுதிக்கொடுத்த தென்னை மரக் குத்தகை.*

1. **விஜய வருஷம் மார்கழி மாதம் 1 கும்பகோணம் தாலுகா மேற்படி கும்பகோணம் பக்தபரி அக்கிரகாரத்திலிருக்கும் உத்தமதானபுரம் வெங்கிடுசுப்பய்யர் குமாரர் சாமினாதய்யர் அவர்களுக்கு மேற்படி உத்தமதானபுரம் அடிச்சேரி வடக்கு தெருவிலிருக்கும் நாகன் சேருவகாரன் மகன் ராமசாமி சேருவகாரன் யெழுதி குடுத்த தென்னமர குத்தகை சீட்டு யென்னவென்றால் வெங்கடாசல சுப்பிரமணிய்யர் வகைறா நஞ்சைக்கு கிழக்கு வீதிக்கு மேற்கு நிலத்தில் ராமய்யன் வகைறா புஞ்சை தெற்கு கூழைய மூப்பன் சாஸனம் ....... அனுபவிக்கிற.........ட்கு கொல்லை... இதற்குள்பட்ட மரம் மூனையும் நாளது வருஷம் ஒன்றுக்கு நான் குத்தகைக்கு ஒப்புகொண்டது தேங்காய் 100. இந்த நூறுகாயும் உள்ளி ஒடசல் இல்லாமல் நல்ல நீராடுங் காயாய் பிடுங்கி தங்கள் வீட்டில் கொடந்து யெண்ணி விடுவேன். மேற்படி தேங்காயில் பாக்கி விழுந்தால் கால கிரயப்படி பணம் கொடுக்கிறது. மேற்படி தேங்காயை வைகாசி மீ 60 - 50 கார்த்திகை மீ காய் 50துமாய் தங்கள் வீட்டில் கொண்டு வந்து யெண்ணிவிடுவேன் மேற்படி மரங்களில் பச்ச மட்டை வெட்டுகிறதில்லை. செரை கிழிச்சால் தங்களை கூட வைத்துக்கொண்டு கிழிக்கிறது.**
2. **இந்தபடி சம்மதிச்சு சாமிநாதய்யர் அவர்களுக்கு ராமசாமி சேருகாரன் தென்னமர குத்தகை சீட்டு யெழுதிக் குடுத்தேன்.**
3. **இந்த கீறல் ராமசாமி சேருகாரன் கைநாட்டு.**

4. உத்தமதானபுரம் கைலாச அய்யன் குமாரன் ...அறிவேன்.

5. நெட்டெழுத்துள்பட சிவராமய்யன் குமாரன்.... அறிவேன்.

## 58:2

**இடம்:** *மேலது.*

**காலம்:** *பொ.ஆ.1894*

**செய்தி:** *மேற்படி வெ.சாமிநாதைய்யருக்கு நாகம சேருவகாரன் மகன் ராமசாமி சேருவகாரன் என்பவன் 3 தென்னை மரங்களைக் குத்தகை பெற்றுக்கொண்டு ஓர் ஆண்டிற்கு 110 தேங்காய் வழங்க எழுதிக்கொடுத்தமை.*

1. ஜய வருஷம் மாசி மீ 22 தேதி கும்பகோணந் தாலூகா கஸ்பா கும்பகோணம் ஸகாஜினாயக்கர் அக்கிரகாரத்தில் இருக்கும் உத்தமதானபுறம் வெங்கிடசுப்பையர் குமாரர் சாமிநாதய்யர் அவர்களுக்கு மேற்படி உத்தமதானபுறம் அடிச்சேரி வடக்குத் தெருவுலிருக்கும் நாகம சேருவகாரன் மகன் ராமசாமி சேருவகாரன் எழுதிக்கொடுத்த தென்னமரக் குத்தகைச் சீட்டு.

2. வே.ராஜப்பய்யன் வகைறா நஞ்சைக்குக் கிழக்கு வீதிக்கு மேற்கு வைத்திராமய்யன் வகைறா புஞ்சைக்குத் தெற்கு கூழய மூப்பன் சாசனம் வாங்கியனுபவிக்கிற மனைக்கட்டுக் கொல்லைக்கு வடக்கு இதற்குள்பட்ட தென்னமரம் 3 யும் நாளது வருஷம் 1க்கு நான் தங்களிடத்தில் குத்தகைக்கு ஒப்புக்கொண்டது தேங்காய் 110 இந்த நூத்திபத்துகாயும் ஒள்ளி ஒடசலில்லாமல் நல்ல நீராடுங் காயாய்ப் பிடுங்கி தங்கள் வீட்டில் கொண்டுவந்து எண்ணிவிடுவேன் மேற்படி தேங்காயில் பாக்கி விழுந்தால் காலக்கிரயப்படி பணம் கொடுக்கிறது. மேற்படி தேங்காயை ஆனி மீ த்தில் காய் 60ம் தை மாசத்தில் காய் 50 மாய் தங்கள் விட்டில்கொண்டு வந்து எண்ணிவிடுவேன்.மரங்களில் பச்சை மட்டை வெட்டுகிறதில்லை. சிறை கிழித்தால் தங்களைக் கூடவைத்துக்கொண்டு கிழிப்பேன்.

3. இந்தப்படி சம்மதித்து சாமிநாதய்யரவர்களுக்கு ராமசாமி சேருவைகாரன் தென்னமரக் குத்தகைச் சீட்டு எழுதிக்கொடுத்தேன்

4. இந்த கீறல் ராமசாமி சேருவைகாரன் கைநாட்டு

5. இந்த கீரல் மருதமூப்பனறிவேன்.

6. ஒ.சுப்பரமணிஅய்யன் அறிவேன்.

7. **நெட்டெழுத்துள்பட மேற்படியூர் அண்ணாத்துரைய்யர் பிள்ளை சாமிநாதய்யர்.**

**58:3**

**இடம்:** *மேலது.*

**காலம்:** *பொ.ஆ.1894*

**செய்தி:** *மேற்படி சாமிநாதையருக்கு ராமன் அம்பலகாரன் மகன் ரெங்கன் அம்பலகாரன் என்பவன் 17 தென்னை மரங்களைக் குத்தகை பெற்றுக்கொண்டு ஓர் ஆண்டிற்கு 700 தேங்காய் வழங்க எழுதிக்கொடுத்த ஆவணம்.*

1. **ஜய வருஷம் ஆனி மீ 1 உ கும்பகோணம் தாலூகா கஸ்கா கும்பகோணம் பக்தபுரி அக்கிரகாரத்திலிருக்கும் உத்தமதானபுரம் வெ.சாமிநாதையர் பட்டாமணியம் சின்னஸாமி அய்யர் இவர்களுக்கு மேற்படியூர் நார்த்தந்தோப்பில் குடியிருக்கும் ராமன் அம்பலகாரன் மகன் ரெங்கன் அம்பலகாரன் தென்னமரக் குத்தகைச் சீட்டு யெழுதிக்கொடுத்தபடி,**
2. **வைத்திராமய்யன் வகைறா புஞ்சைத் தோப்புக்கு கிழக்கு தி. நாரணய்யன் புஞ்சைக்கு மேற்கு நாரணய்யன் வகைறா தென்னங்நதோப்புக்கு வடக்கு சாலாபோகம் வாய்க்காலுக்கு தெற்கு இதற்குள்பட்ட தங்களுதான நார்த்தந்தோப்பில் தென்னமரம் 17 இந்தப் பதினேழு மரத்தையும் நான் நாளது வருஷம் 1....... கொண்டத் தேங்காய் 700 இந்த எழுநூறு தேங்காயும் ஒல்லி ஒடைசலன்னியில் நீராடுங் காயாய் கார்த்தகை மீ 12 யில் தேங்காய் 350 சித்திரை மீ 25 யில் தேங்காய் 350 ஆக கெடு 2இ [அரை] தேங்காய் 700ம் தங்கள் வீட்டில் கொண்டுவந்து எண்ணிவிட்டு இதில் வரவு வைத்துக் கொள்ளுகிறது. மேற்படி மரங்களை பச்சை மட்டை வெட்டு கிறதில்லை. கள்ளுக்கட்டுகிறதில்லை. மேற்படி மரங்களில் சிறை பிடுங்குங் காலத்தில் தங்களைக் கூட வைத்துக்கொண்டு சிறைபிடுங்கி கொண்டு வந்து போடுவேனாகவும் கெடு முடிந்த வுடன் தங்களைக் கூடவைத்துக்கொண்டு மேற்படி மரங்களில் வெட்டுங்காயை வெட்டி மரங்களை தங்கள் வசம் விட்டுவிடு வேனாகவும் .இந்த கீரல் ரெங்கன் அம்பலகாரன் கைநாட்டு**
3. **மேற்படியூர் மிராசு வயித்தி.... அய்யர் அறிவேன்.**
4. **நெட்டெழுத்துள்பட மேற்படியூரில் வந்திருக்கும் இராமஸாமிய்யன் அறிவேன்.**

58:4

**இடம்:** *மேலது.*

**காலம்:** *பொ.ஆ.1895*

**செய்தி:** *கும்பகோணம், உத்தமதானபுரம் பட்டாமணியம் சின்னசாமி அய்யருக்கு மன்னுக்குட்டி மூப்பன் மகன் இராம மூப்பன், சாமிநாத மூப்பன் ஆகியோர் 27 புளிய மரத்தைப் பெற்றுக்கொண்டு எழுதிகொடுத்த குத்தகைச் சீட்டு.*

1. **மன்மத வருஷம் தை மீ 15 உத்தமதானபுரத்திலிருக்கும் பட்டாமணியம் சின்னஸாமிய்யருக்கு மேற்படியூர் அடிச்சேரியிலிருக்கும் மன்னுக்குட்டி மூப்பன் மகன் இராமமூப்பன் – 1 சாமிநாதமூப்பன் –1 நாங்களிருவரும் யெழுதிக் கொடுத்த புளியமரக் குத்தகைச் சீட்டு.**

2. **[ராக்குவையன்] நஞ்சைக்கி கிழக்கு வழிநடப்பாதைக்கு மேற்கு வாய்க்காலுக்கு தெற்கு சாமிநாத வாத்தியார் வகைறா புஞ்சைக்கு வடக்கு இதற்குள்பட்ட புளியமரம் இரண்டையும் நாளது வருஷம் 1 வருஷம் நாங்கள் குத்தகை ஒப்புக்கொண்டது. ... புவ சேர்படியால் புளி தூக்கு 27 இந்த இருவத்து எழு தூக்கு புளியையும் ஈரம் வெயில் தாங்கள் வீட்டுக்கு கொண்டு வந்து சரியான சேர்படியால் வருகிற மாசி மீ 30 உ யில் 15 தூக்கும் பங்குனி மீ 30 உ யில்12 தூக்கும் நிறுத்து விட்டு இதில் வரவு வைத்துக்கொள்ளுகிறது.**

   .........

3. **இந்த கீறல் சாமிநாத....**

   ........

4. **நெட்டெழுத்துள்பட இரண்ட...**

58:5

**இடம்:** *மேலது.*

**காலம்:** *பொ.ஆ.1896*

**செய்தி:** *கும்பகோணம், உத்தமதானபுரம் பட்டாமணியம் சின்னசாமி அய்யருக்கு மேற்படியூர் முத்து மூப்பன் மகன் ராமமூப்பன் என்பவன் மூன்று தென்னை மரங்களைக் குத்தகை பெற்றுக்கொண்டு ஓர் ஆண்டிற்கு 135 தேங்காய் வழங்கியமை.*

1. **துறுமுகி வருஷம் மார்கழி மீ 25உ கும்பகோணம் தாலூகா உத்தமதானபுறத்திலிருக்கும் பட்டாமணியம் சின்னசாமி அய்யர் அவர்களுக்கு மேற்படியூர் அடிச்சேரியிலிருக்கும் முத்து மூப்பன் மகன் ராமமூப்பன் யெழுதிக்குடுத்த தென்னமர குத்தகைச் சீட்டு ராமசாமி அய்யன் வகைறா புஞ்சை தென்னந்தோப்புக்குக் கிழக்கு னாரணய்யன் வகைறா புஞ்சை தரிசுக்கு மேற்கு வயித்திராமய்யன் புஞ்சை தரிசுக்கு வடக்கு பிச்சுவய்யன் தென்னந்தோப்புக்கு தெற்கு இதற்குள்பட்டது தங்களதான தென்னமரம் மூணையும் நாளது வருஷம் 1 இ (அரை) குத்தகைக்கு ஒப்புகொண்டது தேங்காய் 135 யிந்த நூத்திமுப்பத்தி அஞ்சு தேங்காயும் உள்ளி ஒடசலில்லாமல் நார்பூத்த காயாய் வருகிற சித்திரை மீ 15 யில் தேங்காய் 65யும் யெவிளம்பி வருஷம் ஆடி மீ 15யில் தேங்காய் 70 ஆக தேங்காய் னூத்தி முப்பத்தி அஞ்சு காயும் தாங்கள் வீட்டில் கொண்டுவந்து யெண்ணிவிட்டு யிதில் வரவு வைத்துகொள்வேனாகவும் மேற்படி மரங்களில் பச்சைமட்டை வெட்டுகிறதில்லை மேற்படி மரங்களில் செறை பிடுங்கினால் தங்களைக் கூடவைத்துகொண்டு பிடுங்கி கொண்டுவந்து போடுவேனாகவும் 2.இந்தபடி தென்னமர குத்தகைச் சீட்டு யெழுதி குடுத்தேன்**

3. **இந்த கீறல் ராமன் முப்பன் கைனாட்டு**

4. **மேற்படியூர் சுப்ரமணிய வாத்தியார் அறிவேன்.**

5. **மேற்படியூர் சுப்பு அய்யன் குமாரன்**

6 **.....சாமிநாதய்யர் யெழுதினதுள்பட அறிவேன்**

**யேவிளம் வருஷம் .....**

**58:6**

**இடம்:** *மேலது.*

**காலம்:** *பொ.ஆ.1895*

**செய்தி:** *கும்பகோணம், உத்தமதானபுரம் பட்டாமணியம் சின்னசாமி அய்யருக்கு மேற்படியூரில் கள்ளுக்கடை வைத்திருக்கும் வைத்திலிங்க நாடான் மகன் ராம சாமி நாடான் எழுதிக்கொடுத்த தென்னை மரம் கணக்கருப்பு.*

1. **1895 வருஷம் செப்டெம்பர் மீ 2 கும்பகோணம் தாலூகா உத்தமதானபுரம் பட்டாணியம் சின்னசாமிய்யரவர்களுக்கு மேற்படி கிராமம் நார்த்தந்தோப்பில் கள்ளுக்கடை வைத்திருக்கும் வைத்திலிங்கனாடான் மகன் ராமசாமினாடான் எழுதிக் குடுத்த கணக்கருப்பு**

   **தங்களுதான நார்த்தந்தோப்பு தென்ன மரம் 17ல் 10 மரமும் மேற்படியூரில் தங்களுக்குச் சொந்தமான தட்டான்கொல்லையில் தென்னமரம் 3 ஆக தென்னமரம் 13யும் வருகிற அக்டோபர் மீ 1 முதல் 1896 வருஷம் மார்ச்சி மீ 30 வரையில் மீ 1 க்கு ....சார் குத்தகை சரகுடன் குத்தகை நான் ஒப்புக்கொண்டு மேற்படி மரம் 1 வருஷம் ரூபாய் 1க்கு நாளது தேதியில் அட்வான்சு கொடுத்தது ரூ 15 க்கு பாக்கி ரூ 4 யும் வருகிற ஜனவரி மீ 10 யில் கொடுக்கிறது. மேற்படி மரங்களில் பச்சை மட்டை வெட்டுகிறதில்லை சிறைபிடுங்கிறதில்லை டயனான் மருதேதியில் கள்ளுக்கலையம் இறக்கி மேற்படி மரங்களைத் தங்கள் வசம் ஒப்பிவித்துப் போடுவேன்.**

2. **இந்தப்படி சம்மதிச்சு சின்னசாமிய்யரவர்களுக்கு ராமசாமினாடான் கணக்கருப்பு எழுதிக்கொடுத்தேன்.**

3. **இந்த கீறல் ராமசாமி னாடான்**

4. **இது எழுதினது உள்பட இராமஸாமிய்யன்.**

**58:7**

**இடம்:** மேலது.

**காலம்:** *பொ.ஆ.1896*

**செய்தி:** கும்பகோணம், உத்தமதானபுரம் வெ.சாமிநாதைய்யருக்கு மேற்படியூர் ராமன் அம்பலகாரன் மகன் ரெங்கன் அம்பலகாரன் என்பவன் 17 தென்னை மரங்களைக் குத்தகை பெற்றுக்கொண்டு ஓர் ஆண்டிற்கு 600 தேங்காய் வழங்க எழுதிக்கொடுத்த தென்னை மரக் குத்தகை.

1. **துர்முகி வருஷம் மார்கழி மீ 1 கும்பகோணம் தாலூகா கஸ்பா கும்பகோணம் சபாஜினாயகன் தெருவிலிருக்கும் உத்தமதானபுரம் வெ.சாமிநாதய்யர் அவர்களுக்கு மேற்படியூர் நார்த்தந் தோப்பிலிருக்கும் ராமன் அம்பலகாரன் மகன் ரெங்க அம்பலகாரன் யெழுதிகுடுத்த தென்னமரக் குத்தகைச் சீட்டு வயித்திராமய்யன் வகைறா புஞ்சை தோப்புக்கு கிழக்கு தி.நா.ராயணய்யர் வகைறா தோப்புக்கு மேற்கு னாரணய்யன் வகைறா தோப்புக்கு வடக்கு சாலாபோகம் வாய்க்காலுக்கு தெற்கு இதற்குள்பட்ட தங்களுதான நார்த்தந்தோப்பு தென்னமரம் பதினேழையும் நாளது வருஷம் 1வருஷம் னான் குத்தகையாய் ஒப்புக்கொண்டது காய் 600 இந்த அறனூறு காயையும் ஒல்லி ஓடசலன்னியில் நார்ப்பூத்த காயாய் பங்குனி மீ 25யில் காய் 300ம் ஆடி மீ 20உ யில் காய் 300மாய் தங்கள் வீட்டில் கொண்டுவந்து யெண்ணிவிட்டு கணக்கு வாங்கிக் கொள்வேன் மேற்படி மரங்களில் பச்சை மட்டை குருத்துமட்டை வெட்டுகிறதில்லை. இந்தப்படி கெடுதவறினால் மேற்படி.........பணமும் மேற்படியானதுக்கு மாசம் 1 வருஷம் ரூபாய் 100 வருஷ ம் ரூபாய் 1 வீதம் வட்டியுடன் ஓடவர் வேண்டும்போது குடுத்து மேற்படி குத்தகை சீட்டை வாங்கிகொள்வேன். இந்தப்படி சாமிநாதய்யர் அவர்களுக்கு ரெங்க அம்பலகாரன் தென்னமர குத்தகைச் சீட்டு யெழுதிகுடுத்தேன்.**
2. **இந்த கீறல் ரெங்க அம்பலகாரன் கைநாட்டு**
3. **மேற்படியூர் ராமஸாவமிய்யர் குமாரன் சிவராமகிருஷ்ணய்யன்**
4. **மேற்படியூர் சுந்தரய்யர் குமாரன் நாகேசுப்ரய்யன் நெட்டெ முத்துள்பட அறியேன்.**

# 59. புஞ்சை புளியம்பட்டி கல்வெட்டுகள்

ஆ.ராஜா,தஞ்சாவூர்

## 59:1

**இடம்:** ஈரோடு மாவட்டம், சத்தியமங்கலம் வட்டம், புஞ்சை புளியம்பட்டி தண்டாயுதபாணிசுவாமி கோயில் அர்த்தமண்டபம் உட்புற சுவர்

**காலம்:** பொ.ஆ19ஆம் நூ

**செய்தி:** இராமசாமி நாடார் மனைவி கோயில் மண்டபத்திற்கு உபயம் செய்துள்ளார்.

1. **கலியுகம்** . . . . . .
2. **வருஷம் ஆவணி மாதம் 20தேதி**
3. **இராமசுவாமி நாடார்**
4. **சம்சாரம் இலக்சு**
5. **மி** . . . . . .
6. **மண்டபம் உபயம்.**

## 59:2

**இடம்:** மேலது, வடக்கு வெளிப்புற சுவர்

**காலம்:** பொ.ஆ.1878ஆம் நூ

**செய்தி:** கோபாலசாமி நாடார் மனைவி அலமேலு அம்மா கோயில் மண்டபம் கட்டியமை.

1. **சாலிவாகன சகம் 1800**
2. **யுவ வருஷம் மேஷ மா 22 புஞ்**
3. **சை புளியம்பட்டிக் கோபால**
4. **சாமி நாடார் பாரியை அல**
5. **மேலு அம்மா சுப்ரமணிய**
6. **ர் ஆலயம் கெற்ப்ப மண்**
7. **டபம் உபயம் சுபம்.**



# 60. பனமண்ணசெப்பேடு

சு. இராசகோபால்,சென்னை

**இடம்:** கேரளமாநிலம், பாலக்காடுமாவட்டம், ஒட்டபாலம் வட்டம், பனமண்ண சங்கரநாராயணசுவாமிகோவில்.

**காலம்:** *தமிழ் எழுத்தமைதியைக்கொண்டு பொ.ஆ17-18ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *இச்செப்பேட்டின் முன்பக்கம் தேய்ந்து படிக்க இயலாது உள்ளது. ஆயிரத்தொருவர் என்ற வணிகக் குழுவினர் ஒன்று கூடிதங்கள் வம்சம் தளைப்பதற்காகத் தங்கள் மடவாலயத்தின் குருக்களான முத்துஸ்வாமி என்பவர்க்குக்குடிக்கு ஒரு பணம் மாணியம் கொடுப்பதாக எடுத்த தீமானத்தைக் குறிப்பிடுகிறது. தமிழகத்திலிருந்து கேரளக் கடற்கரை நோக்கிச் செல்லும் வழியில் 17-18ஆம் நூற்றாண்டிலும் தமிழக வணிகக் குழுக்களின் நடவடிக்கைகள் இருந்தமைக்கு இச்செப்பேடு ஒரு எடுத்துக்காட்டாகும்.*

முன்பக்கம் தேய்ந்துள்ளது

பின்பக்கம்

1. **ன்ற மடவாலயத்தில் பாற்க்கப்பெட்ட குருக்களுக்கு**
2. **வேண்டத்தக்க மானியங்கள் நியமத்தது மெ-**
3. **ல்லாமல் ஆயிரத்தொருவரும் கூடி நம்பிவமிஷ-**
4. **ங்கள் தளைதபடியினால்கொண்டு இந்த**
5. **குருக்களே அவருடைய வமிஷத்தவரைக்கு நம்மளு-**
6. **டையகுடி ஒன்றுக்கு ஓரொரு பணம் கொடுத்துவ-**
7. **ரும்படியாகவும் இந்த மானிபம் நடக்காமல் மு-**
8. **டங்கு மாருயாதொருவர் . . . . அ**
9. **வருடைய வமிஷம் அழியும் படியாகவும் பாவம்**
10. **செய்த வமிஷத்தோர். . . .புல்லும் பூமி-**
11. **யும் கல்லும் காவேரியும் தய்வமாரு**
12. **ள்ளவரெயிலும் இவர்க்கு இம்த்தருமம் நடத்தும்படியானயா-**

13. துபேர்களும் குடி நடத்தும்படி எழுதி

14. கடவதாகவும் முத்து-

15. ஸ்வாமிக்கு கொடுப்பது இப்படிக்கு அவர்

16. வமிஷத்துக்கும் பிறகு  சிசுபாலகரானவர்

17. வாணிபம் செய்யும்படியாகவும் யாதொருவ-

18. ரும் மற்றொருவரெ பொண உள்ளம்

# 61. திருக்கழுக்குன்றம் கல்வெட்டு

**ச.மு.ரமேஷ்குமார்,** அவிநாசி.

**இடம்:** காஞ்சிபுரம் மாவட்டம், செங்கல்பட்டு வட்டம், திருக்கழுக்குன்றம் மலை அடிவாரத்தில் உள்ளது.

**காலம்:** பொ.ஆ.1913.

**செய்தி:** திருக்கழுக்குன்றம் கோயிலுக்கு கால சந்தி விளக்கு எரிக்க திருவட்டீஸ்வரன் பேட்டை செல்லம்மாள், நில வருவாயில் ஏற்பாடு செய்தமை

1. **சென்னை திருவட்டீஸ்வரன் பேட்டை**
2. **பிள்ளையார் கோயில் வீதி 11வது**
3. **நெ.வீட்டிலுள்ள ம.வடமலை கிரா-**
4. **மணி மனைவி ம.செல்லம்மாள்**
5. **திருக்கழுக்குன்றம் திருமலைக்-**
6. **கும் தாழக்கோவிலுக்கும் கா-**
7. **ல சந்தி அபிஷேகம் நாள் தோ-**
8. **ரும் சென்னை திருவட்டீஸ்வ-**
9. **ரன் பேட்டை தன் சொந்த தா-**
10. **யர் சாயபு நிலங்களின் வரு-**
11. **ம் படியில் நடத்த ஏற்பாடு**
12. **செய்திருக்கிறது**
13. **ம.வடமலைக்கீ மனைவி**
14. **ம.செல்லம்மாள்**
15. **1913**
16. **பிப்ரவரி மீ**
17. **19 தேதி**



# 62. மொண்டிபாளையம் கல்வெட்டுகள்

ச.மு.ரமேஷ்குமார்,அவிநாசி

**62:1**

**இடம்:** திருப்பூர் மாவட்டம், அவிநாசி வட்டம், மொண்டி பாளையம் மேலத்திருப்பதி என்ற வெங்கடேச பெரு மாள் கோயிலில் வெளிப்பிரகாரம் மேற்கு மண்ட பச்சுவர் உள்ளது.

**காலம்:** பொ.ஆ.1909

**செய்தி:** மண்டபம் செய்தமை

1. 1909 ஸூ செப்டம்பர் 3 தேதி சௌமிய வரு ஆவனி மீ 19 தேதி
2. பாப்பனாயக்கன்பாளையம் புதூர் ராஜகுண்டல .போ.
3. கோவிந்தசாமினாயடும் மைத்துனர் உப்பிலிபாழ்ய
4. ம் எண்டபில்லி பி.ந.வெங்கடசாமினாயிடும் இருவ
5. ரும் ஸ்ரீ னிவாசபுரம் வெங்கடரமனஸ்வாமிக்கு
6. கட்டிய மண்டபம் வுபயம்.
7. புதுப்பிக்கப்பட்டது.
8. ஸ்ரீ னிவாசபுரம்
9. வெங்கடரமணஸ்வாமிக்கு கட்டிய மண்டபம்
10. உபயம்



## 62:2

**இடம்:** மேலது கோயிலில் உள்பிரகாரம் தெற்கு வாயில் மண்டபம் உள்ளது.

**காலம்:** பொ.ஆ.*1893*

**செய்தி:** *மண்டப உபயம்*

1. **1893 நந்தன ஸ்ரீ தை மீ 5 தே [தி]**
2. **பாப்பனாயக்கம்பாளையம்பு [தூர்]**
3. **போடிநாயக்கர் குமாரர் றங்கச**
4. **மி நாயக்கர் வுபயம் மண்டபம்.**



## 62: 3

**இடம்:** மேலது கோயில் வெளிப்பிரகாரம் கிழக்கு மண்டபம் உள்ளது.

**காலம்:** பொ.ஆ.*1907*

**செய்தி:** *மண்டபம் கட்டியமை*

1. **ஸ்ரீ ராமஜெயம்**
2. **1907 ஸ்ரீ செப்டம்பர் மீ 14 தேதிகி பிலவங்க ஸ்ரீ ஆவனி மீ 25 தேதி**

3. பாப்பனாயகன் பாழ்யம் புதூர். ராசகொண்டல போ.ர.கோவிந்தசாமி

4. னாயடும் மைதுநர் உப்பிலிபாளையம் எண்டபில்லி பி.ர.வெ

5. ங்கடசாமினாயடும் இருவரும் ஸ்ரீனிவாசபுரம். வெங்

6. கடரமணஸ்வாமிக்கி கட்டிய மண்டபம் வுபயம்.



# 63. தோப்பூர் மாலக்கோயில் கல்வெட்டு

**து.சுந்தரம்,**கோவை.
**அ.சதாசிவம்,**உடுமலை.
**ச.இ.பவுசியாபேகம்,**சத்தியமங்கலம்.

**இடம்:** *ஈரோடு மாவட்டம், பவானி வட்டம், அந்தியூர்-சத்தி சாலையில், தோப்பூர் மாலக்கோயில் கல்.*

**காலம்:** *பொ.ஆ.1904*

**செய்தி:** *ஈரோடு மாவட்டப்பகுதியில் நாயக்கர் இனத்தார், இறந்துபோன தம் உறவினர் நினைவைப் போற்றும் வகையில் கல் வைக்கின்றனர்.இவ்விடம் மாலக்கோயில் என்று அழைக்கப்படுகிறது. மஞ்சள் நாயக்கனூர் சூர நாயக்கன் மகன் பட்டக்காரர் கஞ்சநாயக்கன் நினைவாக மல்லக்காள் என்பவள் எழுப்பிய சாசனக்கல்*

1. **சாஷனம் க-**
2. **ல் போட்டது**
3. **மல்லக்காள்**
4. **1904 வ-**
5. **ருஷம் மா-**
6. **ர்கழி மீ**
7. **27 உ மஞ்-**
8. **சள் நாயக்-**
9. **கனூர் சூர-**
10. **நாயக்கன்**
11. **மகன் பட்-**
12. **டகார் கஞ்-**
13. **ச நாயக்க**
14. **ன் கல்**

# 64. போத்தம்பாளையம் கல்வெட்டு

**து.சுந்தரம்,** கோவை
**ச.இ.பவுசியாபேகம்,** சத்தியமங்கலம்

**இடம்:** *ஈரோடு மாவட்டம், சத்தியமங்கலம் வட்டம், போத்தம்பாளையம், பெருமாள் கோயில் அர்த்தமண்டபத்திலுள்ள பலகைக்கல்*

**காலம்:** *சறுவதாரி, ஐப்பசி, 15=பொ.ஆ.19 ஆம் நூ*

**செய்தி:** *புடைப்புச்சிற்பத்துடன் உள்ளது. குப்பாயி மகள் பாகாயி சிலை வைத்தமை.*

1. **சுமணயன் சிலை**
2. **சறுவதரி வருச**
3. **ம் அப்பிசை மதம்**
4. **15 தேதி செல்லி**
5. **ன குப்பயி மள்**
6. **பாகாயி சி**
7. **[லை] வய்த ன்ம**
8. **முதல் பெரும்**
9. **த[க]ன கோபால்**
10. **...............ப்பட**

# 65. இடும்பன் கோயில் கல்வெட்டு

து.சுந்தரம்,கோவை.

**இடம்:** கோவை மாவட்டம் கிணத்துக்கடவு வட்டம் சின்னக் குயிலி அருகில் உள்ள பொன்னாங்காணி இடும்பன் கோயில் தூரிக் கல்வெட்டு.

**காலம்:** *பிரஜோத்பதி, பங்குனி,= பொ.ஆ.1871.*

**செய்தி:** வையாபுரி பண்டாரம் என்பவரது மகன் முத்துக்குமார பண்டாரம் அமைத்த தூரி.

1. புருசோ-
2. ற்பதி
3. வரு. பங்
4. கினி மீ
5. 27
6. தேதி நல்-
7. லய ....
8. .......ரி
9. லேயிரு-
10. க்கும்
11. வையா-
12. புரி ப-
13. ண்டா-
14. ரத்து ம-
15. கன் மு-
16. த்துக்
17. குமா
18. ர பண்-



# தொல்லியல்

## 66. செங்கல்பட்டு வட்டாரத் தொல்லியல்

சி.ஆர்.காயத்திரி,சென்னை

**கா**ஞ்சிபுரம் மாவட்டம் செங்கல்பட்டு வட்டாரத்தில் மேற்கொண்ட தொல்லியல் களஆய்வில் கீழ்கண்ட இடங்களில் தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. அவை பின்வருமாறு;-

| வ . எண் | ஊர் பெயர் | தீர்க்கரேகை | அட்சரேகை | தொல்லியல் எச்சங்கள் |
|---|---|---|---|---|
| 1 | சிறுவாஞ்சேரி | 79.99673333 | 12.80231111 | இடைக்கற்கால கற்கருவிகள் மற்றும் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் |
| 2 | பெருமாத்து நல்லூர் | 80.07449722 | 12.79187222 | இடைக்கற்கால கற்கருவிகள் மற்றும் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் |
| 3 | நந்திவரம் | 80.06478889 | 12.83428056 | இடைக்கற்கால கற்கருவிகள் |
| 4 | கீரப்பாக்கம் | 80.10434444 | 12.82769444 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் |
| 5 | முருகமங்கலம் | 80.105 | 12.79172222 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் |
| 6 | கச்சடிமங்களம் | 80.01889444 | 12.73465556 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் மற்றும் வரலாற்றுக்கால வாழ்விடம் |
| 7 | பட்டரவாக்கம் | 80.00241944 | 12.70418889 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் |
| 8 | தேனூர் | 80.00805306 | 12.6845 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் மற்றும் வரலாற்றுதொடக்கால வாழ்விடம் |

| 9 | மெய்யூர் | 79.94253611 | 12.66932222 | வரலாற்றுத்தொடக்கால வாழ்விடம், லிங்கம், நந்தி சிலை, சோழக்காலத்து சிவன் கோயில், விஜயநகரகாலத்து பெருமால் கோயில் |
|---|---|---|---|---|
| 10 | ஆப்பூர் | 79.974875 | 12.80194444 | பல்லவர் காலத்தை சேர்ந்தஅமர்ந்த நிலையில் சிலை(உடைந்த நிலையில்) 16ஆம் நூற்றாண்டை சேர்ந்த சிவன் கோயில், |
| 11 | நல்லம்பாக்கம் | 80.12682222 | 12.84115833 | வரலாற்றுக்கால வாழ்விடம்-செங்கல் கட்டி எச்சங்கள் 37x21x7cms, 17-18ஆம் நூற்றாண்டை சேர்ந்த கோயில், |
| 12 | அஞ்சூர் | 80.01875556 | 12.73014167 | வரலாற்றுக்கால வாழ்விடம், 18-19ஆம் நூற்றாண்டை சேர்ந்த சிவன் மற்றும் பெருமால் கோயில், |
| 13 | ஈச்சாங்காரனை | 80.01681111 | 12.71845833 | சோழர்க்காலத்தை சேர்ந்த பைரவர் சிலை |
| 15 | சாத்தமங்கலம் | 80.00695 | 12.80684444 | வரலாற்றுக்கால வாழ்விடம், சிவப்பு நிறவழவழப்பு பானை ஓடுகள் |

# 67. விழுப்புரம் பகுதியில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

க.சுரேஷ்,சிறுநெசலூர்

**வி**ழுப்புரம் மாவட்டம், சங்கராபுரம் வட்டத்தில் உள்ள பாசார், ரிஷிவந்தியத் திலிருந்து வடக்காக சுமார் 4கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் வட-மேற்கில் குன்றுகள் காணப்படுகின்றன. இவற்றில் மேற்கில் அமைந்துள்ள குன்றின் மேல் 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிவன் கோயில் ஒன்று சிதிலமடைந்த நிலையில் கல்வெட்டுகளுடன் காணப்படுக்றது. இக்கோயிலின் பின்புற அடிவாரப்பகுதிகளில் மேலைப் பழங்கற்காலம் மற்றும் நுண் கற்காலத்தைச் சார்ந்த கற்கருவிகள் காணப்படுகின்றன. இக்கோயிலுக்கு கிழக்கு திசையில் உள்ள மற்றொரு மலையின் மேற்கு மற்றும் வட-மேற்கு திசையின் அடிவாரப் பகுதிகளில் பெருங்கற்கால வாழ்விடப் பகுதியும் சிவன் கோயிலுக்கு தென்-கிழக்கு திசையில் இடைக்கால வாழ்விடப் பகுதியும் காணப்படுகின்றன.

இம்மாவட்டத்தில் தியாகதுருகத்திற்கு தெற்கே 2 கி.மீ. தொலைவில் புக்குளம் என்னும் கிராமம் உள்ளது. இவ்வூரின் வடக்கு திசையில் ஊரை ஒட்டியே ஏரி ஒன்று காணப்படுகிறது. இவ்வேரியின் வட-மேற்கு திசையில் கரையை ஒட்டிய தனியாருக்கு சொந்தமான நிலத்தில் காணப்படும் பாறையில் புதிய கற்கால கருவியான கைக்கோடரியை செய்து முடித்து அவற்றினை வழுவழுப்பாக்குவதற்கு பாறையின் மேல் தேய்த்ததற்கான வரித்தடங்கள் (*Grooves*) காணப்படுகிறது. மேலும் இவற்றின் அருகில் புதிய கற்காலக் கற்கருவிகள் உடைந்த நிலையில் சிலவும் இவ்விடத்திற்கு வடக்கே 200 மீ. தொலைவில் காணப்படும் தியாகதுருகம் மலையின் அடிவாரத்தில் புதிய கற்கால கருவிகள் முழுமையாகவும் கண்டெடுக்கப்பட்டன. இவற்றின் வாயிலாக இப்பகுதி புதிய கற்கால கருவிகள் செய்யும் தொழிற்கூடமாக இருந்திருக்கலாம் என்று தெரிகிறது.

# 68. மேல்பாச்சேரி புதிய கற்கால கருவிகள்

பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் தலைவாசல் அருகே கல்வராயன் மலையில் மேல்பாச்சேரி கிராமத்தில் மரத்தின் கீழ் வழிபாட்டில் இருக்கும் விநாயகர் சிலையின் முன்புறம் வழிபாட்டில் புதிய கற்காலகருவிகள் 18 காணப்படுகின்றன. இதில் 11 நல்ல நிலையிலும் 7 சற்று சிதைந்த நிலையிலும் உள்ளது. இவற்றின் நீளம் 15 செ.மீ அகலம் 10 செ.மீ ஆகும். 33 செ.மீ நீளமுடைய குழவிக்கல் ஒன்றும் காணப்படுகிறது.இக்கருவிகள் இன்றும் இக்கிராம மக்களின் வழிபாட்டில் உள்ளது. வேட்டையாடும் வழக்கம் குறைந்து விட்டாலும் திருவிழா காலங்களில் இக்கருவிகளை சுத்தம் செய்து வழிபடுகிறார்கள். தாழ்பாச்சேரி கிராமத்தில் ஒரு மரத்தின் அடியில் உள்ள விநாயகர் சிலை அருகே முப்பதுக்கும் மேற்பட்ட புதிய கற்கால கருவிகள் உள்ளன. விநாயகர் சிலைகள் பிற்காலத்தில் இங்கு வைக்கப்பட்டிருக்கலாம். இக்கிராமங்களின் அருகே உள்ள ஓடைகளிலும் விளைநிலங்களிலும் கற்கருவிகள் கிடைப்பதாக கிராம மக்கள் கூறுகின்றனர். மேல்பாச்சேரி கிராமத்தில் பழமை வாய்ந்த துர்க்கை, காளி சிற்பங்கள் ஒரே பலகை கல்லில் புடைப்பாக செதுக்கப்பட்டு வழிபாட்டில் உள்ளது.









# 69. சேலம் மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்பு

இரா.இரமேஷ், சென்னை

**சே**லம் மாவட்டத்தில் உள்ள எடப்பாடி, ஓமலூர், சங்ககிரி மற்றும் காட்டையாம்பட்டி வட்டங்களில் களாய்வில் சில தொல்லியல் இடங்கள் புதியதாக கண்டறியப்பட்டுள்ளன.

**1. கருப்பராயனூர் (வ 11°31'48.3"; கி 077°47'12.6")**

எடப்பாடியில் இருந்து தெற்கே 15 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூ¡¢ல் 2 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்கால தொல்லியல் ஈமச்சின்னமான கற்குவைகள் காணப்படுகின்றன. உள்ளூர் மக்களால் பாண்டியன் வீடு என்று அழைக்கபடும் இந்த ஈமச்சின்னங்கள் விவசாய பயன்பாட்டிற்காக சிதைக்கப்பட்டுள்ளன.

**2. கோணக்கலத்தூர் (வ 11°31'59.4"; கி 077°46'02.6")**

எடப்பாடியில் இருந்து தெற்கே 15 கி.மீ தொலைவில் எடப்பாடி-பவானி சாலையில் அமைந்துள்ளது. இரும்புக்கால ஈமச்சின்னமான முதுமக்கள் தாழிகள் சிதைக்கபட்ட நிலையில் கண்டறியப்பட்டுள்ளன.

**3. காக்காயங்காடு (வ 11°32'55.6"; கி 077°46'50.56")**

எடப்பாடியில் இருந்து தெற்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வடக்கே நத்தகாட்டில் வரலாற்றுக்கால வாழ்விடப்பகுதி கண்டறியப்பட்டுள்ளது. 5 ஏக்கர் பரப்பளவில் 1.5 மீ அளவு மேடாக காணப்படும் இந்த வாழ்விடப்பகுதியில் இருந்து சிவப்பு, கருப்பு பானை ஓடுகள் மற்றும் வட்ட சில்லுகள் கண்டறியப்பட்டுள்ளன. அம்மன் கோவிலில் சதிக்கல், கஜலட்சுமி மற்றும் பெண் உருவங்கள் காணப்படுகின்றன.

**4. தேவூர் (வ 11°31'40.7"; கி 077°45'19.0")**

எடப்பாடி-பவானி சாலையில் எடப்பாடியிலிருந்து தென்மேற்கே 12 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே 3 ஏக்கர் பரப்பளவில் கோட்டைமேட்டுப் பகுதியில் வரலாற்றுக்கால வாழ்விடப் பயன்பாட்டு காலப் பானை ஓடுகள் கண்டறியப்பட்டுள்ளன.

**5. இராமகூடல் (வ 11$^{0}$29’20.3”; கி 077$^{0}$42’48.5”)**

குமாரபாளையத்தில் இருந்து வடக்கே 8 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூரின் தெற்கே இரும்புக்கால ஈமச்சின்னமான முதுமக்கள் தாழிகள் சிதைக்கப்பட்ட நிலையில் கண்டறியப்பட்டுள்ளன.

**6. மோலப்பாரை (வ 11$^{0}$48’27.1”; கி 077$^{0}$43’48.1”)**

கொளத்தூர் - அந்தியூர் சாலையில் கொளத்தூரிலிருந்து தெற்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூரில் இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவை மற்றும் கற்பதுக்கைகள் ஊரின் வடக்கே சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் கண்டறியப்பட்டுள்ளது. சிதைக்கப்பட்ட கற்குவை ஒன்றின் கற்பதுக்கை அளவு 180x70x15 செ.மீ ஆக காணப்படுகிறது.

**7. பன்னப்பட்டி (வ 11$^{0}$49.840’; கி 077$^{0}$04.492’)**

ஓமலூரிலிருந்து வடக்கே 10 கி.மீ தொலைவில் ஓமலூர் - தருமபுரி சாலையில் அமைந்துள்ள இவ்வூரின் கிழக்கே வரலாற்றுக்கால வாழ்விடப்பகுதி 3 ஏக்கர் பரப்பளவில் கண்டறியப்பட்டுள்ளது.

**8. மாரக்கவுண்டன் புதூர் (வ 11$^{0}$50.244’; கி 077$^{0}$04.77’)**

ஓமலூரிலிருந்து வடகிழக்கே 15 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூரின் தெற்கே இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவை, முதுமக்கள் தாழி மற்றும் ஈமப்பேழை ஆகியவை கண்டறியப்பட்டுள்ளன. ஈமப்பேழை சேலம் மாவட்டத்தில் கண்டறியப்படுவது இதுவே முதல் முறையாகும். ஈமப்பேழையின் அகலம் 28 செ.மீ நீளம் 55 செ.மீ. ஊரின் மேற்கே ஏரிக்கரையில் சிவலிங்கம் ஒன்றும் கண்டறியப்பட்டுள்ளது.

**9. பேலபள்ளி கோம்பை (வ 11$^{0}$53’26.04”; கி 078ஊ04’48.94”)**

தளவாய்பட்டியில் இருந்து வடக்கே 3 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூருக்கு மேற்கே இரும்புக்கால ஈமச்சின்னமான முதுமக்கள் தாழிகள் சிதைக்கப்பட்ட நிலையில் கண்டறியப்பட்டுள்ளன.

**10. குழிக்காடு (வ 11$^{0}$54’56.91”; கி 078$^{0}$09’33.23”)**

ஓமலூர்-பொம்மிடி சாலையில் கணவாய் புதூரிலிருந்து வடக்கே 5 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூரிலுள்ள முனியப்பன் கோவிலில் பளபளப்பான புதிய கற்கால கருவி

ஒன்று நட்டு வைக்கப்பட்டு உள்ளூர் மக்களால் சாமிக்கல் என்று வழிபடப்பட்டு வருகிறது.

**11. கே.மோரூர் (வ 11$^0$57'01.89"; கி 078$^0$12'14.72")**

டேனிஷ்பேட்டையில் இருந்து வடக்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் கிழக்கே இரும்புக்கால ஈமசின்னமான கற்குவைகள் சுமார் 2 ஏக்கர் பரப்பளவில் 30 க்கும் மேற்பட்டவை கண்டறியப்பட்டுள்ளன. உள்ளூர் மக்களால் பாண்டியன் வீடு என்று அறியப்படும் இக்கற்குவைகள் 5 முதல் 8 மீட்டர் வரையிலான விட்ட அளவை கொண்டு காணப்படுகிறது. மூடுகல்லின் அளவு 2.5x2.5x0.30 மீ.ஊரின் மேற்கே இரும்புக்கால மற்றும் வரலாற்றுக்கால நத்தக்காடு வாழ்விடப்பகுதி 1.5 மீ மேடாக கண்டறியப்பட்டுள்ளது. கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் இங்கு கண்டறியப்பட்டுள்ளன.

**12. கோட்டைமேடு (வ 11$^0$39'33.15"; கி 078$^0$00'00.60")**

கே.தோப்பூரிலிருந்து தெற்கே 3 கி.மீ தொலைவில் உள்ள இவ்ஊருக்கு மேற்கே வரலாற்றுக்கால வாழ்விடப்பகுதி சுமார் 3 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது.

**13. நெடுங்குளம் (வ 11$^0$35'57.35"; கி 077$^0$44'15.95")**

எடப்பாடியிலிருந்து மேற்கே 10 கி.மீ தொலைவில் காவி¡¢யாற்றின் இடது கரையில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வடக்கே கோட்டைமேடு என உள்ளூர் மக்களால் அறியப்படும் வரலாற்றுத் தொடக்ககால வாழ்விடப்பகுதி கண்டறியப்பட்டுள்ளது. இவ்வாழ்விடப் பகுதியில் வரலாற்று தொடக்க கால செங்கற்கள் கண்டறியப்பட்டுள்ளன. செங்கல்லின் நீளம் 42 செ.மீ அகலம் 21 செ.மீ உயரம் 7 செ.மீ. கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் அதிகளவில் காணப்படுகின்றன.

**14. காவேரிப்பட்டி (வ 11$^0$32'47.89"; கி 077$^0$43'55.23")**

எடப்பாடியில் இருந்து மேற்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே காவிரியாற்றின் இடது கரையில் வரலாற்றுத் தொடக்க கால வாழ்விடப்பகுதி சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் கண்டறியப்பட்டுள்ளது. உடைந்த செங்கற்கள், கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் கண்டறியப்பட்டுள்ளன. இரண்டு பளபளப்பான புதிய கற்கால கருவிகள் இவ்வாழ்விடப்பகுதியில் கண்டறியப்பட்டது.

கருவிகளின் அளவு: 1. நீளம் 13 செ.மீ, அகலம் 6 செ.மீ 2. நீளம் 7 செ.மீ, அகலம் 4.5 செ.மீ.

**15. வெள்ளாளப்பட்டி (வ 11°31'46.38"; கி 077°43'41.59")**

எடப்பாடியிலிருந்து தென்மேற்கே 12 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூருக்கு மேற்கே இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவைகள் சிதைக்கப்பட்ட நிலையில் கண்டறியப்பட்டுள்ளது.

**16. தேவண்ணகவுண்டனூர் (வ 11°30'04.57"; கி 077°50'42.12")**

சங்ககிரியிலிருந்து மேற்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வடக்கே வரலாற்றுக்கால வாழ்விடப்பகுதி சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. இவ்வாழ்விடப்பகுதியிலிருந்து சிவப்பு பானை ஓடுகள் மற்றும் கூரை ஓடுகள் கண்டறியப்பட்டுள்ளன.

**17. மாட்டாம்பட்டி (வ 11°30'04.57"; கி 077°50'42.12")**

சங்ககிரியிலிருந்து மேற்கே 6 கி.மீ தொலைவில் அமைந்துள்ள இவ்வூரில் உள்ள முனியப்பன் கோவிலில் புதிய கற்காலக் கருவி உள்ளது.













# 70. போடிநாயக்கனூர் பகுதியில் தொல்லியல் சுவடுகள்

**சி.மாணிக்கராஜ், போடிநாயக்கனூர்**

**தே**னி மாவட்டம், போடிநாக்கனூரிலிருந்து கிழக்கில் சுமார் 5 கி.மீ தொலைவில் பாய்ந்து செல்லும் கொட்டங்குடி ஆற்றின் வடகரையில் மேற்கு தொடர்ச்சிமலையின் சரிவில் துரைராஜாபுரம் என்ற கிராமம் அமைந்தள்ளது. இப்பகுதியில் கொட்டங்குடி ஆற்றுக்கும் மலைத் தொடருக்குமிடையே சமார் 25 ஏக்கர் நிலப்பரப்பில் பண்டைய கால மக்களின் ஈமச்சின்னங்களான முதுமக்கள் தாழிகள் கற்பதுக்கைகள், புதிய கற்கால கற்கருவிகள் மற்றும் இரும்பு ஆயுதங்கள் கள ஆய்வின் போது கண்டுபிடிக்கப்பட்டன.

இப்பகுதியில் கிடைத்துள்ள முதுமக்கள் தாழிகள் பெரும்பாலானவை உடைந்தும் சில தாழிகள் சிதையாத நிலையில் ஒரு மீட்டர் ஆழத்தில் காணப்படுகின்றன. தாழிகளைச் சுற்றி மண்ணாலான சாடி,குடுவை, கிண்ணம், குதிர், உருளி, அகல்விளக்கு, பிரிமணை போன்ற மட்கல வகைகள் வைக்கப்பட்டுள்ளது. இவற்றில் தாங்கிகளும் பிரிமணையும் கருப்பு சிவப்பு நிறத்தில் வளவளப்பாக உள்ளன. கருப்பு-சிவப்பு நிறமுடைய கிண்ணம், தட்டுகளின் கழுத்துப்பகுதிகளில் சிவப்பு நிற அலங்கார கோடுகள் அலை அலையாக சுற்றிலும் வரையப்பட்டு உள்ளன. சில பானை ஓடுகளில் கீரல் குறியீடுகளும் உள்ளன.

### புதிய கற்கால கருவிகள்

புதிய கற்காலத்தை சேர்ந்த இரண்டு கல் ஆயுதங்கள் முதுமக்கள் தாழி அருகே கிடைக்கப் பெற்றன. இவற்றில் ஒன்று 8 செ.மீ கருப்பு நிறத்தில் வளவளப்பான கற்கோடரி, மற்றொன்று 40 செ.மீ நீளமுடையதாகும். இவ்விரண்டின் மேல் பகுதி தட்டையாகவும், கீழ்பகுதி கூர்மையுடனும் வளவளப்பாகவும் காணப்படுகிறது. இவை தவிர 24 செ.மீ நீளத்தில் உலோகத்திலான துருப்பிடித்த கத்தி ஒன்றும் துண்டுகளாக முதுமக்கள் தாழி அருகே கிடைத்துள்ளது. இதே பகுதியில் தொன்மை கால கற்பதுகைகளும் இருந்ததற்கான அடையாளங்களும் காணப்படுகின்றன. இக்கைக்கோடரிகள் பெருங்கற்கால மக்களாலும் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.

# 71. புதுக்கோட்டை மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்பு

**கோ.இரவீந்திரன், கோயம்புத்தூர்**

**பு**துக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டம், மாதாரா பட்டிக்கு அருகிலுள்ள நெடுங்காட்டுப்பட்டியில் இரும்புக்கால கல்லறை புதை குழிகள்

சில சிதைந்த நிலையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. மேற்படி மாவட்டம் இலுப்பூர் வட்டம் பெருமாநாட்டுக்கு அருகிலுள்ள குன்னக்குடிபட்டி குளத்திலும், கிளாப்பட்டி பாசனக் குளத்திலும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த சிதைந்த நிலையில் புதைகுழி கல்வட்டங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இங்கு கருப்பு பானை ஓடுகள் காணப்படுகின்றன. இதுபோல புதுக்கோட்டை மாவட்டம் பொன்னமராவதி வட்டம், தூத்தூர் ஊருக்கு கிழக்கிலுள்ள தூத்துமலை பகுதியில் சுமார் 10 ஏக்கர் பரப்பரளவில் முதுமக்கள்தாழிகள் காணப்படுகின்றன. இங்கு கருப்புச் சிவப்பு பானை ஓடுகள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.





# 72. அத்திரிப்பட்டி புதிய கற்கால கருவிகள்

பொன்.வெங்கடேசன், ஆறகழூர்

கோ.பெருமாள், சி.பொன்னம்பலம், பேளூர்.

ஜீவநாராயணன், பெத்தநாயக்கன்பாளையம்.

**சே**லம் மாவட்டம் பெத்தநாயக்கன்பாளையம் கருமந்துறை அருகே அத்திரிப்பட்டி என்ற கிராமத்தில் உள்ள பிள்ளையார் கோயிலில் 70க்கும் மேற்பட்ட புதிய கற்கால கருவிகள் கண்டறியப்பட்டன. இவை பல்வேறு வடிவங்களில் உள்ளது. வேட்டையாடவும், வேட்டையாடிய விலங்குகளை துண்டாக்கவும், கொட்டைகளை உடைக்கவும் இக்கருவிகள் பயன்பட்டிருக்கலாம். இக்கற்கருவிகளை இவ்வூரில் உள்ள மக்கள் இன்றளவும் வழிபட்டு வருகின்றனர். இக்கற்கருவிகள் மூலம் இப்பகுதியில் புதிய கற்காலத்தைச் சார்ந்த மக்கள் வாழ்ந்து வந்திருப்பது தெரியவருகிறது. இந்த ஊருக்கு அருகே உள்ள நாட்டம் பாறை என்ற இடத்தில் இரும்புக்காலத்தைச் சார்ந்த ஐந்து கற்திட்டைகள் உள்ளன.







# 73. தியாகதுருகம்
# பெருங்கற்கால வாழ்விடம்

**இரா.இரமேஷ்,** சென்னை
**க.சுரேஷ்,** சிறுநேசனூர்

**வி**ழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சியிலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவில் உளுந்தூர்பேட்டை செல்லும் சாலையில் தியாகதுருகம் அமைந்துள்ளது. இவ்வூரின் தெற்கு மற்றும் தென்-மேற்கு திசையில் இரண்டு மலைகள் உள்ளன. அவற்றில் கிழக்கிலிருந்து முதலாவது மலையின் தெற்கு மற்றும் தென்-மேற்கு அடிவாரப்பகுதியில் பெருங்கற்காலப் பண்பாட்டு வாழ்விடப் பகுதிகள் காணப்படுகின்றன. இப்பகுதியில் மேற்பரப்பாய்வு செய்ததில் பெருங்கற்காலத்தைச் சார்ந்த கருப்பு-சிவப்பு நிற பானையோடுகள், (சிலவற்றில் குறியீட்டுடன் கூடியதும்) சிவப்பு நிற பானை ஓட்டினால் செய்யப்பட்ட சில்லுகள், நிறுத்தல் அளவைக்கு பயன்படுத்தப்பட்ட கல், அம்மி-குழவி போன்றவை கண்டெடுக்கப்பட்டன. இவற்றோடு இரும்பு உருக்கும் குழாய், செல்ட் வகை கற்கருகளும் கண்டெடுக்கப்பட்டன. மேலும் இவ்வாழ்விடப்பகுதியின் தென்-மேற்கு பகுதியில் தாழியும் காணப்படுகின்றன.





# 74. பேராவூரணி வட்டாரத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**இரா.கார்த்திகேயன்**,ஓரத்தநாடு
**கு.இந்திரஜித்**,பேராவூரணி.

### ஆதனூர்

ஆதனூர் பேராவூரணியிலிருந்து தெற்கே 3 கி.மி தொலைவில் உள்ளது, இவ்வூரில் ஓடும் அம்புலியற்றின் இருகரைகளிலும் கருப்பு சிவப்பு, சிவப்பு நிற பானை ஓடுகள் கிடைகின்றன. மேலும், வனத்தசின்னப்பர் ஆலயத்திற்கு தெற்கில்வயல் பகுதிகளில் நுண்கற்கால குவார்ட்சைட், பாய்ண்டர், போரர் போன்ற வெட்டுக்கருவிகளும் கிடைகின்றன.

### பின்னவாசல்

பின்னவாசல் பேராவூரணியிலிருந்து மேற்கே அறந்தாங்கி சாலையில் 8 கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ள சிவன்கோவிலுக்கு வடக்கு புறத்தில் இடைக்கால சிவப்புபானை ஓடுகள்கிடைகின்றன. கோயில்குளத்தில் கருங்கல் விளக்கு உள்ளது. இவ்வூர் ஏரியின் வடகரையில் மேற்கு ஓரமாக உடைந்த முதுமக்கள் தாழிகள் கிடைகின்றன.

### சித்தாதிக்காடு

சித்தாதிக்காடு பேராவூரணியிலிருந்து மேற்கே அறந்தாங்கி சாலையில் 5கி.மி தொலைவில் உள்ளது. இங்கு அம்புலியாற்றின்கரையில் கருப்புசிவப்பு மற்றும் சிவப்பு நிறபானை ஓடுகள்கிடைகின்றன.

### கொரட்டூர்

கொரட்டூர் பேராவூரணியிலிருந்து தெற்கே பெருமகளூர் சாலையில் 6கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ளசிவன் கோவிலுக்கு மேற்குபுறத்தில் கருப்புசிவப்புநிற பானைஓடுகள், பளபளப்பான கருப்புநிற பானைஓடுகள், இரும்புத் துண்டு கிடைகின்றன. மேலும், இவ்வூர் பெரியகுளத்தின் வடகரையில் உடைந்த முதுமக்கள் தாழியின் கழுத்து பகுதி கிடைத்துள்ளது.

### மாவடுக்குறிச்சி

மாவடுக்குறிச்சி பேராவூரணியிலிருந்து மேற்கே 2 கிமிதொலைவில் உள்ளது. இங்குள்ள குளத்தில் முதுமக்கள்

தாழிகள் உடைந்து காணப்படுகின்றன. மேலும், கருப்புசிவப்பு, சிவப்பு நிற பானை ஓடுகள் கிடைகின்றன.

**செங்கமங்கலம்**

செங்கமங்கலம் பேராவூரணியிலிருந்து மேற்கே புதுக்கோட்டை சாலையில் 2 கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ள கண்டி குளத்தில் கருப்பு சிவப்பு நிறபானை ஓடுகள், உடைந்த விளக்குகள் கிடைகின்றன.

**ஊமத்தநாடு**

ஊமத்தநாடு பேராவூரணியிலிருந்து கிழக்கே 13கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ள பாதாளேஸ்வரர் கோயிலுக்கு எதிரே உள்ள குளத்தின் வடகரையில் உடைந்த முதுமக்கள்தாழி துண்டுகள் கிடைகின்றன. தென்புற மேட்டில் கருப்பு சிவப்பு, கருப்பு நிறபானை ஓடுகள் கிடைக்கின்றன.

**விளங்குளம்**

விளங்குளம் பேராவூரணியிலிருந்து கிழக்கே 15கி.மி தொலைவில் உள்ளது. இங்கு ஊரின் கிழக்கே உள்ள குளத்தில் உடைந்த முதுமக்கள் தாழி துண்டுகள் கிடைகின்றன.

**ருத்ரசிந்தாமணி**

ருத்ரசிந்தாமணி பேராவூரணியிலிருந்து கிழக்கே பெருமகளூர் சாலையில் 13கி.மி தொலைவில் உள்ளது. இவ்வூரில் அம்புலி, வில்லுனி, பூனைக்குத்தி ஆறுகள் ஒன்றாக இணைகின்ற பகுதியில் கருப்பு சிவப்பு மற்றும் சிவப்பு நிறபானை ஓடுகள் கிடைகின்றன.

**மணக்காடு**

மணக்காடு பேராவூரணியிலிருந்து பெருமகளூர் சாலையில் 12கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ள வில்லுனி ஆற்றங்கரையில் கருப்பு சிவப்பு மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகள் கிடைகின்றன.

**பெருமகளூர்**

பெருமகளூர் பேராவூரணியிலிருந்து தெற்கே 17கி.மி தொலைவில் உள்ளது. இங்குள்ள சோமநாதர் கோயிலின் வடக்குபுறத்தில் உள்ள மண்மேட்டில் சிவப்புநிற பானை ஓட்டில் கீறல் குறியீடு கிடைத்துள்ளது. மேலும், கருப்பு சிவப்பு நிறபானை ஓடுகள் மற்றும் பளபளப்பான கருப்புநிற பானை ஓடுகள் இரும்புத்துண்டு கிடைகின்றன.

# 75. பண்ருட்டி மற்றும் உளுந்தூர்பேட்டை வட்டாரத் தொல்லியல்

கி.தேவிஸ்ரீ ,தஞ்சாவூர்

**ப**ண்ருட்டி மற்றும் உளுந்தூர் பேட்டைவட்டாரத்தில் உள்ள கெடிலம் ஆற்றுப் பகுதியில் உள்ள கீழ்கண்ட ஊர்களில் களஆய்வு மேற்கொண்டு தொல்லியல் இடங்கள் புதியதாகக் கண்டுப்பிடிக்கப்பட்டன. இவை இரும்புக்கால, வரலாற்றுத் தொடக்கக கால மற்றும் இடைக்காலப் பண்பாட்டுக் காலத்தைச் சார்ந்தவையாகும். அவை

| வ. எண் | ஊர் | காலம் | கண்டுபிடிக்கப்பட்டதொல் லியல்எச்சங்கள் |
|---|---|---|---|
| 1. | திருவாமூர் (11.76 55 42, 277வ 79.46 96 34, 3கி) | இடைக்காலம் | வாழ்விடம், ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள்,கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |
| 2. | திடீர்குப்பம் (11.76 55 42, 277வ 79 46 96 34, 3கி) | இடைக்காலம் | வாழ்விடம், உடைந்தஈமத்தாழிஓடுகள், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |
| 3. | சிறுப்புலியூர் (11. 75 66 75, 97வ79.44 266, 3கி) | இரும்புக்காலம் | ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள் |
| 4. | கிழக்குமருதூர் (11. 74 69 94. 90வ 79. 43 91 70. 9கி) | இரும்புக்காலம் மற்றும் இடைக்காலம் | ஈமக்காடு, ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள்,கருப்புமற்றும்சி வப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள்,இரும் புஉருக்கு |
| 5. | திருநாவலூர் (மங்காரகுளம்)(11. 76 27 87, 126வ79. 39 55 42, 9கி) | இரும்புக்காலம் மற்றும் வரலாற்றுத் தொடக்காலம் | ஈமக்காடு, ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புஉருக்கு, கார்னீலியன் (செம்மணி) மணிகள், உடைந்தகல்வளையல் |

| | | | |
|---|---|---|---|
| 6. | செஞ்சிக்குப்பம் (11. 76 55 41, 10வ, 79.37 51 02, 271கி) | இரும்புக்காலம் மற்றும் வரலாற்றுத் தொடக்காலம் | ஈமக்காடு, ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புகத்தி, குடுவை, தாங்கிகள், மட்கலஓடுகளில்பலவகையானகுறியீடுகள் |
| 7. | பெரியமாரனோடை (11. 76 23 28, 221வ 79. 35 88 06, 7கி) | இடைக்காலம் | வாழ்விடம், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புஉருக்கு |
| 8. | பெரும்பட்டு (11.76 03 732வ 79 34 63 526கி) | இடைக்காலம் | வாழ்விடம், உடைந்தஈமத்தாழிஓடுகள், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், செங்கல், இரும்புஉருக்கு |
| 9. | கூவாகம் (11. 81 80 30, 9வ 79. 34 13 33, 239கி) | இரும்புக்காலம் | அழிந்தஈமக்காடு, கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |
| 10. | பெரியசெவலை (11.84 73 162வ 79. 34 61 918கி) | இரும்புக்காலம் | ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள் |
| 11. | அயன்வேலூர் (11. 80 86 369வ 79.31 24 519கி) | இடைக்காலம் | வாழ்விடம், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புஉருக்கு |
| 12. | கீழ்குப்பம்வேலூர் (11. 80 65 57, 5வ 79. 32 17 58, 300கி) | இரும்புக்காலம், வரலாற்றுத் தொடக்க காலம்மற்றும் இடைக்காலம் | ஈமக்காடு, வாழ்விடம்,ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் பானைஓட்டில்வில்மற்றும்அம்புகுறியீடு |
| 13. | பாண்டூர் (11. 71 65 62, 6வ 79. 28 87 61, 147கி) | இரும்புக்காலம் | அழிந்தஈமக்காடு, வாழ்விடம், உடைந்தஈமத்தாழிஓடுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புஉருக்கு, செங்கல் |

| 14. | செல்லூர் (11. 71 79 26, 9வ 79. 28 39 04, 295கி) | இரும்புக்காலம் | ஈமக்காடு,ஈமத்தாழி, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |
|---|---|---|---|
| 16. | கொண்டசமுத்திரபாளையம் (11. 84 03 94, 6வ 79. 28 61 47, 178கி) | தொல்பழங்காலம் மற்றும் இரும்புக்காலம் | ஈமக்காடு, ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்புஉருக்கு, கல்மரம், செங்கல் |
| 17. | அருங்குறுக்கைபுதூர் (11. 86 43 57, 5வ 79. 26 67 99, 217கி) | இரும்புக் காலம் மற்றும் வரலாற்றுத் தொடக்காலம் | ஈமக்காடு, ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள், கருப்புமற்றும்சிவப்பு, கருப்பு, சிவப்புமட்கலஓடுகள், இரும்பு உருக்கு, இரும்புஉருக்குக் ஊதுளைகள், குறியீடு |
| 18. | தாமல் (11. 85 44 07, 10வ 79. 26 66 96, 142கி) | இரும்புக்காலம் | ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள் |
| 19. | நன்னாவரம் (11. 78 89 98, 9வ 79. 27 39 03, 221கி) | இடைக்காலம் | வாழ்விடம், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |
| 20. | அரளி(11.72 61 17, 6வ (79. 29 33 52, 205கி | இடைக்காலம் | வாழ்விடம், கருப்பு, சிவப்புமட்கலஓடுகள் |





# அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

## 76. தமிழ்-பிராமியின் காலம்-சிக்கல்களும் தீர்வுகளும்

**கா.ராஜன்,** புதுச்சேரி

**இ**ந்தியாவில் இதுவரை கிடைத்துள்ள சான்றுகள் போற்றத்தக்க அளவில் இல்லாததால் இந்திய எழுத்துகளின் தோற்றம் குறித்து ஒரு இறுதியான முடிவுக்கு வர இயலாமல் போய்விட்டன. சிந்துவெளி எழுத்துகள் தோன்றிய காலம் தொட்டுப் பிராமி எழுத்துகள் காலம் வரை வரிவடிவத்தில் ஏற்பட்ட கால நிலையிலான வளர்ச்சியைக் கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் அறிந்துகொள்ள இயலவில்லை. இந்தியாவில் கிடைத்த முதல் வரிவடிவமான சிந்துவெளி எழுத்துகள் சிந்து நதி பள்ளத்தாக்கிலும், கஹ்கர்-கக்ரா (Ghaggar-Hakra) ஆற்றுப் பள்ளத்தாக்கிலும், குஜராத் மாநிலத்தின் கட்ச் மற்றும் சௌராஷ்டிரா பகுதியிலும் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள் நின்று நிலவிய போதிலும், சியடைட், ஃபியான்ஸ், செம்பு, சுடுமண், சங்கு, மட்பாண்டங்கள், தந்தம் போன்ற பொருட்களின் மீது எழுதப்பட்ட 5000க்கும் மேற்பட்ட பொறிப்புகள் கிடைத்துள்ள போதிலும், 300-400க்கும் மேற்பட்ட எழுத்துருக்கள் பதிவு செய்யப்பட்டபோதிலும் சிந்துவெளி எழுத்துருக்கள் குறித்து இறுதி முடிவு எட்டமுடியவில்லை[1]. இந்நிலை சிந்து

---

1 Frenez, Dennys, Michele Degli Esposti, Sophie Méry and Jonathan Mark Kenoyer, 2016, "Bronze Age Salūt (ST1) and the Indus Civilization: recent discoveries and new insights on regional interaction", *Proceedings of the Seminar for Arabian Studies,* vol.46, pp.107–124; Mahadevan, Iravatham, 1977 *The Indus Script: Texts, Concordance, and Tables,* Archaeological Survey of India, New Delhi; Parpola, Asko, Brij Mohan Pande, and Petteri Koskikallio, 2010 *Corpus of Indus Seals and Inscriptions. [M-1660 to 2134, H-1020 to 2590] 3, Pt. 1 Pt. 1 3, Pt. 1 Pt. 1.,* Suomalainen Tiedeakatemia, Helsinki; Possehl, Gregory L., 1996 *Indus Age: The Writing System,* University of Pennsylvania Press, Philadelphia; Vidale, Massimo and Dennys Frenez, 2015 "Indus Components in the Iconography of a White Marble Cylinder Seal from Konar Sandal South (Kerman, Iran)", *South Asian Studies*, vol.31, no.1, pp.144-154.

பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவிய தி.நா. சுப்ரமணியன் அறக்கட்டளை சொற்பொழிவு வரிசையில் 19வது சொற்பொழிவு 22.07.2017 அன்று நிகழ்த்தப்பட்டது.

எழுத்துகளுக்குப்பின் தோன்றிய குறியீடுகள், பிராமி எழுத்துகளின் தோற்றம் குறித்து அறிந்து கொள்வதிலும் இடர்ப்பாடுகளை ஏற்படுத்துகின்றன. மேலும், பிற்கால வரிவடிவங்களைப் பார்க்கும் பொழுது பொதுவாக அவை 300-500 ஆண்டுகளுக்கு உள்ளாக வரிவடிவத்தில் மாற்றம் அல்லது வளர்ச்சி நிலையை எட்டியிருப்பதைக் காணலாம். ஆனால், ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள் பயன்பாட்டில் இருந்த சிந்துவெளி வரிவடிவத்தில் எவ்வித மாற்றமும் இல்லை என்பதை உற்று நோக்க வேண்டி உள்ளது. இருப்பினும், எதிர்கால ஆய்வுகள், புதிய கண்டுபிடிப்புகள் இவை குறித்து ஒரு தெளிவைத்தரலாம்.

இருப்பினும், இந்திய நாட்டில் காலத்தால் முந்திய வரிவடிவங்களாக மூன்று வரிவடிவங்கள் குறிப்பிடப்படுகின்றன. அவை சிந்துவெளி பண்பாட்டில் பயன்படுத்தப்பட்ட வரிவடிவம், செப்பு மற்றும் இரும்பு பண்பாட்டுக்காலத்தில் பயன்படுத்தப்பட்ட குறியீடுகள் என்றழைக்கப்படுகின்ற வரிவடிவம், தொடக்க வரலாற்று காலத்தில் பயன்படுத்தப்பட்ட பிராமி வரிவடிவம் ஆகும். இவற்றில் முதல் இரண்டு வரிவடிவங்கள் இன்றுவரை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க வகையில் படித்துணரப்படவில்லை. ஆதலால் இவ்விரு வரிவடிவங்கள் குறித்த ஆய்வுகள் தொடக்க நிலையிலேயே உள்ளன எனலாம். பிராமி என்ற வரிவடிவம் மட்டும் மிகச்சிறந்த முறையில் படித்துணரப்பட்டதாலும், இவ்வெழுத்து முறையே இந்தியா, இலங்கை மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தோன்றிய பிற்கால வரிவடிவங்களுக்குத் தாய் வரிவடிவமாக திகழ்கின்ற காரணத்தாலும் பிராமி வரிவடிவத்தின் தோற்றம், காலம் மற்றும் சமூகத்தில் அவ்வரிவடிவம் ஏற்படுத்திய தாக்கம் குறித்துப் பல்வேறு கருதுகோள்கள் முன் வைக்கப்படுகின்றன. மேலும், பிராமி வரிவடிவத்தினைத் தொடக்கக் காலத்தில் சமஸ்கிருதம் அல்லாது வேறு இரு மொழிகள் பயன்படுத்தியுள்ளன. அவற்றில் ஒன்று தமிழ் மற்றொன்று பிராகிருதம். பிராமி வரிவடிவம் பயன்படுத்திய இவ்விரு மொழிகள் காலத்தால் முந்திய மொழிகளாகக் காணப்படுவதால் இவ்விரு மொழிகளில் ஒன்றே பிராமி வரிவடிவம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்திருக்கக்கூடும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எனவே, பிராமி வரிவடிவத்தின் தோற்றம் மற்றும் காலம் குறித்து ஆய்வாளர்களிடையே பெருத்த எதிர்பார்ப்பு காணப்படுகின்றன.

சிந்துவெளி பண்பாட்டில் காணப்படுகின்ற எழுத்துகளையும் அதனைத் தொடர்ந்து செப்புக்காலப் பண்பாட்டிலும் இரும்புக்காலப் பண்பாட்டிலும் காணப்படுகின்ற குறியீடுகளையும்

பல்வேறு அறிஞர்கள் ஆய்வுக்கு உட்படுத்திய போதிலும் இவ்வெழுத்துருக்கள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க வகையில் படித்துணரப்படவிடல்லை. இந்தியாவில் பொ.ஆ..மு. 3000 முதல் பொ.ஆ..மு. 1500 வரை நின்று நிலவிய சிந்துவெளி எழுத்துருக்களையும், கி.மு. 1500 முதல் கி.மு.600 வரை பயன்பாட்டில் இருந்த குறியீடுகள் என்றழைக்கப்படுகின்ற வரிவடிவங்களையும் முழுமையாகப் படித்துணரப்படாததால் இக்காலக்கட்டத்தில் நின்று நிலவிய பல்வேறு மொழிகளின் கூறுகளையும் அம்மொழிகளுக்கான எழுத்துருக்களையும் முழுமையாக வெளிக்கொணர இயலாது போய்விட்டது.

இந்தியாவிலும், குறிப்பாகத் தென் இந்தியாவிலும், இலங்கையிலும் ஏராளமான குறியீடுகள் கிடைத்துள்ளன. தமிழகத்தில் மட்டும் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட குறியீடுகள் பொறிப்பு பெற்ற பானை ஓடுகள் கிடைத்துள்ளன. கொடுமணலில் கிடைத்த 1456இல் ஏறத்தாழ ஐம்பத்தெட்டு குறியீடுகள் தனிக்குறியீடுகளாகவும், இருபத்தினான்கு குறியீடுகள் அடிப்படைக்குறியீடுகளாகவும் கண்டறியப்பட்டுள்ளன[2]. குறியீடுகளின் எண்ணிக்கை, அவற்றின் பரவல், அவற்றை எழுதத் தெரிவு செய்யப்பட்ட மட்பாண்டம், அவை பொறிக்கப்பெற்றுள்ள இடம், தமிழ்-பிராமி எழுத்துகள் பொறிக்கப்பெற்ற பானையோடுகளில் அவற்றின் நிலை, மற்றும் தமிழ்-பிராமி எழுத்துகள் பொறிக்கப்பெற்ற பானையோடுகளுக்கும் இவற்றிற்கும் இடையிலான புள்ளியியல் சார்ந்த ஒத்திசைவுத் தரவுகள் அனைத்தும் இக்குறியீடுகளின் முக்கியத்துவத்தைத் தெளிவாக உணர்த்துகின்றன. அடிப்படைக் குறியீடுகளின் எண்ணிக்கையும், அவற்றின் மாறுபட்ட வடிவங்களும் இக்குறியீடுகள் வெறும் கீறல்கள் அல்ல என்பதையும் அவை ஏதோவொரு வகையில் சமூக முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தன என்பதையும் உணர்த்துவனவாயுள்ளன. இத்தகைய சாதகமான தரவுகள் அல்லது செய்திகளுக்கு அப்பால் இக்குறியீடுகள் அல்லது குறியீடுகளின் பின்புலத்தில் உள்ள உண்மையான பொருளைப் புரிந்துகொள்வதற்குப் பின்வரும் கேள்விகளுக்கு நாம் விடை காண்பதும் அவசியம்.

சிந்து வெளி எழுத்துகளின் வளர்ச்சியாக இக்குறியீடுகளைக் கொள்வோமானால், பிந்தைய ஹரப்பா பண்பாட்டு காலத்திற்கும், இரும்பு காலத்திற்கும் இடையேயான பண்பாட்டு உறவுகளை மத்தியச் செம்புக்கால பண்பாட்டின் ஊடாகவும், தென்

2 Rajan, K., 2015 *Early Writing System – A Journey from Graffiti to Brāhmī*, Pandya Nadu Centre for Historical Research, Madurai.

இந்தியாவின் செம்புக் கால மற்றும் புதிய கற்காலப் பண்பாடுகளின் ஊடாகவும் இதன் நிலைப்பாட்டை நிறுவவேண்டும்.

இக்குறியீடுகளைப் பிராமி எழுத்துகளுக்கு முந்தைய எழுத்துகள் என்று கொண்டால், மூன்று நூற்றாண்டுகளுக்கும் மேலாக இவ்விரு எழுத்து முறைகளும் இணைந்தே வந்துள்ளதற்கான கேள்விக்கு விடையளித்தாக வேண்டும்.

இவை வெறும் கீறல்கள் மட்டுமே என்று கொண்டால், பிராமி எழுத்துகளின் தோற்றத்திற்குப் பின்னும் அக்காலச் சமூகம் இவற்றைக் கைவிடாததன் காரணம் என்ன என்ற கேள்விக்கு விடையளித்தாக வேண்டும்.

மொழிசாராக் குறியீடுகள் எனக் கொண்டால், ஒரு குறிப்பிட்ட நிலவியல் பரப்பில், அதிக எண்ணிக்கையில் இக்குறியீடுகள் ஏன் கிடைக்கின்றன என்ற கேள்விக்கு விடை காண வேண்டும்.

ஒரு பானையில் பொறிக்கப்பட்டுள்ள குறைந்த எண்ணிக்கையிலான குறியீடுகள், தமிழ்-பிராமி பொறிக்கப்பெற்ற பானை ஓடுகளில் உள்ளதைப் போல ஒருவரின் ஆட் பெயரைக் குறிப்பவையா அல்லது அதற்கும் அப்பாற்பட்ட பொருளைக் குறிப்பவையா என்ற கேள்விக்கு விடை காண வேண்டும்.

இக்குறியீடுகள் வணிகர்கள் அல்லது அவற்றின் உரிமையாளர்களின் பெயர்களைக் குறிப்பவையா அல்லது சமூகத்தில் உயர் நிலையில் இருந்தோர் அல்லது குலக்குழுப் பெயர்களைக் குறிப்பவையா என்பது குறித்த கேள்விக்கும் விடை காண வேண்டும்.

உருவ வரைவுகளாக *(pictographic)*, சொற்குறியீடுகளாக *(logo-graphic)*, சொற்குறியீடுகளும் ஒலிக்குறியீடுகளும் கலந்த எழுத்துமுறைகளாக *(logo-syllabic)* அல்லது அசையெழுத்துக்களாக *(syllabic)* என எந்த வகையான தகவல் பரிமாற்றச் சாதனமாக இக்குறியீடுகள் பயன்படுத்தப்பட்டன என்ற கேள்விக்கும் விடை காண வேண்டும்.

குறியீடுகள் குறித்து முழுமையாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் நாம் அறிந்து கொள்ள வேண்டுமானால் இது போன்ற இன்னும் பல கேள்விகளுக்கு நாம் விடையளித்தாக வேண்டும். இத்தகைய புரிதலில் குறைபாடுகள் இருப்பினும், சில குறியீட்டு தொகுப்புகள் சிந்துவெளிக் குறியீடுகளோடு ஒத்து காணப்படுவதால் எதிர்காலத்தில் சிந்துவெளி எழுத்துகள் படித்துணரப்படும் பொழுது இக்குறியீடுகள் படித்துணர்வதற்கான

வாய்ப்புள்ளது என்ற நம்பிக்கைக் கீற்றை நமக்கு அளிப்பனவாக உள்ளன.

இருப்பினும் அசோகருடைய கல்வெட்டுகளில் காணப்படுகின்ற வரிவடிவங்களாகிய பிராமி எழுத்து வரிவடிவங்களைப் படித்தறிந்ததன் மூலம் இந்தியாவில் பிராமி வரிவடிவத்தின் காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டுக்குப் பின் நோக்கித் தள்ளப்பட்டது. அசோகர் கல்வெட்டுகளில் முதன் முதலாகக் காணப்பட்டதால் இவை அசோகன்-பிராமி என்றும் பின்னர் மௌரிய பேரரசின் எல்லைக்கு உட்பட்ட பகுதியில் இவை கிடைத்தமையால் இவை மௌரிய-பிராமி என்றும் பெயர் பெற்றன. பின்னர் ஆந்திர மாநிலத்தில் உள்ள பட்டிபுரொலு என்ற இடத்தில் கிடைத்த பிராமி வரிவடிவங்கள் அசோகர்-பிராமி எழுதப் பின்பற்றிய எழுத்துமுறைமையிலிருந்து சிறிது மாறுபட்டுக் காணப்பட்டமையால் அசோகர்-பிராமி எழுத்து முறைமையை வட-பிராமி என்றும், பட்டிபுரொலு எழுத்து முறைமையைத் தென்-பிராமி என்றும் அழைக்கத் தலைப்பட்டனர்[3]. 1882 ஆம் ஆண்டு ராபர்ட் சீவல் அவர்களால்[4] மதுரை மாவட்டம் மேலூருக்கு அருகாமையில் அமைந்துள்ள மாங்குளம் என்ற ஊரில் காணப்படும் சமணர் குகைத்தளங்களில் கிடைத்த பிராமி கல்வெட்டுகள் பிராகிருத மொழியைத் தாங்கி நிற்காமல் தமிழ் மொழியையே தாங்கி நிற்கின்றன எனக் கே.வி.சுப்பிரமணிய ஐயர் அவர்கள் 1924 ஆண்டு நிறுவினார்[5]. இந்தியாவில் உள்ள ஏனைய பகுதிகளில் காணப்படும் பிராமி கல்வெட்டுகளும், இலங்கையில் காணப்படும் நூற்றுக்கணக்கான கல்வெட்டுகளும் பிராகிருத மொழியைத் தாங்கி நிற்க இவ்விரு நிலப்பகுதிகளுக்கும் இடைப்பட்ட சிறிய நிலப்பகுதியான பண்டைத்தமிழகம் தமிழ்மொழியைத் தாங்கி நிற்பது அதன் தொன்மையையும், தனித்தன்மையையும் வெளிப்படுத்துவனவாக அமைந்தன (படம் 1). தமிழ்மொழியைத் தாங்கி நிற்கும் பிராமி கல்வெட்டுகளைத் தமிழகத்தின் அப்பால் பிராகிருத மொழியைத் தாங்கி நிற்கும் பிராமி கல்வெட்டுகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் பொருட்டு இவை தமிழ்-பிராமி என்றழைக்கப்பட்டன. இருப்பினும் இந்தியாவிலும், இலங்கையிலும் கிடைத்த எழுத்துருக்களுக்குப்

3 T.N.Subramanian, 1957 *South Indian Inscriptions,* vol. 3, part 2, pp.1508-1512, Government Oriental Manuscripts Library, Madras.

4 R.Sewell, 1882 *List of Antiquarian Remains in the Presidency of Madras*, Archaeological Survey of India, New Delhi.

5 K.V.Subrahmanya Aiyer, 1924 "The Earliest Monuments of the Pāṇḍiya Country and Their Inscriptions", in *Proceedings and Transactions of the Third All-India Oriental Conference,* Madras, pp.275-300.

பிராமி என்று பெயர் அளிக்கப்பட்டதும் கூடச் சரியானதுதான் என்று இன்று வரை உறுதிப்படுத்த இயலவில்லை. பௌத்த, சமண மத நூல்களான லலிதவிஸ்தரா மற்றும் பன்னவனசுத்த போன்ற நூல்களில் முறையே 64 மற்றும் 18 வரிவடிவங்கள் இந்தியாவில் இருந்ததாகக் குறிப்புகள் காணப்படுவதாலும், இப்பட்டியலில் பிராமி வரிவடிவத்தின் பெயர் முதலில் காணப்படுவதாலும் இவ்வரிவடிவத்திற்குப் பிராமி எனப் பெயரிடப்பட்டது. இந்நூலில் குறிப்பிடப்படும் அனைத்து வரிவடிவங்களும் இந்தியாவில் கண்டறிய இயலாது போயினும் பிராமி, கரோஷ்டி, தமிழி ஆகிய வரிவடிவங்கள் கண்டறியப்பட்டன. இப்பட்டியலில் பிராமி வரிவடிவமும், தமிழி வரிவடிவமும் இடம்பெற்றிருந்ததால் இவ்விரு வரிவடிவங்களும் வெவ்வேறானவை எனக் கணக்கில் கொண்டு தமிழகத்தில் காணப்படும் வரிவடிவங்களைத் தமிழி என்றே அழைக்கவேண்டும் என இரா.நாகசாமி, நடன..காசிநாதன், எம். டி.சம்பத் போன்றோர் கருதுகின்றனர்.

இந்தியாவில் அக்காலகட்டத்தில் வழக்கில் இருந்ததாகக் கருதப்படும் அசோகன்-பிராமி வரிவடிவமும், தமிழ்-பிராமி வரிவடிவமும் நன்கு படித்தறியபட்டபோதிலும் இவற்றிற்கான காலவரையறை செய்வதில் இடர்ப்பாடுகளை சந்தித்தனர். இந்தியாவிலும் இலங்கையிலும் கிடைத்த பிராமி எழுத்துப்பொறிப்புக்களை தாங்கி நிற்கின்ற அனைத்துப் பொருட்களும் பாறைகளின் மீதும், மட்பாண்டங்களின் மீதும், உலோகப் பொருட்களின் மீதும் எழுதப்பட்டிருந்தமையால் அவற்றை அறிவியல் அடிப்படையில் காலக்கணிப்பு செய்ய இயலவில்லை. அறிவியல்ரீதியான கரியமிலக்காலக்கணிப்பு என்பது உயிரியல் பொருட்களான எலும்பு, தந்தம், மரம், இலை போன்றவற்றின் மீது எழுதப்பட்டிருந்தாலே காலக்கணிப்பு செய்ய இயலும். இதன் காரணமாகப் பிராமி வரிவடிவங்களின் காலத்தைத் தொல்லியலார் அகழாய்வுக்குழிகளில் காணப்படும் மண்ணடுக்குகளின் அடிப்படையிலும், கல்வெட்டியலார் வரிவடிவத்தின் அடிப்படையிலும், மொழியியலார் மொழிக்கூறுகளின் அடிப்படையிலும், இலக்கியவியலார் சங்க இலக்கியத்தின் அடிப்படையிலும் காலக்கணிப்பு செய்தனர். இவர்கள் பின்பற்றிய பன்முக ஆய்வு நெறிமுறையின் காரணமாகப் பிராமி எழுத்துருக்களின் காலம் குறித்து ஒத்த கருத்து ஏற்படவில்லை. அசோகர் காலக்கல்வெட்டுகளின் காலத்தையே பிராமி எழுத்துருக்களின் காலமாக ஏற்றுக்கொள்ளத் தலைப்பட்டனர்.

தமிழகத்தைத் தாண்டிய இந்தியாவிலும், இலங்கையிலும் கிடைத்த அனைத்துப் பிராமி கல்வெட்டுகளும் பிராகிருத மொழியையும், பௌத்தம் சமயத்தையும் சார்ந்திருக்கத், தமிழகப் பிராமி கல்வெட்டுகள் தமிழ் மொழியையும், சமணச் சமயத்தையும் தாங்கி நின்றன. இந்நிலை ஒரு புதிய சிக்கலை ஏற்படுத்தியது. மேலும், சங்கம் வளர்த்த பாண்டிய நாட்டில் வைகை ஆற்றின் வலது கரையில் வத்தலகுண்டுக்கு அருகாமையில் அமைந்துள்ள புலிமான்கோம்பை என்ற இடத்தில் கிடைத்த சங்ககாலத்தைச் சார்ந்த தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மூன்று நடுகற்கள் கிடைத்தன[6] (படம் 2-7). இவை, இதுவரை காலத்தால் முந்தியதாகக் கருதப்பட்ட பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் பெயர் தாங்கி நிற்கின்ற மாங்குளம் கல்வெட்டுகளின் காலத்தைவிட காலத்தால் முந்தியது என அறிஞர் பெருமக்கள் கருதுகின்றனர். இச்சான்றுக்கு மேலும் வலுவூட்டும் வகையில் அதே ஆற்றங்கரையில் புலிமான்கோம்பைக்கு கிழக்கே 5 கல் தொலைவில் தாதப்பட்டி என்ற இடத்தில் நட்டபோலும் நடா நெடுங்கல் என்றழைக்கப்படுகின்ற நடுகல் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது[7] (படம் 8-9). இவ்விரு இடங்களிலும் கிடைத்த நான்கு நடுகற்கள் தமிழ்-பிராமி எழுத்துகளின் காலம் தொடர்பாக இதுவரை கொண்டிருந்த கருத்துகளை மீண்டும் மறு ஆய்வு செய்யத்தூண்டின. இந்நான்கு நடுகற்களும் சமயம் சார்பற்று எவ்விதப் பிராகிருத மொழி கலப்பின்றித் தூய தமிழ் சொற்களால் எழுதப்பட்டிருந்த காரணத்தால் தமிழ்-பிராமி எழுத்துகளின் காலத்தைப் பின்னோக்கித் தள்ளவேண்டிய சூழலை இவை ஏற்படுத்தித்தந்தன. முன்பே குறிப்பிட்டதுபோல இக்காலக்கணிப்பு முறை அனைத்தும் வரிவடிவம், எழுத்துமுறைமை, சொல்லாட்சி, மொழியின் அமைப்பு போன்றவற்றின் அடிப்படையிலேயே அமைந்ததால் இக் காலக்கணிப்பை அனைத்து அறிஞர்களும் ஒருமுகமாக ஏற்றுக் கொள்வதில் இடர்ப்பாடுகள் தோன்றின. எனவே பிராமி எழுத்துகளின் காலம் குறித்த வரன்முறை அனைத்தும் கேள்விக்குட்படுத்தப்பட்டன. எனவே அறிவியல் முறையிலான காலக்கணிப்பு ஒன்றே இதற்குத் தீர்வாக அமையும் என்று ஆய்வாளர்கள் கருதினர். அதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

6 K. Rajan, V.P.Yatheeskumar and S.Selvakumar 2007 "The Earliest Herostones of India", *History Today,* vol.7, pp.118-121.

7 K. Rajan and V.P.Yatheeskumar 2007 "Thathappatti: Tamil-Brahmi inscribed hero stone", *Man and Environment,* vol.33, no.1, pp.39-45.

**காலக்கணிப்பு**

இலங்கையின் மிகத்தொன்மை ஊராகக் கருதப்படும் அநுராதபுரம் என்ற இடத்தில் தெரிணியகலா மற்றும் ராபின் கோனிங்காம் தலைமையில் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. இவ்வகழாய்வில் பிராகிருதம் தாங்கிய பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மட்பாண்டங்கள் குறிப்பிட்ட மண்ணடுக்குகளில் கிடைத்தன. இம்மண்ணடுக்குகளில் இருந்து எடுக்கப்பட்ட பொருட்கள் காலக்கணிப்புக்கு உட்படுத்தப்பட்டன. அவற்றின் காலம் பொ.ஆ..மு. 6ஆம் நூற்றாண்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டதால் அம்மண்ணடுக்குகளில் கிடைத்த பிராமி எழுத்துப் பொறிப்பு பெற்ற மட்பாண்டங்களின் காலமும் பொ.ஆ..மு. 6ஆம் நூற்றாண்டிற்கு எடுத்துச்செல்லபட்டன[8]. ஆயினும், பௌத்த மதம் அசோகரால் இலங்கையில் புகுத்தப்பட்ட போதுதான் பிராமி வடிவமும் அங்குப் புகுத்தப்பட்டிருக்க வேண்டும் என்ற அடிப்படையில் இக்காலத்தை ஏற்றுக்கொள்வதில் அறிஞர்கள் தயக்கம் கொண்டனர். இருப்பினும், இக்கால வரையறை இதுவரை பிராமி எழுத்துகளின் காலம் தொடர்பாகக் கொண்டிருந்த கருத்தை உரசிப்பார்த்தது. இந்நிலையில், பொருந்தல் மற்றும் கொடுமணல் அகழாய்வில் வெளிப்போந்த தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மட்பாண்டங்களும் தமிழ்-பிராமி எழுத்துகளின் காலம் குறித்து முக்கியச் செய்திகளை நமக்கு வழங்கின. அறிவியல் வழியான கரிமிலக்காலக்கணிப்பு முறையில் பொருந்தல், கொடுமணல் அகழாய்வில் கிடைத்த பொருட்கள் காலக்கணிப்பு செய்யப்பட்டுத் தமிழ்-பிராமியின் காலம் பொ.ஆ.மு. 6ஆம் நூற்றாண்டிற்குப் பின் நோக்கித் தள்ளப்பட்டது.

---

8 R.A.E. Coningham, R.A.E., *et.al.*, 1996 "Passage to India? Anuradhapura and Early Use of Brāhmī Script", *Cambridge Archaeological Journal*, vol.6, no.1, pp.73-97; Deraniyagala, S.U., 1972 "The Citadel of Anuradhapura: Gedige 1984, a preliminary report", *Ancient Ceylon,* vol.6, pp.39-47; Deraniyagala, S.U., 1986 "Excavations in the Citadel of Anuradhapura 1969: Excavations in Gedige Area", *Ancient Ceylon,* vol.2, pp.48-170; Deraniyagala, S.U., 1990 "Radio Carbon dating of Early Brāhmī Script in Sri Lanka", *Ancient Ceylon,* vol.11, pp.149-168; Deraniyagala and Abeyratne 2000 "Radiocarbon Chronology of Anuradhapura, Sri Lanka: A Revised Age Estimate:, in M.Taddei and G.De Marco (eds.), *South Asian Archaeology 1997,* Proceedings of the Fourteenth International Conference of the European Association of South Asian Archaeologists held in the Instituto Italiano per l'Africa e l'Oriente, Palazzo Brancaccio, Rome 7-14, July 1997, Instituto Italiano per l'Africa e l'Oriente, Rome, pp.759-791.

**பொருந்தல் அகழாய்வு**

ஆன்பொருநை ஆற்றின் கரையில் அமைந்துள்ள கருவூரை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்த மாந்தரல் சேரல் இரும்பொறையை புகழ்ந்து பாடிய பொருந்தில் இளங்கீரனார் (அகம் 19, 351, புறம் 53) வாழ்ந்த ஊராகக் கருதப்படுகின்ற பொருந்தல் என்ற சங்ககால ஊர் வைகாவூரினை தலைமை இடமாகக்கொண்டு ஆட்சிபுரிந்த ஆவியர் குடியைச் சார்ந்த வேளிர் மன்னனான வேளாவிக்கோபெரும்பேகனின் எல்லைக்குட்பட்ட இடமாகக் காணப்படுகிறது (புறம் 143-147). இப்பகுதியை வேளிர் மன்னர்களான நெடுவேள் ஆவியும், வேள் ஆவிக்கோ பதுமனும் ஆட்சிபுரிந்துள்ளனர் (அகம் 1, 61). பழனிக்கு அருகாமையில் பொருந்திலாற்றின் கரையில் அமைந்துள்ள இவ்வூரில் 2009, 2010இல் பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தின் வரலாற்று துறையின் சார்பாக அவ்வூரின் வடக்கே அமைந்துள்ள பாசி மேடு அழைக்கப்படுகின்ற வாழ்விடப்பகுதியில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன[9]. இவ்வகழாய்வுகளில் ஆடி (கண்ணாடி) மணிகள் உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட உலைக்கலங்கள் ஏராளமான கண்ணாடி மணிகளுடன் கண்டெடுக்கப்பட்டன. இவ்வாழ்விடப்பகுதிக்கு மேற்கே 2.5 கல் தொலைவில் அமைந்துள்ள ஈமக்காட்டில் நான்கு பெருங்கற்படைச்சின்னங்கள் அகழப்பட்டன. கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கையில் இருந்து ஏராளமான ஈமப்பொருட்கள் வெளிக்கொணரப்பட்டன. அவற்றில் ஒரு கல்லறையின் வடமேற்கு மூலையில் நான்கு கால்களுடன் கூடிய பெரிய (சாடி) கலத்தில் வைக்கப்பட்டிருந்த நெல்மணிகளும், அதற்கு அருகாமையில் வைக்கப்பட்டிருந்த ”வய்ர” என்ற தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மட்கலத்தாங்கியும் (பிரிமணை) மிக முக்கியத்துவம் பெற்றன (படம் 10-12). பெரும்படைகளாக ஈமச்சின்னத்தில் வைக்கப்படும் அனைத்துப் பொருட்களும் ஒரே காலக் கட்டத்தைச் சார்ந்தவையாகும். அந்த வகையில் இந்நெல்மணிகளும் அத்துடன் வைக்கப்பட்ட தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மட்கலத்தாங்கியும் (பிரிமணை) ஒரே காலகட்டத்தைச் சார்ந்ததாகும். எனவே, இந்நெல்மணிகளைக்

---

9 Rajan, K., and V.P.Yathees Kumar 2014 *Archaeology of Amaravathi River Valley – Porunthal Excavations,* vols. 1 and 2, Sharada Publishing House, Delhi; Rajan, K., 2014 "Archaeological Excavations at Porunthal, District Dindugul, Tamil Nadu", *Man and Environment,* vol.38, no.2, pp.62-85.

K.Rajan, 2012 *Recent Researches in the Archaeology of Tamil Nadu,* pp.158-196, Banaras Hindu University, Varanasi.

காலக்கணிப்புக்கு உட்படுத்தப்படுவதன் மூலம் தமிழ்-பிராமி எழுத்துகளுக்குக் காலவரையறை செய்ய இயலும் என்ற அடிப்படையில் கரியமிலக்காலக்கணிப்பில் சிறந்து விளங்கும் அமெரிக்காவில் உள்ள பீட்டா அனலடி ஆய்வுக்கூடத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டது. இவ்வாய்வகம் இந்நெல்மணிகளின் காலத்தைக் பொ.ஆ,மு. 490 எனக் காலக்கணிப்பு செய்தது. இதன் மூலம் இந்நெல்மணிகளுடன் வைக்கப்பட்டிருந்த தமிழ்-பிராமி எழுத்துகளுக்கும் அதே கால வரையறை செய்யப்பட்டன. இக்காலவரையறை முதன் முதலாகப் பிராமி எழுத்துகளுக்குச் செய்யப்பட்டதாலும், அவை, இதுவரை அறிஞர் பெருமக்கள் கொண்டிருந்த காலவரையறைக்கு உட்படாமல் இருந்ததாலும் இக்காலக்கணிப்பை ஏற்றுக்கொள்வதில் சுணக்கம் காட்டினர். மேலும், ஒரே ஒரு காலக்கணிப்பை மட்டும் வைத்துக்கொண்டு இறுதி முடிவுக்கு வருவது ஏற்புடையதாக இருக்காது என்பதால் தயக்கம் காட்டினர். இக்காலக்கணிப்புக்கு வலுவூட்டும் வகையிலும், அறிஞர்களின் தயக்கத்தை நீக்கும் வகையிலும் மற்றொரு ஈமக்குழியில் கிடைத்த நெல்மணிகளும் காலக்கணிப்புக்கு உட்படுத்தப்பட்டு அதன் காலம் பொ.ஆ.மு. 450 என இறுதிசெய்யப்பட்டது (படம் 13-14). பொ.ஆ.மு.. 490 மற்றும் பொ.ஆ.மு. 450 ஆகிய இவ்விரு காலக்கணிப்புகளும் தமிழ்-பிராமி எழுத்துகளின் காலத்தை 2500 ஆண்டுகளுக்கு முன்பாக எடுத்துச்சென்றன[10].

மேற்கூறிய காலத்தை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் காட்டிய அறிஞர் பெருமக்கள் இவ்விரு காலக்கணிப்புகளும் பெருங்கற்படைச் சின்னங்களில் இருந்து மட்டுமே வெளிப்போந்தவை என்றும், வாழ்விடப்பகுதியில் இருந்து கிடைக்கும் தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற மட்பாண்டங்களுக்கும் காலக்கணிப்பு செய்யப்படுமானால் இக்காலக்கணிப்பை ஏற்றுக்கொள்வதில் இருக்கும் தயக்கம் மேலும் விலகக்கூடும் என்ற கருத்தை முன்மொழிந்தனர். ஆய்வு நெறிமுறையில் இக்கருத்துகள் ஏற்புடையதே என்ற அடிப்படையில் பதிற்றுப்பத்தில் வியந்து பேசப்பட்ட கொடுமணம் என்றழைக்கப்பட்ட கொடுமணல் என்ற சங்ககால ஊர் அகழாய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

---

10 Rajan, K., and V.P.Yathees Kumar 2013 "New evidences on scientific dates for Brahmi Script as revealed from Porunthal and Kodumanal Excavations, *Pragdhara,* vol.21-22, pp.279-295.

**கொடுமணல் அகழாய்வு**

ஈரோடு மாவட்டம் பெருந்துறை வட்டம் சென்னிமலைக்கு மேற்கே 15 கி.மீ தொலைவில் நொய்யல் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள இவ்வூர் சங்ககாலத்தில் சிறப்புற்றிருந்த வணிகப் பெருநகரமாகும். சங்க இலக்கியமான பதிற்றுப்பத்தில் இவ்வூர் கொடுமணம் என்றழைக்கப்படுகிறது. சங்ககாலத்தில் அரிய கற்களால் ஆன அணிகலங்களை உற்பத்தி செய்யும் தொழிற்கூடமாக விளங்கியிருந்ததைக் "கொடுமணம் பட்ட ...... நன்கலம்" (பதிற்றுப்பத்து 67) எனச் சங்கப் புலவர் கபிலரும், "கொடுமணம் பட்ட வினைமான் அருங்கலம்" (பதிற்றுப்பத்து 74) என அரிசில்கிழாரும் குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகிறது. இவ்வூர் சேரரின் தலைநகரமாக விளங்கிய கரூவூரையும், அவர்களது சிறப்பு பெற்ற மேலை கடற்கரை துறைமுகமான முசிறிபட்டினத்தையும் இணைக்கும் பெருவழியில் அமைந்துள்ளது. இப்பெருவழி பிற்காலக் கல்வெட்டுகளில் "கொங்கப் பெருவழி" என அழைக்கப்படுவதன் மூலம், இப்பெருவழியில் ஏராளமான வெள்ளி மற்றும் தங்க ரோம நாணயங்கள் கத்தாங்கண்ணி, சூலூர், வெள்ளலூர், வேலந்தாவளம் போன்ற இடங்களில் கிடைத்ததன் மூலமும் இது உறுதிப்படுத்தப்படுகிறது.

இவ்வூரின் கிழக்கே 15 ஹெக்டேர் பரப்பளவு உள்ள வாழ்விடப்பகுதியில் 61 அகழாய்வுக் குழிகளும், 40 ஹெக்டேர் பரப்பளவுள்ள ஈமக்காட்டில் 17 ஈமச்சின்னங்களும் அகழப்பட்டன. இவ்வகழாய்வில் வெளிப் போந்த பண்பாட்டு எச்சங்கள் இவ்வூர் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றி எடுத்துரைக்கின்றன.

இதுவரை மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் மூலம் இங்கு விலையுயர்ந்த கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட கல்மணிகள் செய்யும் தொழிற்கூடமும், செம்பு, இரும்பு மற்றும் எஃகு உருக்கப்பட்டதற்கான தொழிற் கூடங்களும் கண்டறியப்பட்டுள்ளன. இதைத் தவிர நெசவுத் தொழில் செழிப்புற்றிருந்ததை நூல் நூற்கப் பயன்படுத்தப்பட்ட தக்களி மூலமும், சங்கு அறுப்புத் தொழில் சிறப்புற்று இருந்தமையை இங்குக் கிடைத்த சங்கு வளையல்கள், கழுத்தணிகள் மூலமும் அறிய முடிகின்றது. யானை தந்தத்தால் ஆன அணிகலங்களும் இங்குக் கிடைத்துள்ளன. இத் தொழிற் கூடங்கள் குறிப்பாகப் பச்சைக்கல், நீலக்கல், பளிங்கு, கார்னீலியன், அகேட், அமெதிஸ்ட்

போன்ற அரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட தொழிற் கூடம் அதன் பல்வேறு படிநிலைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளமை இவ்வகழாய்வின் சிறப்பம்சமாகும்.

இத்தொழிற்கூடங்கள் சுமார் 500 ஆண்டுகள் இங்கு நின்று நிலைத்துள்ளது. கொடுமணலில் உருவாக்கப்பட்ட அணிகலங்களைப் பெறுவதற்காக இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் இருந்து வணிகர்கள் வந்துள்ளனர். உத்திரபிரதேச மாநிலத்தின் மத்தியக் கங்கைச் சமவெளிப் பகுதியில் இருந்து வணிகர்களும், கைவினைஞர்களும் இங்கு வந்துள்ளதைத் தமிழ் மயப்படுத்தப்பட்ட பிராகிருத மொழி கலந்த ஆட் பெயர்களும், வணிகர் பெயர்களும் ஊறுதிப்படுத்துகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாகக் கங்கைச் சமவெளிப் பகுதி பண்பாட்டிற்கே உரித்தான வடக்கத்திய கறுப்பு நிற மட்பாண்டங்கள் இங்குக் கிடைத்துள்ளதை முக்கியமாக இங்குக் குறிப்பிட வேண்டும். இத்தகைய மட்பாண்டங்கள் கங்கை சமவெளிப்பகுதியில் கி.மு 6ஆம் நூற்றாண்டுக்கும் பொ.ஆ.மு 2ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட பகுதியில் கிடைக்கின்றன. கொடுமணலில் கிடைத்த இம் மட்பாண்டம் பொ.ஆ.மு. 3 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்ததாகும்.

கொடுமணலில் மேற்கொள்ளப்பட்ட ஆறு ஆண்டுகால அகழாய்வில் 500க்கும் மேற்பட்ட தமிழ்-பிராமி எழுத்து பொறிப்பு பெற்ற பானை ஓடுகள் கிடைத்துள்ளன[11]. இவை முன்னர் வரிவடிவத்தின் அடிப்படையிலும், மண்ணடுக்கின் அடிப்படையிலும், குகைத்தளங்களில் கிடைத்த கல்வெட்டுகளின் அடிப்படையிலும் முதலில் இவை காலக்கணிப்பு செய்யப்பட்டன. ஆனால், பொருந்தல் அகழாய்வில் கிடைத்த காலக்கணிப்புகள் கொடுமணலில் கிடைத்த தமிழ்-பிராமி எழுத்துப் பொறிப்பு பெற்ற பானை ஓடுகளுக்கும் காலக்கணிப்பு செய்யவேண்டிய சூழலை ஏற்படுத்தியது. ஏற்கனவே குறிப்பிட்டதுபோல வாழ்விடப்பகுதியில் பல்வேறு மண்ணடுக்குகளிலிருந்து கிடைத்த மட்பாண்டங்களுக்குக் காலக்கணிப்பு செய்யப்படும்பொழுது தமிழ்-பிராமியின் காலம் மேலும் உறுதிப்படும் என்பதால் 2012 மற்றும் 2013 ஆம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் இதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுக் காலக்கணிப்புக்கான மாதிரிகள் சேகரிக்கப்பட்டன. இம்மாதிரிகள் 15 செ.மீ, 60 செ.மீ, 65 செ.மீ, 80 செ.மீ, 120 செ.மீ ஆழத்தில் சேகரிக்கப்பட்டு அமெரிக்காவில் உள்ள பீட்டா அனலிடிக் ஆய்வுக்கூடத்திற்கும்,

11 Rajan, K., 2015 *Early Writing System – A Journey from Graffiti to Brāhmī*, Pandya Nadu Centre for Historical Research, Madurai.

அரிசோனா பல்கலைக்கழக ஆய்வுக்கூடத்திற்கும் அனுப்பப்பட்டன. அவைமுறையே பொ.ஆ..மு. 200, பொ.ஆ.மு. 275, பொ.ஆ..மு. 300, பொ.ஆ.மு. 330, பொ.ஆ.மு. 408 என்ற காலக்கணிப்பை வழங்கின[12]. பொருந்தல் அகழாய்வில் கிடைத்த தமிழ்-பிராமி எழுத்துகளின் காலத்திற்கு ஏற்பக் கொடுமணலில் கிடைத்த தமிழ்-பிராமி எழுத்துகளின் காலமும் பொ.ஆ..மு. 5 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னோக்கித் தள்ளப்பட்டது. இக்காலக்கணிப்பு இங்குக் கிடைத்த ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்-பிராமி எழுத்துப் பொறிப்புகளாலும் உறுதிப்படுத்தப்பட்டன. அந்த வகையில் கொடுமணலில் கிடைத்த தமிழ்-பிராமியின் காலத்தைக் பொ.ஆ.மு. 5 ம் நூற்றாண்டு எனலாம். அதிந்தை, மாகந்தை, குவிரன், சுமனன் சம்பன், சம்பன் ஸுமநன் (படம் 15), ஸந்தை வேளி, பன்னன், பாகன், ஆதன் போன்ற எண்ணற்ற ஆட்பெயர்கள் பொறித்த மட்பாண்டங்கள் தமிழர்கள் 2500 ஆண்டுகளுக்கு முன்பாகவே எழுத்தறிவு பெற்று மிகச் சிறந்த சமூகமாக விளங்கியிருக்க வேண்டும் என்பதை இச்சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. கொடுமணல் என்ற இச்சிற்றூர் சங்ககாலத்தில் மிகச் சிறந்த தொழிற் கூடங்களைக் கொண்ட தொழில் நகரமாகவும், உள்நாட்டு, வெளிநாட்டு வணிக உறவுகளைக் கொண்ட வணிக நகரமாகவும், பொருளாதார நிலையில் மேம்பட்ட சமூகமாகவும் விளங்கியிருக்க வேண்டும் என்பதை இவ்வகழாய்வின் மூலம் வெளிக்கொணரப்பட்ட சான்றுகள் உணர்த்துகின்றன.

எனவே, தமிழ் நாட்டில் கிடைத்த நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்-பிராமி கல்வெட்டுகளும், புலிமான்கோம்பை, தாதப்பட்டியில் கிடைத்த நடுகற்களும், கொடுமணல் உட்படப் பிற அகழாய்வில் கிடைத்த ஆயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ்-பிராமி பொறிப்பு கொண்ட மட்பாண்டங்களும், அறிவியல் முறைப்படி காலக்கணிப்பு செய்யப்பட்டு அவை அளித்த முடிவுகளும் தமிழகம் 2500 ஆண்டுகளுக்கு முன்பே எழுத்தறிவு பெற்ற சமூகமாக விளங்கியிருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்துகின்றன.

---

12 K.Rajan and V.P.Yatheeskumar 2012 "New evidences on scientific dates for Brahmi Script as revealed from Porunthal and Kodumanal Excavations", *Pragdhara, Journal of the U.P.State Archaeology Department,* Lucknow, vol. 21-22, pp.279-295.

## *Bibliography*

Allchin, F.R., 1995 The Archaeology of Early Historic South Asia - The Emergence of Cities and States, Cambridge University Press, Cambridge.

Deraniyagala, S.U., 1986 "Excavations in the Citadel of Anuradhapura:Gedige 1984, a preliminary report", Ancient Ceylon, vol.6, pp.39-47.

Deraniyagala, S.U., 1990 "Radio Carbon dating of Early Brāhmī Script in Sri Lanka", Ancient Ceylon, vol.11, pp.149-168.

Kasinathan, Natana, 1995 "Date of Sangam Literature", paper presented in the VIIIth International Conference - Seminar on Tamiḻ Studies, January 1-4.

Krishna Sastri, H., 1919 "The Caverns and Brāhmī Inscriptions of Southern India", Proceedings and Transactions of the First All-India Oriental Conference, Poona, pp.327-348.

Krishnamurthy, R., 1997 Sangam Age Tamiḻ Coins, Garnet Publications, Madras.

Krishnan, K.G., 1981 "Origin and Development of Tamiḻ Script", Studies in South Indian History and Epigraphy, vol.1, New Era Publications, Madras, pp. 87-98.

Mahadevan, Iravatham, 1968 "Corpus of Damiḻi (Tamiḻ-Brāhmī) Inscriptions", R.Nagasamy (ed.), Seminar on Inscriptions 1966: Speeches and Papers, Madras, pp.57-73.

Mahadevan, Iravatham, 2003 Early Tamiḻ Epigraphy : From the Earliest Times to the Sixth Century AD, Cre -A Chennai and The Department of Sanskrit and Indian Studies, Harvard University, Harvard, USA.

Paranavithana, S. 1970. Inscription of Ceylon: Early Brāhmī Inscriptions, vol.1, Department of Archaeology, Colombo.

Rajan, K., 1991 "New Light on Graffiti Marks", Journal of Marine Archaeology, vol. 2, pp.47-54.

Rajan, K., 1994 Archaeology of Tamil Nadu (Kongu Country), Book India Publishing Company, Delhi.

Rajan, K., 1996 "Kodumanal Excavations - A Report", K.V.Ramesh (ed.), GauravamB.K.Gururajarao Felicitation Volume, Harman Publishing Company, New Delhi, pp.72-86.

Rajan, K., 1997 Archaeological Gazetteer of Tamil Nadu, Manoo-Pathippakam, Thanjavur.

Rajan, K., and OsmundBopearachchi, 2002 "Graffiti Marks of Kodumanal (India and Ridiyagama (Sri Lanka)", Man and Environment, vol. 27, no.2, pp.97-106

Rajan, K., 2009 Damiḻi Graffiti and Cave Records, Early Historic Tamil Nadu c.300 BCE-300 CE (Essays commemorating Prof.K.Kailasapathy on the twenty-fifth anniversary of his death (ed.) K.Indrapala, Kumaran Publishing House, Chennai, pp.57-94.

Raman, K.V., 1976 "Brāhmī inscriptions of Tamil Nadu: an historical assessment", The Sri Lanka Journal of South Asian Studies, vol. 1, no.1, pp.64-75.

Ramesh., K.V., 2006 Indian Inscriptions – A Study in Comparison and Contrast, Indian Council of Historical Research, Bangalore.

SeetharamGurumoorthy, 2007 DindigalMavattaTholliyalKaiyedu, Tamil Nadu State Department of Archaelogy, Chennai.

Sewell, R., 1904 "Roman coins found in India", Journal of Royal Asiatic Society vol.2, p.623.

Shetty, Ashok Vardhan, K., 2003 Excavations at Perur, Department of Archaeology, Government of Tamil Nadu, Chennai.

Soundrarajan, K.V., 1994 Kaveripattinam Excavations 1963-1973 (A Port City on the TamiḻNadu Coast), Archaeological Survey of India, New Delhi.

Sridharan, K., 1984 "Excavations at Karur", paper read in the Seminar on Archaeology of Tamil Nadu and Kerala - Accomplishments and Prospects, Tamiḻ University, Thanjavur.

Subbarayalu, Y., 1985 "Vallam Excavations", Tamiḻ Civilization, vol.2, no.4, pp.30-42.

Subbarayalu, Y., 2008 "Pottery Inscriptions of Tamil Nadu", A Report submitted to the Central Institute of Indian Languages, Centre of Excellance of Classical Tamiḻ, Chennai.

Vaidhyanathan, K.S., 1983 The Ancient Geography of the Kongu Country, KalaimagalKalviNilayam, Erode.

Yathess Kumar, V.P., 2011 Archaeology of Amaravathi river valley, Tamil Nadu, Ph.D thesis submitted to Pondicherry University, Pondicherry.



தமிழ்-பிராமி எழுத்துப்பொறிப்புகள்
கிடைத்த இடங்கள்



புலிமான்கோம்பை முதல் நடுகல்

..அன் ஊர் அ தன்

an ūr ata<u>n</u>

..ன் அன் கல்

<u>n</u> a<u>n</u> kal

புலிமான்கோம்பை
முதல் நடுகல்லின் வாசிப்பு



புலிமான்கோம்பை இரண்டாம் நடுகல்

கல்
kal

பேடுதீயன் அந்தவன்
pēṭutīyaṉ antavaṉ

கூடல் ஊர் ஆகோள்
kūṭal ūr ā kōḷ

புலிமான்கோம்பை இரண்டாம் நடுகல்லின் வாசிப்பு



புலிமான்கோம்பை மூன்றாம் நடுகல்

வேள் ஊர் அவ் வ ன்
vēḷ ūr a v va ṉ

ப த வ ன்
pa ta va ṉ

புலிமான்கோம்பை மூன்றாம் நடுகல்லின் வாசிப்பு



தாதப்பட்டி நெடுநிலை நடுகல்

.. .. ṉ a ṭi ō ṉ pā ka l pā ḷi y ka l
.. .. ன் அடிஓன் பாகல் பாளிய் கல்

தாதப்பட்டி நெடுநிலை நடுகல்லின் வாசிப்பு



பொருந்தல் :
கல்லறையுடன் கூடிய கல்வட்டம்



பொருந்தல் :
"வயிர" என்று எழுதப்பட்ட பிரிமணை




"வயிர" என்று எழுதப்பட்ட பிரிமணை



பெருங்கற்படை சின்னத்தில்
காணப்படும் ஈமப்பொருட்கள்



பொருந்தல் :
சாடியும் அதனுள் இருந்த நெல்மணிகளும்



கொடுமணல் : சம்பன் ஸுமநன்
என்ற பெயர் பொறித்த
மட்பாண்டம்

# 77. நடுகற்களின் தோற்றமும் வளர்ச்சியும்

**தி.சுப்பிரமணியன்,** தருமபுரி

**தெ**ன்னிந்திய நடுகற்களைப் பற்றிப் பல ஆய்வுகளும் நூல்களும், தனிக்கட்டுரைகளும் 40 ஆண்டுகளாக வெளிவந்துள்ளன. இது குறித்து பல கருத்தரங்கங்களும் நடந்துள்ளன. சங்ககாலத்தைச் சார்ந்த அகநானூறு, புறநானூறு, தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பா மாலை போன்ற இலக்கியங்கள் நடுகற்கள் எடுப்பதைப் பற்றியும், நடுகல் வழிபாடு பற்றியும் விரிவாக பேசுகின்றன. தொல்லியல் அறிஞர்களும் தொல்லியல் ஆர்வளர்களும் தமிழகத்தில் பல நடுகற்களை கண்டுபிடித்து வருகின்றனர். நடுகற்கள் குறித்த ஆய்வுகளை ஆய்வாளர்களான இரா. பூங்குன்றன், க. இராசன், கிருஷ்ணமூர்த்தி, கேசவராஜ் போன்றோர் நூல்களாகவும் ஆய்வுகளாகவும் பதிப்பித்துள்ளனர்.

தமிழகத்தில் சுமார் 3000க்கும் மேற்பட்ட நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றை கல்வெட்டு உள்ள நடுகற்கள் என்றும் கல்வெட்டு இல்லாத நடுகற்கள் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கல்வெட்டு உள்ள நடுகற்களைவிட கல்வெட்டு இல்லாத நடுகற்கள் அதிகம் என்பது குறிப்பிடத்தக்கது. தமிழகத்தில் இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்ட நடுகற்களில் 75 விழுக்காடு நடுகற்கள் தகடூர்ப் பகுதியில் கிடைத்துள்ளன. சில இடங்களில் 50க்கும் மேற்பட்ட நடுகற்கள் ஒரே இடத்தில் காணப்படுகின்றன. பல இடங்களில் 10க்கும் மேற்பட்ட நடுகற்கள் வழிபாட்டிலுள்ளன. இந்த நடுகற்களில் கல்வெட்டுக்களும், புடைப்பு உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. புடைப்பு உருவங்களில் பல வேறுபாடுகள் உள்ளன. எனவே தகடூர்ப்பகுதியில் கிடைக்கின்ற நடுகற்களை அடிப்படையாகக் கொண்டு நடுகற்களில் உள்ள புடைப்பு உருவங்கள் அல்லது சிற்பங்களின் தோற்றம் மற்றும் வளர்ச்சியைப் பற்றி இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

சங்க இலக்கி யங்கள் கூறுகின்ற ஈமச்சின்னங்கள், நடுகற்கள், நடுகற்களை உருவாக்கும் முறைகள் போன்றனவும், நடுகற்களைப் பற்றி பேசுகின்ற பிற்கால இலக்கியங்களும் ஆய்வில் இணைக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் கிடைக்கின்ற

**கோவிலூர் ஆதினத் தலைவர் தவத்திரு நாச்சியப்பன் ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 17 ஆவது சொற்பொழிவு நாள்:2-07-2017**

நடுகற்களும், கர்நாடகம் மற்றும் ஆந்திரம் போன்ற மாநிலங்களில் கிடைக்கின்ற நடுகற்களும் இந்த ஆய்வில் இணைக்கப்பட்டுள்ளன. தொல்லியல் மற்றுமின்றி சமூகவியல், மானிடவியல் ஆகிய ஆய்வுகளின் முடிவுகள் ஒப்பாய்விற்கும், நடுகல்லின்வளர்ச்சியைக் காட்டுவதற்கும் உதாரணங்களாகக் எடுத்தாளப்பட்டுள்ளன. நடுகல் வழிபாடு என்பது குழு முன்னோர் வணக்கத்தில் தொடங்கி, மூதாதையர் வழிபாடாக வளர்ந்து பின்னர் நடுகல் வழிபாடாக பரிணாம வளர்ச்சி அடைந்தது. எனவே நடுகல்லின் தோற்றம் பற்றித் தெரிந்து கொள்ள தொல்லியலையும், இலக்கியங்களையும் அடிப்படையாகக் கொண்டும், மானிடவியல் மற்றும் சமூகவியல் ஆய்வுகளை துணையாகவும் கொண்டும் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**மூதாதையர் வழிபாடு**

பண்டைய நாளில் இறந்து போனவர்களது ஆவி பற்றியும், அதனுடைய சக்தியைப் பற்றியும் உலகம் முழுவதிலும் உள்ள இனக்குழு மக்களிடையே சில நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இதைப் பற்றிப் பிரேசர், மார்கன், சட்டோபாத்தியாய, சிங்காரவேலன் போன்ற பல மானிடவியல் ஆய்வாளர்கள் ஆய்வுகளை வெளியிட்டுள்ளனர். இறந்து போனவர்களுடைய ஆவி அழிவதில்லை என்றும் அந்த ஆவிக்கு ஆற்றல் அதிகம் உண்டு என்றும் தொல்பழங்கால இனக்குழு மக்கள் நம்பினர். அது ஆக்கச் சக்தியாகவும், அழிவுச் சக்தியாகவும் வெளிப்படலாம். அந்த ஆவி அவர்களுடைய உறவினர்களுடன் தொடர்பு கொள்ளும். அவற்றைச் சடங்குகள், வழிபாடுகள், சாந்திகள் போன்றவற்றால் மகிழ்வித்தால், அந்த ஆவி அக்குழுவிற்கு ஆற்றலளிக்கும், போரில் உதவும், ஆடுமாடுகளைப் பாதுகாக்கும், வயல்களில் விளைச்சலை அதிகப்படுத்த உதவும் என்று நம்பினர். இதற்காக முன்னோர்களுக்கு சடங்குகள் செய்து வழிபட வேண்டும் என்ற நம்பிக்கை உருவாக்கப்பட்டது. இறந்தவரின் உடலை அடக்கம் செய்கின்ற இடத்தில் அந்த ஆவி வந்து தங்கும் என்றும் நம்பினர். பிரமிடுகள், கல்லறைகள் போன்றன இதை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டன. தமிழகத்தில் இத்தகைய கல்லறைகள் படிப்படியாக வளர்ந்து நடுகல்லாக பரிணாம வளர்ச்சியடைந்தது.

**குத்துக்கல்**

தமிழகத்தில் முதன்முதலில் பெருங்கற்காலத்தில் இறந்தவர்களை அடக்கம் செய்ததற்கானச் சான்றுகள் கிடைக்கின்றன. பூமியில்

குழியைத் தோண்டி கருங்கற் பலகைகளைக் கொண்டு வந்து கல்லறை அமைத்து அதன் மேல் கற்குவியலை உருவாக்கினர். அக்கற்குவியல்கள் சுமார் ஒரு மீட்டர் முதல் இரண்டு மீட்டர் உயரமுடையனவாக இருந்தன. மூதாதையர் வழிபடுகின்ற வழக்கம் இருந்ததால் இயற்கை சீற்றங்களில் இருந்து பாதுகாத்துக் கொள்ளவும், இறந்த இடத்தை அடையாலப்படுத்தவும் இத்தகைய கற்குவியல்களை உருவாக்கியுள்ளனர். இவை தொடக்கக் காலத்தில் அமைக்கப்பட்டக் கல்லறைகள். இதை நடுகல்லின் முதல் படியாகக் கொள்ளலாம்.

காலப்போக்கில் இக்கல்லறைகளின் மேல் இயற்கையாகக் கிடைத்த, செதுக்கப்படாத கல்லை நட்டனர். இதனுடைய அடுத்த வளர்ச்சியாக உயமான கற்களைச் செதுக்கியும், பலகையைப் போன்று அகலமான கற்பலகையையும் வடிவமைத்தும் நட்டனர். இதைத் தொல்லியல் ஆய்வாளர்கள் “குத்துக்கல்“ *(menhir)* என்று பெயரிட்டனர். திருமல்வாடி, தேவனுர், கொடுமணல் போன்று பல இடங்களில் இத்தகையக் குத்துக்கற்களைக் காணமுடிகின்றது.

**பாறை ஓவியங்கள்**

தமிழகத்தில் கிடைக்கின்ற பாறை ஓவியங்கள் புதிய கற்காலத்திலும் அதைத் தொடர்ந்து பெருங்கற்காலத்திலும் வரையப்பட்டுள்ளன. இத்தகைய ஓவியங்களில் கால்நடைகளும், மிருகங்களும், வீரர்கள் சண்டை செய்யும் காட்சிகளும் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. வீரர்கள் சண்டை செய்யும் காட்சிகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. சண்டை செய்யும் வீரர்களின் அருகில் கால்நடைகள் காட்டப்பட்டுள்ளதால், கால்நடைகளுக்காக சண்டை செய்கின்றனர் என்று எண்ணத் தோன்றுகின்றது.

இவை காலத்தால் முற்பட்ட உருவங்கள். ஓவியங்களின் அமைப்பு, உருவங்களின் அமைப்பு, வீரர்களின் கைகளில் உள்ள ஆயுதங்கள் ஆகியன பிற்காலத்தில் வடிக்ககப்பட்ட நடுகற்களில் உள்ள வீரர்களின் கைகளில் உள்ள ஆயுதங்கள் ஆகியன ஒரே அமைப்புடையனவாக உள்ளன. எனவே ஓவியங்களில் உள்ள ஆயுதங்களை அடிப்படையாகக் கொண்டு நடுகற்களில் உள்ள மனித உருவங்களும், ஆயுதங்களும் செதுக்கப்பட்டிருக்கலாம். எனவே கல்லில் செதுக்கப்பட்ட புடைப்பு உருவங்கள் பறை ஓவியங்களை அடிப்படையாகக் கொண்டு வந்தவை என்று கூறலாம்.

கல்திட்டை எனப்படும் ஈமச்சின்னம் பொதுவாக பரந்த பாறையின் மேல் அல்லது பூமியின் மேல்பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது. நான்கு பெரியபலகைக் கற்களை நான்கு பக்கங்களில் நிறுத்தி அதன் மேல் ஒருபலகைக்கல்லை மூடுகல்லாக *(Cap stone)* வைத்து கல்லறை உருவாக்கப்பட்டுள்ளது. பலகைக்கற்கள் உட்பகுதியில் சாய்ந்து விடாமல் இருக்க ஒன்றுடன் ஒன்று இணைத்துவைக்கப்பட்டுள்ளன. தாங்கு சுவராகள் உள்ளதால் கல்லறை தனித்து நிற்கின்றது. கல்லறையைச் சுற்றிலும் கல்வட்டங்கள் ஒன்று அல்லது இரண்டு வட்டங்கள் கட்டப்பட்டுள்ளன. கல்திட்டையின் அமைப்பில் ஸ்வஸ்திகா அமைப்புடையகல் திட்டை, இரட்டைக் கல்லறைகளைக் கொண்ட கல்திட்டை, இரட்டை இடுதுளைகளைக் கொண்ட கல்திட்டை போன்று பலவகைகள் காணப்படுகின்றன. இவற்றின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு இப்பெயர்கள் வந்துள்ளன. இத்தகைய கல்லறைகளின் உட்பகுதியில் வெள்ளை வண்ணத்தில் ஓவியங்கள் சில தீட்டப்பட்டுள்ளன. தரைக்கு மேல் உயரமாக அமைக்கப்பட்டுள்ளதாலும் அதன் உட்பகுதியில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளதாலும் இதை அதனுடைய வளர்ச்சியாகக் கூறலாம்.

**கோட்டுருவங்கள்**

பெருங்கற்கால ஈமச்சின்னங்களில் இருந்து வளர்ச்சியடைந்த குத்துக் கற்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருக்கலாம் என்பதை கல்திட்டைகளில் வரையப்பட்டுள்ள ஓவியங்கள் உறுதிபடுத்துகின்றன. மல்லச்சந்திரம், சென்ன சந்திரம், மகாராஜகடை போன்ற இடங்களில் உள்ள கல்திட்டைகளில் ஓவியங்கள் காணப்படுகின்றன. இந்த ஓவியங்கள் பெருங்கற்காலத்தைச் சார்ந்தவை. கல்திட்டைகளின் உட்பகுதியில் இந்த ஓவியங்கள் அழியாமல் உள்ளன. குத்துக்கற்களில் வரையப்பட்ட ஓவியங்கள் மழை போன்ற இயற்கைச் சீற்றங்களால் அழிந்திருக்கலாம்.

தகடூர்ப் பகுதியில் கிடைக்கின்ற நடுகற்களில் உள்ள உருவங்களில் கோட்டுருவங்கள், புடைப்பு உருவங்கள் என்று இரண்டு வகையான உருவங்கள் காணப்படுகின்றன. காலத்தால் முற்பட்ட நடுகற்களில் உள்ள உருவங்களில் அதிக புடைப்புத் தன்மை உடையனவாக இல்லை. பிற்காலத்தைச் சார்ந்த நடுகற்களில் புடைப்பு உருவங்கள் வளர்ச்சி அடைந்துள்ளதைக் காணமுடிகின்றது. பாலவாடி, பனையகுளம் போன்ற இடங்களில் கிடைக்கின்ற கோட்டுருவ நடுகற்களின் காலம் பொ.ஆ. 6ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருந்தாலும் பழைய கோட்டுருவத்தை

நினைவுபடுத்துவனவாக உள்ளன. நடுகற்களில் கோட்டுவங்கள் வரைகின்ற வழக்கமும் இருந்தன என்பதை இவை எடுத்தியம்புகின்றன.

எனவே தொடக்க காலத்தில் நடுகற்களில் ஓவியங்கள் வரையப்பட்டன என்றும் ஓவியங்களில் இருந்து கோட்டுருவங்கள் வளர்ந்தன என்றும் பின்னர் புடைப்பு உருவங்களாக வளர்ந்தன என்றும் கூறலாம்.

**தாழிகளில் புடைப்பு உருவங்கள்**

பெருங்கற்கால ஈமச்சின்னங்களில் மற்றொரு வகை தாழிகள். தாழிகளிலும் இதைப் போன்ற புடைப்பு உருவங்கள் உள்ள தாழிகள் பல இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தாழகளில் கழுத்துப் பகுதியில் கயிறு, பெருவிரல் போன்ற அமைப்புடைய கோடுகள் காட்டப்படுவது வழக்கம். ஆனால் தாழிகளின் கழுத்துப் பகுதியில் புடைப்பு உருவங்கள் கிடைத்திருக்கின்றன. நீண்டு வளைந்த கோடுகள், பெண்களின் மார்பகங்கள் போன்ற புடைப்பு உருவங்கள், ஆங்கில எழுத்து 'U' வடிவம் உடைய புடைப்புக் உருவங்கள், தாய்த் தெயவங்களின் உருவங்கள் போன்றன தாழிகளின் மேல் பகுதியில் புடைப்பு உருவங்களாகக் காட்டப்பட்டுள்ளன. சில தாழிகளில் ஒன்று அல்லது இரண்டு உருவங்கள் சிலவற்றில் பல உருவங்கள் காணப்படுகின்றன.

எனவே தொடக்க காலத்தில் தாழிகளில் மேல் பகுதியில் ஒன்று அல்லது இரண்டு உருவங்கள் மட்டும் காட்டப்பட்டன. அதன் பின்னர் ஒன்றுக்கு மேற்பட்ட உருவங்கள் செய்யும் தொழில்நுட்பம் வளர்ந்துள்ளன என்றும் கூறலாம். இவையே பின்னர் சுடுமண் போம்மைகள் உருவாததற்கு அடித்தளமாக அமைந்துள்ளன. இதற்கு உதராணமாக கரூர், போளுவாம்பட்டி, ஆதிச்ச நல்லூர், மேலப் பெரும்பள்ளம் போன்ற இடங்களில் கிடைத்தத் தாழிகளில் உள்ள உருவங்களைக் கூறலாம். மட்கலங்களில் உருவாக்கப்பட்டப் புடைப்பு உருவங்களைப் போன்று கற்பலகைகளிலும் புடைப்பு உருவங்கள் உருவாக்கப்பட்டன என்று கூறலாம். இதையும் நடுகல்லின் வளர்ச்சி நிலைகளில் ஒன்றாகக் கருதலாம்.

**புடைப்பு உருவங்கள்**

தமிழகத்தில் கிடைக்கின்ற நடுகற்களில் பழமையானவை புளிமான்கோம்பை நடுகற்களாகும். இந்த நடுகற்களில் உருவங்கள் இல்லை. கல்வெட்டுகள் மட்டும் வெட்டப்பட்டுள்ளன. வீர்களின் உருவங்கள் இல்லாததால் இதை சிற்பக்கலையில் சேர்க்க

இயலவில்லை. புடைப்பு உருவங்கள் உள்ள நடுகற்கள் என்றால் மிகப்பழமையானவை பாப்பம்பாடி அல்லது இருளப்பாடி நடுகற்கள் தான். பாப்பம்பாடி நடுகற்கள் பொ.ஆ. 4- 5ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இந்த நடுகற்களில் உள்ள புடைப்பு உருவங்களின் புடைப்புத் தன்மை மிக மெல்லியதாகக் காணப்படுகின்றன. உருவங்களின் வெளிப்புறத் தோற்றம் மட்டும் புலப்படுகின்றன. வீரர்களின் கைகளில் கேடயங்களும், சிறியக் கத்திகளும் காட்டப்பட்டுள்ளன. மூன்று வீரர்களின் கைகளில் உள்ள கேடயங்கள் வட்டம், நீண்டவட்டம், பிறை வடிவம் போன்ற வடிவங்களில் காணப்படுகின்றன. உருவங்கள் நேர்திசையில் இன்றி பக்கவாட்டில் நிற்பது போன்று செதுக்கப்பட்டுள்ளன. வீரர்களுக்கும், கல்வெட்டுகளுக்கும் முக்கியத்துவம் வழங்கப்பட்டன.

**மங்கலச் சின்னங்கள்**

தகடூர்ப் பகுதியில் கிடைக்கின்ற நடுகற்களில் பொ.ஆ. 6 ஆம் நூற்றாண்டு வரை உள்ள நடுகற்களில் வீரனின் உருவங்கள் மட்டும் செதுக்கப்பட்டுள்ளன. வேறு உருவங்கள் இல்லை. ஆனால் திருவண்ணாமலை பகுதியில் கிடைக்கினறன நடுகற்களில் பொ.ஆ 6ஆம் நூற்றாண்டிலிருந்து சில மாற்றங்கள் காணப்படுகின்றன. மங்கலச் சின்னங்களான கெண்டி, குங்குமச் சிமிழ் போன்றன நடுகற்களில் காட்டப்பட்டுள்ளன. இதைத் தொடர்ந்து பூர்ணகும்பம், கண்ணாடி, அம்பராதூணி போன்றன மங்கலச் சின்னங்களாகக் காட்டப்பட்டுள்ளன. அலங்கார தோரணங்கள் சில நடுகற்களில் செதுக்கப்பட்டுள்ன. சில நடுகற்களில் ஒரு அலங்காரத் தோரணமும் சில நடுகற்களில் இரண்டு தோரணங்களும் காணப்படுகின்றன. இதனால் முதலில் ஒரு தோரணம் செதுக்கப்பட்டு பின்னர் இரண்டு தோரணங்கள் செதுக்கும் முறை சிற்பக் கலையின் வளர்ச்சியாகக் கூறலாம்.

மொண்டுகுழியில் உள்ள நடுகல்லில் தோரண அமைப்பு வேறுபட்டுக் காணப்படுகின்றது. மேல்பகுதியிலும் கீழ் பகுதியிலும் அரைவட்ட வடிவ அமைப்பில் பூவேலைபாடுகள் காட்டப்பட்டுள்ளன. அரைவட்ட வடிவங்களுக்கிடையில் பூச்செண்டு தொங்குவது போன்ற அலங்கார அமைப்புகளும் உள்ளன. இந்த அமைப்பு தற்போதைய அலங்காரத் தோரணங்களை நினைவுபடுத்துவனவாக உள்ளன. பொ.ஆ. 6 லிருந்து 8 ஆம் நூற்றாண்டு வரையில் உள்ள நடுகற்களில் மங்கலச் சின்னங்கள், தோரணங்கள் ஆகியன நடுகற்களின் வளர்ச்சி நிலயைக் காட்டுகின்றன.

### இரண்டு அடுக்கு நடுகற்கள்

நடுகற்களின் வளர்ச்சி நிலையில் இரண்டு அடுக்கு நடுகற்கள் என்பது மற்றொரு வளர்ச்சி நிலையாகும். நடுகல்லை இண்டுப் பிரிவாகப் பிரித்து கீழ்ப் பகுதியில் சில உருவங்களும் மேல் பகுதியில் சில உருவாங்களும் செதுக்கப்பட்டுள்ளன. இந்த வகை நடுகற்களில் வீரன் போர் செய்யும் காட்சி ஒரு அடுக்கிலும் அதாவது கீழ்ப்பகுதியிலும், வீரனின் தலைக்கு மேல் பகுதியில் ஒரு அடுக்கும் காட்டப்பட்டுள்ளன. இந்த இரண்டாவது அடுக்கில் தேவ மாதர்கள் அல்லது தேவ கன்னிகள் இருவர் இறந்த வீரனை தேவலோகத்திற்கு அழைத்து செல்லும் காட்சி இடம் பெற்றுள்ளது. இரண்டு தேவக்கன்னியர்களுக்கிடையில் வீரன் பறந்து செல்வது போன்ற அமைப்பில் இந்த புடைப்பு உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தருமபுரிக்கு அருகிலுள்ள செக்கோடி என்ற இடத்தில் கங்க மன்னன் சிவமாறனின் 15 நடுகற்கள் ஒரே இடத்தில் காணப்படுகின்றன. இது பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இங்குள்ள எல்லா நடுகற்களிலும் தேவலோகக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. தமிழகத்தில் முதன்முதலில் இங்கு தான் தேவலோகக் காட்சி காணப்படுகின்றது. எனவே இறந்த வீரன் தேவர் உலகை அடைகின்றான் என்ற செய்தி சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. கர்நாடகாவில் ஏற்பட்ட பக்தி இயக்கங்களின் விளவாக தேவலோகக் காட்சிகள் இங்கு இடம் பெற்றிருக்கலாம் என்று கூறலாம்.

இதைத் தொடர்ந்து சோழர்களின் நடுகற்களிலும் தேவலோகக் காட்சிகள் காணப்படுகின்றன. முதலாம் இராசராச சோழனின் பரிகம் நடுகல்லிலும் இரண்டு அடுக்குமுறை பின்பற்றப்பட்டுள்ளது. அவனுடைய மகன் இராசேந்திர சோழனின் கங்காவரம் நடுகற்களில் வீரனின் உருவம் பெரிதாகக் காட்டப்பட்டுள்ளது. வீரனின் கால் பகுதியில் கால்நடைகளின் கூட்டமும் குதிரையும் உள்ளன. வீரனுக்கு எதிர் திசையில் பொரிடும் வீரர்களும், வீரனுக்கு மேல் பகுதியில் தேவலோகக் காட்சியும் காட்டப்பட்டுள்ளன. கால்நடைகளுக்கா போரிட்டு உயிர் நீத்த செய்தி புடைப்பு உருவங்களிலும் காட்ட முறப்பட்டுள்ளனர். எனவே பொ.ஆ. 9 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் நடுகல் எடுக்கப்பட்டதின் நோக்கத்தை புடைப்பு உருவங்களின் வாயிலாகவும், கல்வெட்டுக்களின் வழியாகவும் வெளிபடுத்தியுள்ளனர். பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டு வரையில் இத்தகைய முறையே காணப்படுகின்றன.

## மூன்று அடுக்கு நடுகற்கள்

பொ.ஆ. 13,14 ஆம் நூற்றாண்டுகளில் இரண்டு அடுக்கு முறை மூன்று அடுக்கு முறையாக வளர்ந்துள்ளது. வீரன் சண்டை செய்யும் காட்சிக் கீழ் அடுக்கிலும், இறந்த வீரர்களை அழைத்துச் செல்லுகின்ற தேவ மாதர்கள் இரண்டாவது அடுக்கிலும் காட்டப்பட்டுள்ளனர். மூன்றாவது அடுக்கில் தேவலோகக் காட்சி மட்டும் செதுக்கப்பட்டுள்ளது. இதில் வீரன் எதிரிகளுடன் சண்டை செய்யும் காட்சியுடன் அவன் எதற்காக போர் புரிகின்றான் என்ற விரமும் இடம் பெற்றுள்ளது. கால்நடைகளுக்காக உயிர் நீத்த நடுகற்களில் வீரனின் அருகில் கால்நடைகளும், மிருகங்களுடன் சண்டை செய்யும் நடுகற்களில் மிருகங்களின் உருவங்களும் காட்டப்பட்டுள்ளன. மாற்று அரசர்களுடன் போர் செய்யும் பொது வீரர்கள் வரிசையாகக் நிற்கின்ற காட்சியும் செதுக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது அடுக்கில் தேவலோகக் கன்னிகள் இரண்டு பக்கங்ளில் நிற்க அவர்களுக்கிடையில் விரன் நிற்கின்ற நிலையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. சில நடுகற்களில் ஐந்துக்கும் மேற்பட்ட தேவ மாதர்கள் வரிசையாகக் காட்டப்பட்டுள்ளன. தேவ மாதர்கள் பறந்து போகின்ற அமைப்பிலும், இரண்டு கால்களை மடக்கிய நிலையிலும் உள்ளனர்.

தேவலோகக் காட்சிகளாக அமர்ந்த நிலையில் உள்ள கடவுள், நந்தி, நின்ற நிலையில் உள்ள கடவுள் போன்றவை செதுக்கப்பட்டுள்ளன. சிவன் , பொருமாள், லிங்கம், பைரவர் போன்ற பல வகையான தெய்வங்களின் உருவங்கள் உள்ளன. இந்த உருவங்களின் அருகில் வீரன் அவர்களை வணங்குகின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளது. சில நடுகற்களில் லிங்கத்தின் முன் அமர்ந்து பூசை செய்யும் காட்சியும் இடம் பெற்றுள்ளது. சில நடுகற்களில் மூன்றாவது அடுக்கில் வரிசையாக பல தெய்வங்களின் உருவங்கள் காட்டப்பட்டுள்ளது.

பெரும்பாலும் இதில் கல்வெட்டுக்கள் இல்லை. கல்வெட்டில் கூற வந்த செய்தியை சிற்பங்களின் வடிவில் வீரன் எதற்காக உயிர் நீத்தான் என்ற செய்தியை தெளிவாகக் காட்டியுள்ளனர். கால்நடைகளைக் கவர்ந்த போது அல்லது மீட்ட போது உயிர் நீத்தவர்களுடைய நடுகற்களில் கால் நடைகளின் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன. இனக்குழு தலைவன் அல்லது சிற்றரசன் உயிர் நீத்தால் அவனுக்கு வெண்கொற்றக் குடையும், சாமரம் வீசுகின்ற வீரர்களும் நடுகற்களில் காணப்படுகின்றனர். புலி குத்திபட்டான் நடுகல்லில் புலியுன் சண்டை செய்யும் காட்சியும்,

பன்றி குத்திப்பட்டான் நடுகல்லில் பன்றியுடன் சண்டைசெய்யும் காட்சியும் புடைப்பு உருவங்களாக செதுக்கப்பட்டுள்ளன.

சில இடங்களில் வேறுபட்ட அமைப்பில் சிற்ப உருவங்கள் காணப்படுகின்றன. மூன்று அடுக்குகளில் காட்டப்பட்டுள்ள உருவங்களை ஒரே பலகைக் கல்லில் நீளமாகக் காட்டப்பட்டுள்ள வகைகளும் கிடைத்திருக்கின்றன. உதாரணமாக நீண்ட பலகைக் கல்லில் வீரன் சண்டைசெய்யும் காட்சி முன்புறமும், அதைத் தொடர்ந்து வெண்கொற்றக் குடையப் பிடித்த காவலுனும் அவன் அருகில் இரண்டுப் பெண்களும் நிற்கின்றனர். மூன்றாவதாக பல்லக்கில் ஒருவர் அமர்ந்திருக்க இருவர் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு செல்கின்ற காட்சி போன்றன வரிசையாக செதுக்கப்பட்டுள்ளன. இந்த நடுகற்களில் உள்ள புடைப்பு உருவங்கள் சிற்பங்களைப் போன்றும், பெரிய உருவங்களாகவும் செதுக்கப்பட்டுள்ளன. விஜய நகர மன்னர்களின் காலத்தில் புடைப்பு உருவங்கள் சிற்பங்களைப் போன்று பெரிய உருவங்களாக செதுக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

**நடுகற்களில் பெண்கள்**

தொடக்கக் கால நடுகற்களில் பெண்களின் உருவங்கள் காட்டப்படவில்லை. வீரர்கள் மட்டும் காணப்படுகின்றனர். பொ.ஆ. 8ஆம் நுற்றாண்டில் பெண்களை நடுகற்களில் காட்டுகின்ற வழக்கம் தொடங்கியுள்ளது. இது சதி என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கமாகக் கூறலாம். முற்கால நடுகற்களில் உள்ள பெண் உருவங்களில் சதியைக் குறிக்கின்ற அஸ்தங்கள் காட்டப்படவில்லை. பெண்களின் உருவங்கள் சிறிய உருவங்களாகக் காட்டப்பட்டுள்ளதால் இதன் விபரம் தெளிவாக இல்லை. ஆனால் பிற்காலத்தில் சதியைக் குறிப்பிடுகின்ற அடையாளங்கள் காணப்படுகின்றன. சதிக் கற்கள் தனியாகவும், நடுகற்களுடன் இணைந்தும் கிடைக்கின்றன.

சதி என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கம் சங்ககாலத்திலிருந்து காணப்படுகின்றது. இதை மகாசதிக்கல், மாசத்திகல், மாஸ்திகல், தீபாய்ந்த அம்மன் போன்று பல பெயர்களில் அழைக்கின்றனர். கன்னடத்தில் இதை “தோள் கொடுத்தல்“ என்றும் “ஆசன தோளு கல்லு“ என்றும் கூறுகின்றனர். இதனால் சதியைக் குறிக்க ஒரு கையை மட்டும் காட்டுகின்ற அமைப்பு வந்தது. அதைத் தொடர்ந்து பெண்களின் கையில் எலுமிச்சிம்பழம், சிறிய கத்தி, அபயம் போன்ற முத்திரைகள் காட்டப்பட்டுள்ளன. சில சதிக்கற்களில் பெண் ஒருவர் பத்மாசனத்தில் அமர்ந்த

நிலையிலும், அப் பெண்ணைச் சுற்றிலும் தீப்பிழம்பின் சுவாலைகள் காட்டப்பட்டுள்ளன. இது பெண் ஒருவர் தீயில் இருப்பது போன்ற தோற்றம் கொண்டது. தீயின் அருகில் சில மங்கல சின்னங்களும் காட்டப்பட்டுள்ளன. சதி கற்களில் இதை வளர்ச்சி நிலையாகக் கூறலாம்.

பொ.ஆ.15ம் நூற்றாண்டிற்கு முன்னர் நடுகற்களுடன் சதிக் கற்களைக் காட்டுகின்ற வழக்கம் குறைந்த எண்ணிக்கையில் காணப்படுகின்றன. அதற்குப் பின்னர் கிடைக்கின்ற நடுகற்களில் அதிக அளவில் சதிக் கற்கள் இணைந்து கிடைக்கின்றன. சதி அஸ்தத்துடன் பெண் ஒருவர் நின்ற நிலையில் பெரும்பாலான நடுகற்கள் காணப்படுகின்றன. எனவே விஜயநகர மன்னர்களின் காலத்தில் சதி என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கம் அதிகரித்துள்ளது.

இப்பகுதியில் கோயில்கள் குறைந்த அளவில் காணப்படுன்றன. கோயில்கள் கட்டுவதற்குத் தேவையாக பொருளாதார நிலை, நிலையான அரசு ஆகியன இல்லாதக் காரணத்தால் மக்கள் இனக்குழு மக்களாகவே இருந்தனர். சமணம், பௌத்தம், சைவம், வைணவம் போன்றன அதிக அளவில் வளர்ச்சிடையவில்லை. இனக்குழு மக்களின் இயற்கை வழிபாடுடன், மூதாதையர் வழிபாடே முதன்மையான வழிபாடாக இருந்தது. இதனால் நடுகல் வழிபாடு மக்களின் ஒரு அங்கமாக இருந்தது. நடுகற்களில் இந்து சமயம் சார்ந்த மங்கலச் சின்னங்கள் மற்றும் தேவலோகக் காட்சிகள் போன்றன பொறிக்கப்பட்டுள்ளன. இவை நடுகல் வழிபாட்டை இந்து சமயமாக மாற்றுவதற்காக செய்யப்பட்ட முயற்சியாக இருக்கலாம் என்ற ஒரு கருத்தும் உள்ளது. அத்தகைய மாற்றங்கள் எதுவும் நடைபெறாததால் நடுகற்களில் உள்ள சிற்பங்களில் அதிக மாற்றங்கள் ஏற்படவில்லை. இதனால் நடுகல் வழிபாடு தனித்துவம் பெற்றதாகவே இன்று வரையில் உள்ளது.

தொடக்க காலத்தில் நடுகல் மட்டும் நட்டனர், பின்னர் நான்கு பலகைக் கற்களை கல் வீடு அமைப்பில் கட்டி கிழக்கு பக்கம் வாயில் வைத்தனர். நடுகற்கள் வளர்சியடைந்த காலத்தில் தேவலோகக் காட்சிகளில் சைவம், வைணவம் என்ற பாகுபாடின்றி எல்லா தெய்வங்களையும் ஒன்றாக தேவலோகக் காட்சியில் காடியுள்ளனர். சென்னசந்திரம், கங்காலம், தொகரப்பள்ளி போன்ற இடங்களில் உள்ள நடுகற்களை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

**சென்னசந்திரம் நடுகல்**

இந்த நடுகல்லில் தேவலோகக் காட்சியில் அமர்ந்த நிலையில் ஒரு பெண்தெய்வமும் அதன் அருகில் வேணுகோபாலசாமி புல்லாங்குழல் ஊதுகின்ற அமைப்பிலும் நிற்கின்றனர். அவருடைய காலின்கீழ்ப் பகுதியில் பசு காட்டப்பட்டுள்ளது. தேவியர் இருவர் அருகில் நிற்கின்றனர். கஜலட்சுமி மையப்பகுதியில் பத்மாசனத்தில் அமர்ந்துள்ளார். இதன் அருகில் பைரவர் நின்ற நிலையில் நாயுடன் காணப்படுகின்றார். எல்லா உருவங்களிலும் நான்கு கரங்கள் காட்டப்பட்டுள்ளன. இத்தெய்வங்களின் அருகில் வீரன் குதிரையுடன் நிற்கின்றான். இங்கு தாய்தெய்வம், சிவன், விஷ்ணு அகியன ஒன்றாகக் காட்டப்பட்டுள்ளன. எனவே சமயங்களின் வேறுபாடு இன்றி நடுகல் வழிபாடு வளர்ந்துள்ளது. இனக்குழு மக்களின் வழிபாடாக உள்ளதால் சிற்பக்கலை கோயிலிலுள்ள சிற்பங்களைப் போன்று வளர்ச்சியடையவில்லை.

**கெண்டி**

முற்கால நடுகற்கள் பலவற்றில் கெண்டி காணப்படுகின்றது. கெண்டியைப் பற்றி கருத்து கூறமுற்பட்ட கே.வி.சௌந்தரராஜன், இதில் தண்ணீர் இருக்க வேண்டும் அல்லது பூரணகுடம் அல்லது சிவலிங்கத்தைப் போன்று உள்ளதால் இந்து சமய வழிபாட்டிலிருந்து சிறு தெய்வ வழிபாட்டிற்கு வந்திருக்கலாம் என்று கூறுகின்றார். ஆனால் இதை மறுத்த இரா.பூங்குன்றன் மது வைப்பதற்காக பயன்படுத்தப்பட்டது என்று கூறுகின்றார். சங்க இலக்கியங்கள் மது வகைகளை இறந்தவர்களுடைய நடுகற்களுக்கு வைத்து படைத்தனர் என்று கூறுகின்றன. இதனால் மது வைப்பதற்காக இருக்கலாம் என்று அவர் கருதுகின்றார். எனவே இவர் கூறுவதே ஏற்புடையதாக இருக்கின்றது. இன்றும் இறந்தவர்களுக்கு அவர்கள் விரும்பிய உணவுப் பொருட்களையும், மற்ற பொருட்களையும் வைத்து வணங்குவது வழக்கமாக உள்ளது. நடுகல் விழாவின் போது தகடூர் பகுதியில் இன்றும் மதுவை வைத்து வழிபடுகின்றனர். எனவே கெண்டியில் மதுவை வைக்கப் பயன்படுத்தப்பட்டதால் கெண்டியை வீரனுடன் வடிக்கப்பட்டிருக்கலாம்.

## துணை நூற்பட்டியல்


அகநானூறு, பெருமழைப் புலவர் உரை, கழகப் பதிப்பு, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1974.

ஆவணம், தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், 2001.

புறநானூறு, உ.வே.ச. பதிப்பு, சென்னை,1963.

குறுந்தொகை, பெருமழைப் புலவர் உரை, கழகப் பதிப்பு, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1972.

புறப்பொருள் வெண்பா மாலை, உ.வே.ச.பதிப்பு, சென்னை-90, 1962.

கார்த்திகேசு சிவத்தம்பி.," பண்டைத் தமிழ்ச் சமுதாயம், வரலாற்றுப் புரிதலை நோக்கி", நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 2011, ப. 93-94

சுப்பிரமணியன், கா. "சங்க கால சமுதாயம்", நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1982, ப.40-43

சுப்பிரமணியன், கா. "சங்க இலக்கியத்தில் இனக்குழு வாழ்க்கை", ஆராய்ச்சி, இதழ், 22, 1978.

சுப்பிரமணியன், தி. "தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு", நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,சென்னை, 2011.

சுப்பிரமணியன், தி. "தமிழகத் தொல்லியலும் வரலாறும்" (தகடூர்ப் பகுதி) நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2009.

கோசாம்பி, டி.டி., "மாயையும் எதார்த்தமும்", அலைகள் வெளியீட்டகம், சென்னை, (த.ஆ.) 2005, ப.17-72

கைலாசபதி, க. "பண்டையத் தமிழர் வாழ்வும் வழிபாடும்", மக்கள் வெளியீடு, சென்னை, 1978, ப.35.

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர், தமிழ்நாட்டு வரலாறு தொல்பழங்காலம், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர், சென்னை, 1975.

தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, "உலகாயதம், பண்டைக் கால இந்தியப் பொருள் முதல்வாதம் பற்றி ஆய்வு", (த.ஆ.) சென்னை, 2010.

Aiyappan, A., 1933, "Rude Stones Monuments of the Perumal Hills, Kodaikanal", in

Quarterly Journal of Mythic Society, .Bangalore, Vol. XXX-IV, pp.373-397.

Aiyappan, A., 1948, "The Megalithic Culture of Southern India", in J.Ind. Anthro.Inst.,N.S. vol.II,pp.37-47.

Allchin, B., and Allchin, F.R., "The Birth of Indian Civilization", Penguin Books, Harmonds worth, 1968.

Allchin, F. R., "Neolithic Cattle Keepers of South India", Cambridge University Press, Cambridge, 1963.

Allchin, F.R., "The Stone alignments of Southern Hyderabad", In Man, vol.LVI, No.150, pp.133-156.

Anglade,A., and Netwton, L.V., 1928, "The Dolmens of Palani Hills", Mem. of the Archaeological Survey of India, No. 36, Calcutta, pp.1-18

Balakrishna, Nayar, T., 1963," Where did the Dravidians came from?" In Tamil Culture, vol. X, 4, pp.341-353.

Banerjee, N.R.," Iron Age in India", New Delhi, 1965.

Banerjee, N.R., "Megalithic Builders of South India were Dravidian Speakers –A Review", in Silver Jubilee Vol. Archaeol. Soc. South India, Madras, pp.180-189

Branfill, B.R. 1880, "Rude Megalithic Monuments in North Arcot", in J. Asiat.Soc. Bengal, vol.XLIX, pp.8-10

Breeks, J.W., "An account of the Primitive Tribes and Monuments of the Nilgiris", London, 1873.

Briffault,R., "The Mother", (2nd ed.) London, 1952, III, p.55.

Buchanan-Hamilton, "A Journey from Madras through the Countries of Mysore, Canara and Malabar", London, 1807.

Caldwell, R., 1887, "Sepulchral Urns in South India", in Ind. Anti. vol.VI, pp.81-83

Chakrabarti, D.K., "The Early Use of Iron in India", Oxford University Press, Delhi, 1992.

Chattopadhyaya, Devi prasad, "Lokayata", A Study of Ancient Indian Materialism, People Publication House, New Delhi, Fifth edition, 1981.

Chatterjee,B.K.,and Gupta,P., "Report on the Adittanallur Skull", Anthropological Survey of India, Culcutta, 1963.

Childe, V.G., "Megaliths", Ancient India, No. 4, 1947.pp.5-13

Codrington, K.de.B., "Indian Cairns and Urns", in Man, Vol.XXX, No.139, 1929.

Darsana, S.B., "Megaliths in the Upper Palar Basin, Tamil Nadu-A New Perspective",Man and Environment XXIII (2), 1998.

Deo, S. B., "The Megaliths: Their Culture, Ecology, Economy, and Technology", In Recent Advances in Indian Archaeology (S. B. Deo and K. Paddayya Eds.), Pune: Deccan College, 1985.

Deo, S.B., "Problem of South India Megaliths", Karnatka University,

Dharwar, 1973.

Fergusson, J., "Rude Stone Monuments in all Countries, Their Age and Uses", John Murray, London, 1872.

Frazer, J.G., "The Golden Bough", (abridged Ed.) London, 1947, pp.590-625.

Gururaja Rao, B.K., "Megalithic Culture in South India", University of Mysore, 1972, pp.297-298.

Haimandrof, C.Von.F. "The problem of Megalithic Culture in Middle India", M.I., Vol.25, 1945, pp.73-86.

Kailasapthy, K., "Tamil Heroic Poetry", Oxford University Press, 1968.

Kanakasabhai, V., "The Tamils Eighteen Hundred Years Ago", The South India Saivasiddhanta Works Publishing Society, Tirunelveli, 1956.

Krishnaswamy, V.D., "Stone Age India", Ancient India, Vol.3, Archaeological Survey of India, New Delhi, 1947 .

Krishnaswamy, V.D., 1938, "Environmental and Cultural changes of prehistoric man near Madras", Journal of the Madras Geographic Association, 13, pp.58-90.

Krishnaswamy, V.D., "Megalithic Type of South India", in Ancient India, No.5, pp.35-45.

Leshnik, L.S., "South Indian Megalithic Burial - the Pandukal Complex", Wiesbaden: Franz Steiner Verlag Gmbh, 1974.

Longhurst, A.H., "A Report on the Excavation of Certain Cairns in the Coimbatore Distict", in Ann.Rep, Archeol. Sure. India, Southern Circle, for 1913-1914, Madras, pp.43-49.

Morgan, L., "Ancient Society" The Belknap Press of Harvard University, Cambridge,1964, p.170

Nagaswamy, R., (ed.), "Seminar on Hero Stones", The State Department of Archaeology, Government of Tamil Nadu, Madras, 1974.

Narasimhaiah, B., "Neolithic and Meglithic Culture in Tamil Nadu", Sundeep Prakashan New Delhi, 1980.

Rajan, K., "Memorial Stones in South India", Manoo Pathippakam, Thanjavur, 2000.

Ramachandran, K.S., "A Bibliography on Indian Megaliths", State Department of Archaeology, 1971.

Rao.K.P., " Deccan Megalithic", Sundeep Prakshan, New Delhi,1988.

Rao,K.P., " Megalithic Anthropomorphic Status: Meaning and Significance", Indo- Pucific Prehistoric Association Bulletion, 2000, Vol.3, pp.112-113

Rao,K.P., "Beginnings of Sculptural Art in South India", in Proceedings of the Indian Congress, 53rd Session, Warangal, pp.664-67

Rea, A., "Adichanallur excavation", Annual Report of the Archaeological Survey of Madras and Coorg: 1902-03.

Sankalia, H.D., “Pre Historic Art in India”, Vikas Publishing House Pvt. Ltd., Delhi, 1977.

Sankalia, H.D.,” Prehistory and Protohistory of India and Pakistan”, Poona, 1974.

Sivarja palli, K. N., “The Chronology of the Early Tamils”, University of Madras, 1932, pp.7-9

Sivathamby, K., “Drama in Ancient Tamil Society”, (Quation from Towards

Soundararajan, K.V., “Origin and Spread of Memorial Stones in Tamil Nadu”, In

Memorial Stones, A Study of Their Origin, Significance and Variety (S. Settar and Sontheimer, D. (Eds.), Dharwad, New Delhi: Karnatak University and South Asia Institute of Heidelberg University, 1982.

Srinivasan, C.R., “Kanchipuram Through the Ages”, Agam Kala Prakashan, Delhi, 1979.

Srinivasan, K.R., “Survey of South Indian Megaliths”, Ancient India, Vol.9, Archaeological Survey of India, 1953.

Srinivasan, K.R., “The megalithic burials and urn-fields of South India in the light of Tamil Literature and tradition”, Ancient India, vol.2, 1958-59.

Srinivasan, K.R., and Banerjee, N.R., “Survey of South Indian Megaliths”, in Ant. India No.9, 1953, pp.103-115.

Srivastava, K.M., “Mother goddess in Indian Art and Archaeology and Literature, Agam Kala Prakashan”, Delhi, 1979.

Subbarao,B., “ Megalithic Problem of South India and the Dravidian Languages”, in Trans.Archaeol. Soc. South India, 1962, pp.132-151.

Sundara, A., “The Early Chamber Tombs of South India: a Study of the Iron Age Megalithic Monuments of North Karnataka”, New Delhi: University Publishers (India), 1975.

Sundara, A., “Typology of Megaliths in South India”, In Essays in Indian Proto history (D. P. Agrawal and D. Chakrabarti eds.), 1979.

Tylor, B. Edward, "Primitive Society", John Murry, Vol. I and II London, 1971.

Thapar,B.K., " Porkalam 1948: Excavation of a Megalithic Urn Burial", in Anc. Indi. No.8, 1952, pp.3-16.

Thomson,G., " Studies in Ancient Greek Society", London, Vol.II, 1947, pp.42-43

Zuckman,A.A., 1930, " The Adichanallur Skulls", in Bull. Madras Govt. Museum, N.S., General Section, vol. II, pp.1-24



# 78. செய்தி திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்

## 78:1 பல்லவர் கால மும்மூர்த்திகள்

**வி**ழுப்புரம் மாவட்டம், விழுப்புரத்திலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ள நன்னாடு என்ற கிராமத்தில் பல்லவர் காலத்தை சார்ந்த மும்மூர்த்தி கள் சிலை மாரியம்மன் கோவில் திருச்சுற்றில் மேற்குப் பகுதியில் - தென்மேற்கு மூலையில் உள்ளது. நடுவில் - சிவன் இலிங்க வடிவத்திலும் வலப்பக்கம் திருமாலையும் இடப்பக்கம் நான்முகனையும் இச்சிற்பம் கொண்டுள்ளது.



**ந.வெங்கடேசன்,**வில்லியனூர்

## 78:2 தேவஸ்தானம் மூத்ததேவி



**மூ**த்ததேவி:பேட்டைவாய்த்தலை அருகிலுள்ள தேவஸ்தானம் சாலையை ஒட்டி உள்ள கலிங்கு வாய்க்கால் மேட்டில் 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த மூத்த தேவியின் சிற்பம் ஒன்று உள்ளது. அமர்ந்த நிலையில் வலக்காலை தொங்கவிட்ட நிலையிலும் இடக்காலை மடித்தும் சுகாசன நிலையில் வலக்கையில் பூ ஏந்தி இடக்கையை தொடையில் இருத்திய நிலையில் பருத்த மார்பகங்களுடன் காட்சி அளிக்கும் மூத்த தேவியின் இருபக்கங்களிலும் பக்கத்திற்கு ஒருவராக மாந்தன் மாந்தி நின்ற நிலையில் காணப்படுகின்றனர். எண்ணெய்ப் பசையால் இச்சிற்பம் மிகவும் தேய்ந்த நிலையில் காணப்படுகிறது.

**சு.இராசவேலு பா.அருண்ராஜ், தஞ்சாவூர்; வே.பார்த்திபன், ந.முருகன், ஜெ.செந்தில்வேலன்,** திருச்சிராப்பள்ளி

## 78:3 மங்கம்மாள்புரம் மூத்த தேவி

தஞ்சாவூர், மாவட்டம் கும்பகோணம் வட்டம் கும்பகோணத்திலிருந்து வலங்கைமான் செல்லும் மங்கம்மாள்புரம் ஊரின் குடியிருப்புப் பகுதியின் அருகே தென்மேற்கில் திடல் என அழைக்கப்படும் இடத்தில் பொ.ஆ.8 அல்லது 9ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த மூத்ததேவியின் (ஜேஸ்டாதேவி) புடைப்புச் சிற்பமும் உள்ளது. இதனை இவ்வூர் மக்கள் மாணிக்க நாச்சியம்மன் என்னும் பெயரில் வழிபட்டு வருகின்றனர். நேர்த்தியற்ற நிலையில் உள்ள இச்சிற்பத்தில் மூத்ததேவி அமர்ந்த நிலையிலும் அவளது இருபக்கங்களில் மாந்தன் மாந்தியுடன் காட்சியளிக்கின்றார். இரண்டு கைகளுடன் உள்ள மூத்த தேவியின் வலக்கை காக்கும் நிலையிலும் இடக்கையை தொடையின் பக்கவாட்டில் இருத்தியும் காட்சியளிக்கின்றாள். இப்பகுதியிலேயே பொ.ஆ.13ஆம் நூற்றாண்டினைச் சிவலிங்கம் ஒன்று ஆவுடை சிதைந்த நிலையில் காணப்படுகின்றது. இவ்வூரின் எதிர்கரையில் இதே காலக்கட்டத்தினைச் சேர்ந்ததாகக் கருதத்தக்க அம்மன் சிற்பம் ஒன்றும் காணப்படுகின்றது.



**இரா.சந்தனம்,தஞ்சாவூர்**

## 78:4 மதுரை வாகனப் பணிமனை சிற்பங்கள்

### திருமால்

**ம**துரை மீனாட்சி அரசு மகளிர் கலைக் கல்லூரிக்கு அருகில் மதுரை மாநகராட்சி வாகனப் பாதுகாப்பு கட்டுமானப் பணிமனையில் திருமால் புடைப்புச் சிற்பம் உள்ளது. திருமால் சிதைவுற்ற நிலையில் அமர்ந்து உள்ளார். வலது காலை மடித்தும் இடது காலை தொங்கவிட்டும் அமர்ந்த நிலையில் ஆடை வரிவரியாக கணுக்காலுக்கு மேல் உள்ள நிலையில் காணப்படுகிறது. இவரது நான்கு கைகளில் மேல்வலக்கையில் சக்கரமும் மேல்இடது கையில் சங்கும் உள்ளன. வலது முன் கை சின் முத்திரையுடனும் இடது முன் கை தொடை மேல் இருத்தியபடியும் உள்ளன. கழுத்தில் பட்டைகள் கழுத்தணி உள்ளது. மார்பில் பூணூல் அணிவிக்கப்பட்டுள்ளது. இந்த உருவத்தின் அமைதியை வைத்து இதனை 10ஆம் நூற்றாண்டுச் சிற்பம் எனலாம். சின்முத்திரை மற்றும் சுகாசன நிலையில் காரணமாக கல்லூரி வளாகத்தில் இச்சிலையை தட்சினாமூர்த்தி எனக் கருதி வழிபடுகின்றனர்.

### நினைவுக்கல்

மூவர் அமர்ந்திருப்பது போன்ற மற்றொரு சிறிய கல் ஒன்றும் இங்குள்ளது. நடுவில் உள்ள ஆண் பக்கக் கொண்டையுடனும் இவருக்கு இருபக்கங்களில் இரு பெண்கள் உள்ளனர். இது இறந்தவருக்காக எடுக்கப்பட்ட சதிகல்லாகும். இம்மூவரும் சுகாசனத்தில் அமர்ந்துள்ளனர். நடுவில் உள்ள ஆணின் இடது கை வாளைப் பிடித்துள்ளது. வலது கையில் உள்ள ஆயுதம் சிதைவுற்று உள்ளது. சிதைந்த ஆயுத்தின் இது வில்லாக இருக்கலாம். இம்மூவரும் கழுத்திலும்இடுப்பிலும் பல்வேறு அணிகளை அணிந்துள்ளனர். இவர்களது ஆடைகள் மடிப்புடன் நேர்த்தியாக உள்ளன. ஆண் மற்றும் இடது பக்கப் பெண்ணுக்கும் இடையில் கால் பகுதியில் ஆசனம் போன்று புடைப்பாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இரு பெண்களில் மார்புப் பகுதியும் மடக்கிய கையின் முழங்கை மூட்டுக்களும் சிதைக்கப்பட்டுள்ளன. இச்சிற்பத்தொகுதி 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**செ.செந்தாமரை,** மதுரை

**சு.சந்திரா,** மதுரை

## 78:5 லட்சியம் சிற்பங்கள்



**வி**ழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம் இலட்சியம் கிராமத்தில் உள்ள நூறுயோஜனை உடைய மகாதேவர் என்ற சிவன் கோயில் அருகே குடிநீர் குழாய் போட பள்ளம் தோண்டியபோது நான்கு கற் சிற்பங்கள் பூமிக்கடியில் இருந்து கிடைத்தன. அவை விஷ்ணு, பூதேவி, ஸ்ரீதேவி, உமையவள் சிற்பங்கள் ஆகும். விஷ்ணு 4 அடி உயத்தில் கிரீடமகுடம், கன்னிமாலை, இடது மேற்கை சக்கரம், வலது மேற்கை சங்கு, கத்திரி முத்திரை, முன் வலதுகரம் கடிஅஸ்தம், முன் இடதுகை அபய முத்திரையுடன் காணப்படிகிறது. கழுத்தில் சரபளி , கழுத்தணிகளும், மார்பில் முப்புரிநூல், வயிற்றுகட்டு, இடை முதல் பாதம் வரை ஆடையும் அலங்காரபிரியனுக்கு உரிய லட்சணத்துடன் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.

பூதேவி ஜடா மகுடம், காதுகளில் அணிகலன்கள், வலது கையில் நீரோப்ப மலர், இடதுகை தொங்கிய நிலையில் உள்ளது. மார்புக்கச்சை காட்டப்படவில்லை. இடை முதல் பாதம் வரை ஆடை. துவிபங்கநிலையில் உள்ளார். ஸ்ரீதேவி ஜடா மகுடம், காது, கழுத்தில் அணிகலன்கள். மார்பு கச்சை காட்டப்பட்டுள்ளது. இடது கையில் தாமரைமொக்கு, வலது கை தொங்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளது. இடைமுதல் பாதம் வரை ஆடை உள்ளது. உமையவள் கிரீடமகுடம் இடது மேற்கையில் பாசம் முன்கரம் வரதம், வலது மேற்கை உடைந்துள்ளது. வலது முன்கரம் அபயம், மார்புகச்சை காட்டப்படவில்லை. இடைமுதல் பாதம் வரை ஆடை காட்டப்பட்டுள்ளது.

**சி.வீரராகவன்**, விழுப்புரம்.
**பொன்.வெங்கடேசன்**, ஆறகழூர்.

## 78:6 ஏற்காடு மான்குத்திபட்டான் நடுகல்

**ஏ**ற்காடு மான்குத்திபட்டான் நடுகல்: சேலம் மாவட்டம் ஏற்காடு வட்டம் குண்டூர் கிராமத்தில் ஆய்வுகள் மேற்கொண்டபோது அங்குள்ள அரசினர் துவக்கப்பள்ளி அருகே மான்குத்திப்பட்டான் நடுகல் ஒன்று கண்டறியப்பட்டு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டது.

வழக்கமாக ஆநிரை கவர்ந்தபோது அல்லது மீட்டபோது இறந்த வீரன், புலியோடு போரிட்டு இறந்த வீரன், காட்டுப்பன்றி வேட்டையின் போது இறந்த வீரன், போரில் வீர மரணம் அடைந்த வீரன் இவர்களுக்கு நடுகல் எடுப்பது வழக்கம். ஆனால் மிக அரிதாக மான் வேட்டையின் போது இறந்த ஒரு வீரனுக்காக இந்த நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. தமிழக தொல்லியல் துறையில் இணை இயக்குனராக பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் ர. பூங்குன்றன் அவர்கள் இது மான்குத்தி பட்டான் நடுகல் என உறுதி செய்துள்ளார். இதற்கு முன் 9 ஆம் நூற்றாண்டை சேர்ந்த ஒரே ஒரு மான்குத்திப்பட்டான் நடுகல் மட்டுமேகண்டறியப்பட்டுள்ளது. இப்போதுகண்டறியப்பட்டுள்ள நடுகல் 10 ஆம் நூற்றாண்டை சேர்ந்த சோழர்கால நடுகல்லாக இருக்கலாம். விளை நிலங்களில் உள்ள பயிர்களை நாசம் செய்த மான்களை வேட்டையாடும் போதோ அல்லது விரட்டும்போதோ மான்களின் கொம்புகள் குத்தியோ அல்லது வேறு காரணத்தாலோ வீரன் இறந்துள்ளான். இந்த வீரனுக்காக எடுக்கப்பட்டுள்ள நடுகல் இதுவாகும். கல்வீடு போன்ற அமைப்பின் உள்ளே நடுகல் உள்ளது. இந்த கிராமத்தில் வசிக்கும் பழங்குடி இன மலையாளி மக்கள் படேரி என்ற பெயரில் இந்த நடுகல்லை வணங்கி வருகிறார்கள்.



வீரனின் தலையில் பின்புற கொண்டை, காதுகளின் அணிகலன், கழுத்தணியுடன் தலையை சற்றே வலதுபக்கம் சாய்ந்த நிலையில் காட்டப்பட்டுள்ளது. இடது கையில் வில் ஏந்தி வலது கையில் அம்பை பிடித்து மானின் நெஞ்சை குறி வைத்து எய்யும் நிலையில் உள்ளது. அம்பின் முனை கூர்மையாக இல்லாமம் மொட்டு போன்று உள்ளது. முதுகில் அம்புக்கூடு, இடுப்பில் அரையாடையும் ஆடை முடிச்சும் காட்டப்பட்டுள்ளது. இடது காலை முன் வைத்து வலது கால் சற்று வளைந்து முன்னோக்கி நடக்கும் நிலையில் வீரன் உள்ளான். வீரனின்

இடதுபுறம் மான் உள்ளது. மான் முன்கால்கள் இரண்டையும் உயர்த்தி ஒரு பாறையின் மீது நிற்கும்படி உள்ளது. வீரனின் வலது பக்கம் ஒரு பெண் வணங்கிய நிலையில் உள்ளார். இவர் வீரனின் மனைவியாக இருக்கலாம். வேட்டையின் போது உடன் சென்றோ அல்லது கணவன் இறந்த பின் உடன்கட்டை ஏறியோ இந்த பெண் இறந்திருக்கலாம். அதனால் வீரனின் மனைவியின் உருவமும் இங்கு காட்டப்பட்டுள்ளது. எனவே இது ஒரு சதி கல்லுமாகும். சேலம் மாவட்டத்தில் மான்குத்திப்பட்டான் நடுகல் கண்டறியப்படுவது இதுவே முதன் முறையாகும்

**புத்தூர்நடுகற்கள்**

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் தலைவாசல் அருகே புத்தூரில் 2 நடுகற்கள் காணப்படுகிறது. இவை 40 செ.மீ உயரம் 35 செ.மீ அகலம் உடையதாக உள்ளது. இதில் ஒரு நடுகல் தலை இல்லாமல் உள்ளது. இதை தலைவெட்டி சாமி என ஊர் மக்கள் அழைக்கிறார்கள். முதல் நடுகல்லானது பின்னோக்கிய இடது பக்க கொண்டையுடனும், இடது கையில் வில் பற்றி வலது கையில் நாணில் அம்பை பூட்டி தொடுக்கும் நிலையில் உள்ளது. முதுகு பக்கம் அம்புக்கூடு, இடையில் அரையாடை இடுப்பில் குறுவாளுடன் இடது பக்கம் எதிரியைத் தாக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளது. இதன் காலம் 18 ஆம் நூற்றாண்டாகலாம்.

இரண்டாவது நடுகல்லானது தலை சிதைக்கப்பட்ட நிலையில் உள்ளது. கழுத்தில் சரபளியும் சவடியும் காட்டப்பட்டுள்ளது. மார்பில் சன்னவீரம், வலது கையில் கத்தி, இடது கையில் வில் ஏந்தியும், வயிற்றுக்கட்டும் (உதரபந்தம்) காட்டப்பட்டுள்ளது. வயிற்று கட்டின் சுங்கு முடிச்சு இடது பக்கம் காட்டப்பட்டுள்ளது. இடை முதல் தொடை வரை அரையாடையும், வலதுகால் நேராகவும் இடது கால் இடப்பக்கம் திரும்பிய நிலையிலும் உள்ளது.

**பொன்.வெங்கடேசன்,**ஆறகழூர்
**சி.வீரராகவன்,**விழுப்புரம்
**கோ.பெருமாள், சி.பொன்னம்பலம்,**பேளூர்.
**ஜீவநாராயணன்,**பெத்தநாயக்கன்பாளையம்.

## 78:7 மேலக் கொண்டையார் கற்காலக் கருவி, சுடுமண் பொம்மைகள்

**தி**ருவள்ளூர் மாவட்டம், திருநின்றவூர் -பெரியபாளையம் சாலையில் மேலக்கொண்டையார் கிராமம் கோட்டை மேடு என்ற பகுதியில் புதிய கற்காலக் கருவி மற்றும் பொ.ஆ.1-2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சுடுமண், பொம்மைகள், கூம்புவடிவ ஜாடிகள் கண்டெடுக்கபட்டுள்ளன. இவ்வூரில் உள்ள திருமலை நாத ஈசுவர் கோயிலிருந்து சுமார் 1.கி.மீ. தொலைவில், ஏரிக்கு அருகாமையில் உள்ள கோட்டை மேடு பகுதியில் நிலத்தை உழும் பொழுது சுடுமண் பொம்மைகள், கூம்பு வடிவஜாடியின் பகுதிகள் கிடை த்துள்ளன. இப்பகுதியில் புதியகற்காலக் கல்லாயுதமும் கிடைத்துள்ளது. கூம்பு வடிவ ஜாடிகள் அகழாய்வுகளில் காஞ்சிபுரம், பட்டரைப்பெரும்புதூர், திருவேற்காடு பகுதிகளில் கிடைத்துள்ளன. எனவே இது ஒரு முக்கிய வாழ்விடமாக இருந்திருக்க வேண்டும் மேலக்கொண்டையார் கோட்டைமேடு பகுதியில் முக்கியமான தொல்லியல் சான்றுகள் கிடைக்கலாம் எதிர்காலத்தில் இங்கு ஆய்வினை மேற்கொண்டு அகழாய்வினை மேற்கொள்ளலாம்.





**கி. ஸ்ரீ தரன்,** சென்னை

## 78:8 அருணா பன்றிகுத்திபட்டான் கல்:



**சே**லம் மாவட்டம் பெத்தநாயக்கன் பாளையம் வட்டம் கருமந்துறை க்கு உட்பட்ட கல்வராயன் மலையில் அருணா கிராமத்தில் காட்டுப்பன்றிகுத்தி பட்டான்சதிகல், கண்டறியப்பட்டுள்ளது. விளைந்த பயிர்களை நாசம் செய்து வந்த காட்டுப்பன்றிகள் கூட்டத்தை வீரன் வேட்டையாடும்போது காட்டுப்பன்றிகளை கொன்று தானும் இறந்துள்ளான். அவன் மனைவியும் அவனுடன் உடன் கட்டை ஏறி இறந்துள்ளார். அவர்களுக்காக வைக்கப்பட்ட சதிகல் இதுவாகும். இது 14 அல்லது 15 ஆம் நூற்றாண்டை சேர்ந்த நடுகல்லாக இருக்கலாம். வீரன் நீண்ட வில்லுடன் காட்டுப்பன்றியின் மீது அம்பை விடும் நிலையில் காட்டப்பட்டு உள்ளான். வீரனின் தலையில் வலது பக்கம் குவித்த கொண்டையில் இறகு அலங்காரமும்,காதணி அற்ற நீண்ட காதும்,கழுத்தை ஒட்டி மணியால் ஆன ஆபரணமும் காட்டப்பட்டுள்ளது.குறுவாளுடன் கூடிய அரைக்கச்சை ஆடையும் கையில் வளையமும்,கீழ்நோக்கி பாயும் நிலையில் அம்பும் உள்ளது. ஆணுக்கு காட்டப்பட்ட அதே தலை அலங்காரத்துடன் காதணி அணிந்த பெண் மேலாடையின்றி இடையில் அரையாடையுடன் ஆணைவிட உயரம் குறைந்த நிலையில் உள்ளார். இவரது ஒரு கை மடக்கிய நிலையிலும் ஒரு கை தொங்க விடப்பட்ட நிலையிலும் ,காலில் தண்டையும் , கையில் வளையமும் உள்ளது. இவர்கள் அருகே காட்டுப்பன்றி ஒன்று முதுகில் அம்பு பாய்ந்த நிலையில் வீரனை தாக்க முயல்வது போல் உள்ளது. மூன்று நாய்கள் இறந்த நிலையில் உள்ளன. கூட்டமாக வந்த காட்டுப்பன்றிகளை வேட்டையாடிய வீரன் அவற்றை கொன்று தானும் தன் நாய்களுடன் இறந்துள்ளான்.

**பொன்.வெங்கடேசன்,**ஆறகழூர்

**கோ.பெருமாள், சி.பொன்னம்பலம்,**பேளூர்.

**ஜீவநாராயணன்,**பெத்தநாயக்கன்பாளையம்.

## 78:9 உளுந்தூர் பேட்டை வட்டாரச் சிற்பங்கள்:

### கொற்றவை



உளுந்தூர் பேட்டை வட்டாரத்தில் துர்க்கையின் சிற்பங்கள் அயன் வேலூர், கீழ்க்குப்பம்வேலூர், கொலவாடி ஆகிய ஊர்களில் பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பங்களாகக் காணப்படுகின்றன. உளுந்தூர் பேட்டைக்கு வடக்கே 14 கி.மீ தொலைவில் உளுந்தூர் பேட்டை - திருவெண்ணைநல்லூர் சாலையில் மேற்காக அமைந்துள்ள அயன்வேலூரின் நடுவே துர்கையின் சிற்பம் காணப்படுகிறது. பலகைக்கல்லில் செதுக்கப்பட்டுள்ள இச்சிற்பமானது எருமைத்தலையின் மீது சமபங்க நின்றநிலையில் தலையில் ஜடாபந்தம், வலதுகையில் சூலமும், இடதுகையில் சங்குடனும் காணப்படுகின்றது.

உளுந்தூர் பேட்டைக்கு வடக்கே வேலூரிலிருந்து கூவாகம் செல்லும் சாலையில் கீழ்குப்பம் வேலூர் ஊரின் மேற்கே உள்ள சிவன் கோயிலின் பின்புறம் துர்க்கையின் சிற்பம் காணப்படுகின்றது. இச்சிற்பமானது பலகைக்கல் புடைப்புச் சிற்பமாக மஹிஷன் மேல் நின்ற சமபங்க நிலையில் எட்டு கைகளுடன் காணப்படுகின்றது. வலது முன்கையில் அபய முத்திரையும், பின்கைகளில் சூலம், நீண்ட வாள் மற்றும் பாம்பு காணப்படுகிறது. இடது முன்கை ஊருஹஸ்தம் தொடை மீது வைத்தவாறும், பின்கைகளில் வில், சங்கு மற்றும் கேடயம் போன்றவையும் உள்ளன. மேலும் மார்புகட்சை, இடுப்பில் ஆடை மற்றும்கை, கால், காதுகளில் அணிகலன்களுடன் காணப்படுகிறது. துர்க்கையின் தலைக்கு இடதுபுறத்தில் குதிரையும், வலது புறத்தில் கிளியும் காணப்படுகின்றது. துர்க்கையின் காலடியில் வலது மற்றும் இடது புறத்தில் இருசிற்பங்கள் அமர்ந்தவாறு உள்ளன.

T.குன்னத்தூரிலிருந்து அருங்குறுக்கை செல்லும் வழியில் திருக்கோயிலூருக்கு தென்கிழக்கே 15 கி.மீ தொலைவில் கொலவாடி என்ற ஊரின் தென்பகுதியில் துர்க்கை கோயில் என்று அழைக்கப்படுகின்ற இடத்தில் மண்ணில் புதைந்தவாறு பலகைக் கல்லில் நின்ற நிலையில் நிசும்பசூதனி என்று அழைக்கப்படும் துர்க்கையின் சிலைபுடைப்புச் சிற்பமாக எட்டுகைகளுடன் அமைந்துள்ளது. வல இட முன்கைகளைத்

தொங்கவிட்டும் பின்கைகளில் சக்கரம், நீண்டவாள், சங்கு, வில் மற்றும் கேடையம் கொண்டு காணப்படுகின்றது. இச்சிற்பமானது கழுத்து, கை, காதுகளில் அணிகலன்களுடன், மேலாடையின்றி இடுப்பில் ஆடையுடனும், குறுவாளுடனும், இச்சிலையின் இடது புறம் இடுப்புக்கு கீழ்காகம் உருவம் போன்ற சிற்பம் காணப்படுகின்றது.

கெடிலத்தின் இடது கரையிலிருந்து பெரும்பட்டு சாலையில் சுமார் 2 கி.மீ தொலைவில் பெரிய மாரனோடை உள்ளது. இவ்வூரில் உள்ள மாதாக்கோயில் முன்புறம் அய்யனார் மற்றும் காளியின் சிற்பங்கள் காணப்படுகின்றன. பலகைக்கல்லில் வீராசனத்தில் அமர்ந்தவாறு எட்டுகைகளுடன் காளியின்சிற்பம்காணப்படுகிறது. இச்சிற்பமானதுவலதுமுன்கை அரக்கனைக்குத்தியவாறும், பின்கையில்வாளும், இடது முன்கைத் தொடைமீது வைத்தவாறும், பின்கைகளில் சங்கு மற்றும் கேடயமும் கொண்டுக் காணப்படுகின்றது. மேலும் தலையில் ஜடா மண்டலமும், காது, கழுத்து, கைகளில் அணிகலன் களுடனும், மார்பில் பூ நூலுடனும், மேலாடையின்றி, இடுப்பில் ஆடையுடனும் காணப்படுகின்றது.

**அய்யனார்**



உளுந்தூர்பேட்டை வட்டாரத்தில் அய்யனார் சிற்பங்கள் அரளி, ஆத்தூர், மாரனோடை, நன்னாவரம், செம்ம னங்கூர், வடபெரும்பாக்கம் மற்றும் திடீர்குப்பம் போன்ற ஊர்களில் காணப்படுகிறது. உளுந்தூர்பேட்டை - திருவெண்ணைநல்லூர் சாலையில் உளுந்தூர் பேட்டைக்கு வடக்கே 6 கி.மீ தொலைவிலும் பாண்டூரிலிருந்து கிழக்கே 1 கி.மீ தொலை விலும் அரளி அமைந்துள்ளது. இவ்வூரின் நடுவேகோயிலினுள் உள்ள பலகைக்கல்லில் பழமைவாய்ந்த அய்யனார் சிற்பம் பொற்கலை மற்றும் பூரணி சிற்பங்களுடன் காணப்படுகிறது. இச்சிற்பம் தலையில் ஜடாமண்டலம், காதுகளில் சுருள் ஒலையும், கழுத்தில் அணிகலனும், மார்பில் பூநூலுடனும் மேலாடையின்றி இடுப்பில் ஆடையுடன் உத்குடிகாசனத்தில் வலதுகாலைத் தொங்கவிட்டும், இடது காலை மடக்கியவாறும் அமர்ந்தநிலையில் காணப்படுகின்றது. வலதுகையில் சாட்டையும், இடதுகை, இடது கால் மீதுவைத்தவாறும் உள்ளது. அய்யனார் சிற்பத்தின் வலது

புறம் பொற்கலை சிற்பம் சுகாசனத்தில் இடது காலைமடக்கியும், வலது காலைத் தொங்க விட்டும் அமர்ந்தவாறு தலையில் கரண்ட மகுடமுடனும், வலதுகையைத் தொங்கவிட்டும், இடது கையில் மலரும் கொண்டு காணப்படுகிறது. அய்யனார் சிற்பத்தின் இடதுபுறம் உள்ள பூரணியின் சிற்பம் அமர்ந்தவாறும், தலையில் கரண்ட மகுடமும், வலது கையில் மலருடனும், கழுத்தில் அணிகலனுடனும் உள்ளது. இச்சிற்பம் சற்று சிதைந்து காணப்படுகிறது.

உளுந்தூர்பேட்டைக்கு 6 கி.மீ தொலைவில் செம்மனங்கூர் உள்ளது. இவ்வூரிலிருந்துபுதூர் செல்லும் சாலையில் அய்யனார் கோயில் அமைந்துள்ளது. இங்கு பலகைக்கற்களில் தனித்தனியாக மூன்று சிற்பங்கள் காணப்படுகின்றன. அய்யனார் சிற்பமானது தலையில் விரிசடையுடனும், வலதுகை உடைந்தும், இடதுகைத் தொங்கவிட்டும், உக்குடிகாசனத்தில் அமர்ந்தவாறு வலது காலைத் தொங்கவிட்டும், இடது காலை மடக்கியும் காணப்படுகின்றது. மேலும்மார்பில் பூநூலுடனும், கழுத்து, கை மற்றும் கால்களில் அணிகலன்களுடன் காணப்படுகின்றது. அய்யனார் சிற்பத்தின் வலது மற்றும் இடது புறத்தின் முறையே பொற்கலை மற்றும் பூரணியின் சிற்பங்கள் அமர்ந்தவாறு வலது பக்கம் உள்ள சிற்பம் வலது காலைத் தொங்க விட்டும் இடது காலைமடக்கியும், வலதுகையைத் தொங்கவிட்டும், இடதுகையில் மலருடனும், இடது பக்கம் உள்ள சிற்பம் வலது காலை மடக்கியும், இடது காலைத் தொங்கவிட்டும், வலது கையில் மலரும், இடதுகையில் தொங்கவிட்டும், இருசிற்பங்களும் தலையில் கரண்டமகுடமும், கழுத்து, கைகள் மற்றும் கால்களில் அணிகலனுடனும், காதுகளில் குண்டலமும், மேலாடையின்றி, இடுப்பில் ஆடையுடன் காட்சியளிகின்றன.

பண்ருட்டியிலிருந்து 1 கி.மீ தொலைவில் திருவாமூர் -ஆமூர் சாலையின் மேற்கே திடீர் குப்பம் உள்ளது. அவ்வூரில் சுதையினாலான அய்யனார் சிற்பம் மீசையுடனும், பொற்கலை மற்றும் பூரணியின் சிற்பங்கள் காணப்படுகின்றன.



**அர்த்தநாரிஸ்வரர்சிற்பம்**

கெடிலம் ஆற்றின் இடது கரையில் பண்ருட்டிக்கு மேற்கேசுமார் 15 கி.மீ தொலைவிலும், திருநாவலு ரிலிருந்து 2 கி.மீ தொலைவில் பெரி யபட்டு காணப்படுகிறது. இவ்வூரின் தெற்கே

அரியவகை அர்த்தநாரீஸ்வரர் சிற்பம் சமபங்க நின்ற நிலையில் எட்டுகைகளுடனும், நான்கு தலையுடனும் காணப்படுகின்றது. மேலும் தலையில் கரண்டமகுடமும், கழுத்தில் அணிகலனுடனும், நீண்டகாதும், இடுப்பில் ஆடையுடனும், இடது பக்க மார்புடனும் உள்ளது.

**லிங்கம்**

உளுந்தூர் பேட்டை வட்டாரத்தில் லிங்கம் மற்றும் நந்தி சிற்பங்கள் கீழ்குப்பம் வேலூரின் மேற்கே தற்போது அழிந்த நிலையில் உள்ள மகிமை ராதீஸ்வரர் என்று அழைக்கப்படும் சிவன் கோயிலின் லிங்கமும் மற்றும் நந்தியும் ஆலமரத்தின் கீழ் உள்ளது, மேலும் ஆதனூரிலும் லிங்கம் காணப்படுகின்றது. உளுந்தூர் பேட்டையிலிருந்து வடமேற்கே சுமார் 12 கி.மீ தொலைவில் சேஷா நதியின் இடது கரையில் ஆதனூர் அமைந்துள்ளது. இவ்வூரில் உள்ள சிவன் கோயிலின் பின்புறம் சிவலிங்கமும், நந்தியும் காணப்படுகின்றன. சிவலிங்கம் சதுர வடிவ ஆவுடையார் அமைப்பில் உள்ளது. இவை அரிதான வடிவமாகும். லிங்கத்தின் எதிரில் நின்ற நிலையில் (9.1) நந்தியின் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் முகத்தில் கயிறும், கழுத்தில் மணியும் கொண்டுக் காணப்படுகிறது.

**பெண்தெய்வம்**

பெரியமாரனோடையில் அய்யனார் கோயிலில் பலகைக்கல்லில் பெண் உருவ புடைப்பு சிற்பம் தலையில் ஜடாபந்தமும், நீண்டகாதும், கழுத்தில் அணிகலனும் கொண்டு மேலாடையின்றி, இடுப்பில் ஆடையுடன் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் வலது கையில் மலரும்?, இடது கைத்தொடையில் வைத்த வாறும், வலது காலைத் தொங்கவிட்டும், இடது காலை மடக்கியவாறு அமர்ந்த (சுகாசனம்) நிலையில்உ ள்ளது.

**ஆண் பெண்**



உளுந்தூர்பேட்டை - வெண்ணை நல்லூர் சாலையில் உளுந்தூர் பேட்டையிலிருந்து 5 கி.மீ தொலைவில் பாண்டூர் உள்ளது. இவ்வூரின் ஏரிக்கு அருகே உள்ள கோயிலில் பலகைக்கல்லில் ஆண் மற்றும் பெண் சிற்பங்கள் காணப்படுகின்றன. இதில் ஆண் சிற்பமானது நேராக நின்ற நிலையில் தலையில் கொண்டையுடனும், கழுத்து,

கை, கால்களில் அணிகலன்களுடனும், நீண்டகாதுடனும் காணப்படுகிறது. மேலும் வலதுகையில் அம்பும் இடதுகையில் வில்லும், இடுப்பில் ஆடையுடனும் காணப்படுகிறது. ஆண் சிற்பத்திற்கு வலதுபுறத்தில் பெண்சிலை சற்றுவலைந்து திரிபங்க நிலையில், தலையில் வலது பக்கம் கொண்டையுடன் காணப்படுகிறது. இச்சிற்பமானது வலதுகையில் மலரும், இடதுகையைத் தொங்கவிட்டும், மேலாடையின்றி கீழாடையுடன் காணப்படுகிறது. மேலும் அவ்விடத்தில் அமர்ந்த நிலையில் பெண்சிற்பம் தலை உடைந்து காணப்படுகின்றது, வலதுகாலைத் தொங்கவிட்டும், இடது காலைமடக்கியும், கழுத்து, கை, கால்களில் அணிகலன்களுடனும், மேலாடையின்றி கீழாடையுடன் காணப்படுகின்றது.

**வீரன்**



உளுந்தூர் பேட்டை வாட்டாரத்தில் வீரனின் சிற்பங்கள் ஊர்களில் காணப்படுகின்றன. அவ்வூர்களாவன ஆதனூர், மாரனோடை மற்றும் நன்னாவரம் போன்றவைகளாகும். இவ்வூர்களில் காணப்படும்வீரனின் சிற்பங்கள் நேராக நின்ற நிலையில், தலைக்கு மேல்கொண்டையுடனும், கைகளில் நீண்டவாள் மற்றும் கேடையம், கழுத்து, கைமற்றும் கால்களில் அணிகலன்களுடனும், மார்பில் பூநூலுடனும்,மேலாடையின்றி கீழாடையுடன் காணப்படுகின்றன. மேலும் ஒருசிலவீரனின் சிற்பங்கள் பலகைக்கல்லில் தலையில் விரி சடை மற்றும் கிரீடமுடன், சற்றுசாய்ந்து நின்ற நிலையிலும், மீசையுடனும், கையில்கதையுடனும், இடுப்பில் குறுவாளுடனும் காணப்படுகின்றது. ஆதனூரில் 2 ஆண் சிற்பங்களும், பெண்சிற்பமும் காணப்படுகின்றன. இவை கோயில் கட்டிய வர்களின் சிற்பங்காளக இருக்கலாம். ஆண்சிற்பங்கள் நேராக நின்ற நிலையில்தலைப்பாகையுடனும்?, கழுத்து, காது, மற்றும் கைகளில் அணிகலன்களுனும், கைகும்பிட்டவாறும், இடுப்பில் ஆடை மற்றும் குறுவாளுடனும் காணப்படுகின்றது. பெண் சிற்பமானது தலையில் இடதுபக்கம் கொண்டையும், காதில்சுருள்ஓலையும்?, கழுத்து மற்றும் கையில் அணிகலனுடனும், மேலாடையின்றி இடுப்பிலிருந்து கீழாடையுடனும் காணப்படுகிறது.

**கி.தேவிஸ்ரீ ,தஞ்சாவூர்**

## 78:10 காஞ்சிபுரம், திருவள்ளூர் வட்டார புதிய கண்டுபிடிப்புகள்

### மதகு அளவுகோல்

**கா**ஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டம் மதுராந்தகம் ஏரியில் அமைந்துள்ள மதகில் அளவுகளுடன் கூடிய தூண்கள் கானப்படுகிறது மேலும் இந்த அளவுகோல் நீரின் அளவை குறிக்கப் பயன்பட்டிருக்கலாம். இவ்வளவுகோல் *10* ஆம் நூற்றாண்டுச் சேர்ந்ததாகும். ஏரியின் நீர் வரத்தை இருப்பின் அளவைக் குறிக்கும் வகையில் இந்த அளவுகோல் வடிவமைக்கப்பட்டு நிறுவப்பட்டுள்ளது இந்த அளவுகோலில் எண்களுக்கு பதிலாக தமிழ் எண்களை குறிக்கும் தமிழ் எழுத்துக்களை பயன்படுத்தியுள்ளனர் அவை முறையே கிழிருந்து மேலாக *5, 6, 7.8,9,10*, ஆகும் அவற்றுடன் மேல் பகுதியில் தமிழில் பெதுவாக எனத் தொடங்கும் சொல் சிதைந்த நிலையில் உள்ளது.

### தூங்கு தலை



திருவள்ளூர் மாவட்டத்தில் பொன்னேரி வட்டத்தில் பொன்னேரிக்கு அருகில் திருப்பாலைவனம் அமைந்துள்ளது. இவ்வூர்ன் கிழக்கே உள்ள அம்மன் கோயில் முன்பு நடுகல் ஒன்றை மக்கள் பீடத்தின் மீது வைத்து வழிப்படுகின்றனர் இந்த நடுகல் பொ.ஆ. *17-18*-ம் நூற்றாண்டைச் சார்ந்தது. இவ்வீரனின் தலையில் உள்ள கொண்டை அமைதியும் அவனது உடைகள் அமைப்பும் இதை உறுதிப்படுத்துகிறது. வீரனின் வலது கையிலுள்ள கத்தியை அவன் கழுத்தில் வைத்து தன்னைத் தானே பலி இடத்தக்கவாறும் மற்றொரு இடது கையில் உள்ள கத்தி தரையில் ஊன்றியவாறும் வடிவமைக்கப்பட்டுள்ளது. வீரனின் கால்களும் இடது கால் நேராகவும் வலது கால் இடது காலை நோக்கியவாறும் அமைக்கப்பட்டுள்ளது இவ்வீரனின் அனைத்து வகையாக ஆபரணங்களையும் காட்டியுள்ளனர். பலி பீடம் ஒன்றும் அருகில் உள்ளது.

### நவகண்டம்

இவ்வூரிலுள்ள திருப்பாலை வனேஸ்வரர் திருக்கோயிலின் வெளிப் பிராகாரத்தில் இடதுப்புறம் பாலை மரத்தின் கீழே ஒரு பலகையில் புடைப்புச் சிற்பமாக வீரன் ஒருவன் தனது இடது கையால் தலை கொண்டையை பிடித்து கொணடு வலது கையில்



உள்ள வாளில் தன் தலையை அரிந்து கொள்வது போன்று காணப்படுகிறது. (தூங்குதலைச்சிற்பம்) வீரனின் முழு சிற்பமும் இல்லை அவனது முட்டி வரையில் காணப்படுகிறது. இச்சிற்பம் ஆடை அணிந்தும் அணிகலன்கள் குறைவாகவும் காட்டப்பட்டுள்ளது.

**விஷ்னு துர்க்கை**

திருப்பாலைவனம் கோயிலுக்கு மேற்கே உள்ள காஞ்சிவாயில் என்ற ஊரின் ஏரிக்கரையில் இந்த சிலை உள்ளது. இங்குள்ள மக்கள் இச்சிலையை முத்தாரம்மன் என்று வழிபடுகின்றனர். இச்சிலை சுமார் 3 அடி உயரம் கொண்டது நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளது. மேற்கரங்களில் இடது கரத்தில் சங்கும், வலது கரத்தில் சக்கரமும் கீழ்கரங்களில் இடது கரமானது ஊரு அஸ்த்திலும் வலது கரம் அபய அஸ்த்திலும் காணப்படுகிறது. இச்சிற்பம் இங்குள்ள ஏரியில் இருந்து கிடைத்ததாக இவ்வூர் மக்கள் தெரிவித்தனர் ஒரு சிறு கோயில் அமைத்து வழிபடுகின்றனர்



**பிட்ஷாடணர்**

இந்த சிற்பம் திருபாலைவினத்திற்கும் காஞ்சிவாயில் ஊரிற்கும் உள்ள வயல்வெளியில் காணப்படுகிறது. இச்சிற்பம் முட்டி அளவுடன் பிற பகுதிகள் உடைந்த நிலையில் நான்கு கரத்துடன் காட்சியளிக்கிறது.

**இரா.சுபாஷனி,சென்னை**

## 78:11 சிலுவத்தூர் வீரக்கல்



**தி**ண்டுக்கல் மாவட்டம், திண்டுக்கல் வட்டம் சிலுவத்தூரில் விநாயகர் கோவிலுக்கு அருகில் திறந்த வெளியில் *3.1/2* அடி உயரமும் *2* அடி அகலமும் உடைய வீரக்கல் தேய்ந்த நிலையில் உள்ளது. இச்சிற்பத்தின் ஆடை, அணிகலன்கள் பிற அணிகலன்கள் தெளிவர காண இயலவில்லை. நீண்ட ஈட்டியைக் கையில் பெற்றிருக்கும் இச்சிற்பம் 'கள்ளப்பன்' என்று இவ்வூர் மக்களால் கிராம காவல் தெய்வமாக இன்றளவும் வழிபடப்படுகிறது. இவ்வீரக்கல் போன்றே காணப்பாடி எனும் ஊரிலும், தெற்கில் அமைந்துள்ள வடமதுரை முதல் சிறுமலை வரையிலும் ஏழு வீரகற்கள் நடப்பட்டுள்ளதாக இக்கோயிலின் பூசாரி கூறுகிறார் அதன்படி கள ஆய்வு மெற்கொண்டதன் விளைவாக காணப்பாடி, சிலுவத்தூர், ராகலாபுரம், சானார்பட்டி, சிறுமலை ஆகிய ஊர்களில் இதே போன்று *7* நடுகற்கள் இன்றளவும் வழிபாட்டில் உள்ளன.

**ஆ.ஞானசேகரன்,போடிநாயக்கனூர்**

## 78:12 தலைபலி



**நா**கப்பட்டினம் மாவட்டம், நாகப்பட்டினம் வட்டம் திருப்புகளூரில் தலைபலி சிற்பங்கள் இரண்டு உள்ளன. இந்த சிற்பங்கள் திருப்புகளூர் அக்னிஸ்வரர் கோயில் செல்லும் வழியில் உள்ள குதிரைக்குட்டி பாசன வாய்க்காலின் கிழக்கு மதகில் தெற்கு நோக்கி உள்ளது. முதல் சிற்பம் பலகைகல்லில் புடைப்பு சிற்பமாக உள்ளது. இதன்உயரம் *69* செ.மீ , அகலம் *36* செ.மீ ஆகும். முகம் மற்றும் தலை சிதைந்துள்ள துகை, கழுத்து, கால்களில் அணிகலன்கள் உள்ளன. இரண்டுகைகளில் வலதுகையில் வாளைக் கொண்டு கழுத்தை வெட்டியவாரும், இடது கையில் உள்ள வாளை முன்பக்கம் ஊன்றியவாரும், தொடைவரை ஆடையுடன் காணப்படுகிறது.இரண்டாவது

சிற்பம் பலகை கல்லில் புடைப்பு சிற்பமாக உள்ளது. இதன் உயரம் 74 செ.மீ, அகலம் 27 செ.மீ உள்ளது. தலையில் கொண்டையுடனும், நீண்ட காதுகளுடனும் காணப்படுகின்றது. கை, கழுத்து, கால்களில் அணிகலன்கள் மற்றும் தொடைவரை ஆடையுடன் காணப்படுகின்றது. இரண்டு கைகளில் வலது கையில் வாளைக் கொண்டு கழுத்தை வெட்டியவாரும், இடது கையில் தலைமுடியை பிடித்தவாரும் நின்ற நிலையில் உள்ளது. இவ்விருசிற்பங்களும் பொ.ஆ.14,15ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

**இரா.கார்த்திகேயன்,** ஒரத்தநாடு.
**செ.ஞானகுரு,** வலங்கமான்.

## 78:13 தாளவாடி நடுகல்

**ச**த்திய மங்கலம் தாளவாடியில் போர் வீரர் நினைவு நடுகல் ஒன்று உள்ளது . அதில் 2 நிலைகளில் சிற்பங்கள் பொறிக்கப்பட்டுள்ளது. மூன்று நிலை நடுகல்லான இதன் மேல் பகுதி உடைந்து சிதைந்துள்ளது. கீழ் அடுக்கில் 3 போர் வீரர்கள் வலது கையில் வாளும், இடது கையில் கேடயமும் வைத்து போர் புரிகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அருகில் வாள் மற்றும் வில்லுடன் சிறிய அளவில் மூன்று போர் வீரர்களும் காட்டப்பட்டுள்ளனர். மேல் நிலையில் போரில் மூன்று இறந்த வீரர்களையும் தேவகன்னிகள் விண்ணுலகத்துக்கு அழைத்து செல்வது போல் அழகான சிற்பம் பொறிக்கப்பட்டுள்ளது.



**எஸ்.ஜான்பீட்டர்,** சேலம்.
**பி.சக்தி பிரகாஷ்,** ஈரோடு.
**வி.ஏ.வேலுசாமி,** சென்னை.
**கே.சீனிவாசன்,** ஓமலூர்.

## 78:14 கொங்குப் பகுதியில் புதிய கண்டுபிடிப்புகள்

### கண்ணாடிப்புத்தூர்–புலிகுத்திக்கல்

கண்ணாடிப்புத்தூரில் ஒரு புலிகுத்திக்கல் கற்குவியலுக்கிடையில் உள்ளது. வீரன் ஒருவன் புலியைக்குத்திக் கொல்லும் தோற்றத்தில் அச்சிற்பம் அமைந்துள்ளது. வீரன் தன் இரு கைகளிலும் உள்ள ஆயுதங்களைக் கொண்டு தாக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளது. ஆயுதங்கள் குறுவாள்கள் ஆகலாம். நீண்ட நாள்களாக எண்ணெய் பூசப்பட்டு வருவதால் சிற்பத்தின் கூறுகளை அறியமுடியவில்லை. புலி நின்ற நிலையில் உள்ளது.

### ஜமீன் காளியாபுரம் நடுகல்

பொள்ளாச்சி வட்டத்தில் அமைந்துள்ள ஜமீன் காளியாபுரம் உள்ள வனபத்திரகாளியம்மன் கோயிலுக்கு அருகில் மரத்தடியில் மேற்சொன்ன நடுகல் சிற்பம் காணப்படுகிறது. சற்றேறக்குறைய மூன்றடி உயரமுள்ள சிறியதொரு புடைப்புச் சிற்பத்தில் ஆணும் பெண்ணும் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளனர். ஆணின் இடப்பக்கத்தில் பெண் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. ஆண், பெண் இருவர் தலைமுடிகளும் கொண்டையுடன் காணப்படுகின்றன. ஆணின் கொண்டையைவிடப் பெண்ணின் கொண்டை பெரிதாயுள்ளது. ஆணின் கொண்டை உயரத்தூக்கி இடது உச்சியில் நின்றவாறும், பெண்ணின் கொண்டை தலையின் இடதுபக்கம் சரிந்தவாறும் காணப்படுகின்றன. இருவருக்கும் காதணிகளும், கழுத்தணிகளும் உள்ளன. கைகளில் தடித்த வளைகள் உள்ளன. ஆணின் இடையில் மடிப்புக்கட்டுகளுடன் கூடிய ஆடை கணுக்கால் வரை காணப்படுகிறது. கல் கீழ்ப்பகுதியில் சிதைந்துள்ளது.ஆணின் வலப்பக்கத்தில் ஒரு வாள் காணப்படுகிறது. பெண்ணின் கைகளில் தோன்றும் பொருள் இன்னதென்று காணுமாறில்லை. இது குறக்கூடை என வழங்கப்படும் கூடையாக இருக்கலாம்.



### காடையூர் தாய்க்கல்

திருப்பூர் மாவட்டம், காங்கயம் வட்டத்தில் காடையூர் அருகிலுள்ள முத்துக்காளிவலசில் சாலையோரத்தில் உள்ள மரத்தடியில் மேடையின்மீது ஒரு புடைப்புச் சிற்பமும் சிற்ப வேலைப்பாடு ஏதுமற்ற ஒரு சிறிய குத்துக்கல்லும் பதிக்கப்பட்டுள்ளன. புடைப்புச் சிற்பத்தில் பெண் ஒருவர்

குழந்தையை இடப்பக்க இடுப்பில் குழந்தையைச் சுமந்தவாறு காணப்படுகிறாள். குழந்தை தன் ஒருகையால் தாயின் மார்பகத்தையும், மறு கையால் தாயின் முடியையும் பற்றிக்கொண்ட நிலையில் காணப்படுகிறது. பெண்ணின் இருபுறமும் இரண்டு காளைமாட்டின் உருவங்கள் வடிக்கப்பட்டுள்ளன. வலப்பக்கம் உள்ள மாட்டின் உருவம் சற்றே தெளிவாகவும்,இடப்பக்கம் உள்ள மாட்டின் உருவம் தெளிவற்ற நிலையிலும் காணப்படுகின்றன. பெண்ணின் இடையாடை கணுக்கால் வரை உள்ளது. மேலாடை அணிந்திருக்கவில்லை. பெண்ணின் தலைமுடி இடப்புறம் கொண்டையிட்டவாறுள்ளது. கழுத்தில் அணிகலன் ஒன்றும், சற்றே நீண்ட செவிகளில் பெருத்த சுருள் வடிவிலான தோடும், காணப்படுகின்றன. தோளிலும் முன்கைகளிலும் வளைகள் அணிந்திருக்கிறாள். குழந்தையின் உருவம் கொழுமையாய் இல்லாமல் சற்றுப் பெரிய உருவமாக வடிக்கப்பட்டுள்ளது. மொத்தத்தில், சிற்பமானது அழகிலும், வடிவ நேர்த்தியிலும் குறைவுபட்ட் தோற்றத்தையே அளிக்கிறது. ஊரார் இச்சிற்பத்தை அழகாத்தம்மன் என்னும் பெயரிட்டு வழிபடுகிறார்கள். மாடுகள் முட்டிக்குத்திய நிகழ்ச்சியில் இப்பெண் இறந்துபோனதாகவும், குழந்தை மட்டிலும் பிழைத்துக்கொண்டதாகவும் மக்கள் செவிவழிச் செய்தியாகக் கூறிவருகின்றனர்.



**ஆச்சிப்பட்டி நடுகற்களும் சிற்பங்களும்**

கோவை-பொள்ளாச்சி சாலையில் ஆச்சிப்பட்டி என்னும் கிராமத்தில் அமைந்துள்ள கல்யாண வெங்கடேசப் பெருமாள் கோயிலின் புறச் சுவரையொட்டி இரண்டு பெரிய பலகைக் கற்களில் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. ஒன்றில், நடுவில் ஓர் ஆண் சிற்பமும், ஆனுக்கு இருபுறமும் இரு பெண்களின் சிற்பங்களும் உள்ளன. ஆணின் உருவம், ஒரு தலைவனின் சிற்பம் என்று கருதுமாறு அமைந்துள்ளது. நெற்றிக்கு மேலே தலையில், அலங்கரித்த தலைப்பாகை. தலைமுடியை உயரத்தூக்கிச் சற்றே



இடப்புறமாய்ச் சாய்த்து முடித்த தலைப்பாகை. கழுத்தை ஒட்டிய (முத்து)மாலைகளும், மார்பு வரை தொங்கும் ஆரங்களும் அணிகலன்களாக விளங்குகின்றன. தோளிலும், முன்கைகளிலும் வளைகள் உள்ளன. செவிகளிலும் குழைகள் உள்ளன. இடது கை இடையில் வைக்கப்பட்டுள்ளது. வலது கை, தோளை நோக்கி மடக்கியநிலையில், வலப்புறமுள்ள பெண்ணிடமிருந்து எதையோ பெற்றுக்கொள்வது போலத் தோன்றுகிறது. இரு பெண்களின் தலைமுடியும் முடியப்பட்டு வலப்புறமாகக் கொண்டையிட்ட தோற்த்தில் உள்ளன. பெண்களும், செவிகள், கைகள், மார்பு ஆகிய பகுதிகளில் அணிகலன்களை அணிந்துள்ளனர். ஆணின் வலப்புறமுள்ள பெண்ணின் இடது கை உயரத்தூக்கிய நிலையில் உள்ளது. இடப்புறமுள்ள பெண் தன் வலதுகையில் ஒரு மதுக்குடுவையை ஏந்தியிருக்கிறாள். இன்னொரு கையில் என்ன பொருள் உள்ளது எனப் புலப்படவில்லை. மூன்று சிற்பங்களின் தலைப்பகுதிக்கு மேல், கல்லின் விளிம்புகளில் தோரணம் போன்றதொரு பூ வேலைப்பாடு காணப்படுகிறது. இது சதிகல்லாகும்.

அருகில் உள்ள இன்னொரு பலகைக் கல்லில் நான்கு உருவங்கள் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன. ஆனால், இவை தலைப்பகுதி வர மட்டுமே வெளியில் தெரிகின்றன. மீதிப்பகுதி முழுதும் தரைக்குக் கீழ் புதைந்துள்ளன. இவை பாளையக்காரர்கள் காலத்தைச் சேர்ந்தவை.

இக்கோயிலின் முன் மண்டபத்தில், அர்த்தமண்டபத்தின் நுழைவாசலுக்கு இடப்புறம், இரு கற்சிலைகள் காணப்படுகின்றன. கைகள் கூப்பிய நிலையில் இரு ஆண்களின் சிற்பங்கள். கொண்டையுடன் கூடிய இருவரும் மார்பு, தோள், கைகள், செவிகள் ஆகிய இடங்களில் அணிகலன்களைச் சூடியுள்ளனர். இடைக்கச்சில் குறுவாளோடு காட்சி தரும் இருவரின் ஆடைகள் மடிப்புடன் பாதம் வரையில் உள்ளன. சிற்பங்களின் பீடப்பகுதியில், ”திம்மண கவுண்டர்” என்றும் “அமண கவுண்டர்” என்றும் பொறிக்கப்பட்ட எழுத்துகள் காணப்படுகின்றன. எழுத்துகள், பிற்கால எழுத்துகளாக உள்ளன.

**போத்தம்பாளையம் நினைவுக்கல்**

அவிநாசி-கோபி சாலையில் நம்பியூருக்கும் சேவூருக்கும் இடையில் அமைந்திருக்கும் போத்தம்பாளையம் ஊரிலுள்ள வேணுகோபாலசாமி கோயிலில், முன்மண்டபத்தில் அர்த்தமண்டப வாயிலின் வலப்புறமாக, வடக்கு நோக்கிய நிலையில் ஆண் பெண் உருவங்களுடன் காணப்படுகிறது.



ஆணின் சிற்பத்தில், ஆணின் வலக்கையில் சேகண்டி எனப்படும் இசைக்கருவியும், இடக்கையில் சங்கும் காணப்படுகின்றன. பெண் சிற்பம், இரு கைகளைக் கூப்பி வணங்கும் நிலையில் காணப்படுகிறது. ஆண், பெண் இருவரும் கழுத்து, கைகள், கால்கள் ஆகியவற்றில் அணிகலன்கள் பூண்டிருக்கிறார்கள். இருவருமே கால்கள் வரை ஆடை அணிந்துள்ளனர். ஆடை மடிப்புகள் கோடுகளால் புலப்படும்படி செதுக்கப்பட்டுள்ளது. இருவரின் கால்களுக்கு நடுவில் அமைந்த இடைவெளியில், ஒரு காளை மாட்டுச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. சிற்பத்தின் காலம் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கொள் ளலாம்.

**நெகமம்பட்டணத்து நடுகற்கள்**

கோவைக்கருகில் கிணத்துக்கடவுப்பகுதியில், நெகமம் பட்டணத்தில், சாலைப்பணியின்போது இரு சிற்பங்கள் தோண்டியெடுக்கப்பட்டன. முதல் சிற்பத்தில் எழுத்துகள் காணப்பட்டன. ஆனால், மிகவும் தேய்ந்து போன நிலையில் எழுத்துகள படிக்க இயலவில்லை. சிற்பத்தின் நடுவில் ஓர் ஆண்மகனும், அவனது இருபுறங்களிலும் இரு பெண்டிரும், வலது ஓரத்தில் உருவத்தில் சிறிய மற்றொரு பெண்ணும் காணப்படுகின்றனர். ஆணின் பின்புறம் வேல் போன்றதொரு ஆயுதம் காணப்படுகிறது. ஆண் கைகள் கூப்பி நிற்பது போல் உள்ளது. இடப்புறம் உள்ள பெண் தன் இரு கைகளையும் உயர்த்தியவாறும், கைகளில் எவற்றையோ ஏந்தியவாறும் காணப்படுகிறாள். வலப்புறம் உள்ள பெண் தன் கையொன்றை மடக்கியவாறு ஒரு மதுக்குடுவையை ஏந்தி நிற்கிறாள். வீரர்களுக்கு எடுக்கப்பட்ட நடுகல்லில் மதுக்குடுவை பெரும்பாலும் காணப்படுவது இயல்பு. ஆண் சிற்பத்தில் முழங்கால் வரை ஆடைக்கட்டும், பெண்களின் சிற்பங்களில் கணுக்கால் வரை ஆடைக்கட்டும் காணப்படுகின்றன. எழுத்துப் பொறிப்பேதுமில்லாத மற்றொரு நடுகல் சிற்பத்திலும், முதல் நடுகல் போலவே ஓர் ஆணும், இரு பெண்களும் முதன்மையாகக்



காணப்படுகின்றனர் உருவங்கள் சற்றே சிதைந்துள்ளன. இவை யாவும் சதிக்கற்களாகும்.

**பனியம்பள்ளி நடுகல்**

திருப்பூர் மாவட்டம் ஊத்துக்குளியின் அருகில் பனியம்பள்ளியில் இரு கல்திட்டைகள் காணப்படுகின்றன. முதல் கல்திட்டை சாய்ந்த நிலையில் இணைந்த இரண்டு பலகைக் கற்களும், அதன் மேல் மூடு கல்லும் உள்ளன. மூன்றாவது பக்கக் கல் ஒழுங்கற்ற நிலையிலும் உள்ளது. இரண்டாவது கல்திட்டையின் பாறைக்கற்கள் சாய்ந்த நிலையில் காணப்படுகின்றன. நான்காவது பக்கத்தைச் சிறு சிறு வேப்ப மரங்களும் புதர்ச் செடிகளும் மூடியுள்ளது. கலைந்துபோன நிலையில் கல்திட்டை. கல்திட்டைக்குள் ஒரு நடுகல் சிற்பம் காணப்படுகிறது. ஆண் உருவம் ஒன்றும், பெண் உருவம் ஒன்றும் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்ட நடுகல் சிற்பம் அழகான தோற்றம் கொண்டுள்ளது. ஆணின் உருவம், இடப்புறமாகக் கொண்டை முடிந்து, மீசையுடன் காணப்படுகிறது. செவிகளிலும், மார்பிலும் அணிகலன்கள் உள்ளன. கைகளிலும் தோளிலும் வளைகள் உள்ளன. இடையில் ஆடைக்கச்சு உள்ளது. வலது கையில் ஒரு நீண்ட வாளினைத் தரையில் ஊன்றியவாறு வீரன் நிற்கிறான். அவனது இடையிலும் ஒரு குறுவாள் காணப்படுகிறது. அவனது இடது கை தொங்கிய நிலையில் காணப்படுகிறது. விரல்களில் மோதிரங்கள் தெரிகின்றன. பெண்ணின் உருவம் வலப்புறமாகக் கொண்டை முடிந்து தலையில் அணிகலன்களோடு காணப்படுகிறது. கழுத்திலும் இடையிலும் அணிகலன்கள் உள்ளன. கைகளில் வளைகள் உள்ளன. கைகளில் எதையும் ஏந்தியிருப்பதாகத் தெரியவில்லை. வலது கையை மடக்கியவாறு உயர்த்தியும், இடதுகையை நேராகத் தொங்கவிட்டும் நிற்கிறாள். இடையாடை கீழே கால்வரை காணப்படுகிறது. கால்களில் கழல்கள் உள்ளன. வீரனுக்கு மட்டும் எடுக்கப்பட்ட நடுகல்லாக இருப்பின் பெண்ணின் கைகளில் மதுக்குடுவை ஒன்று காணப்படுவது வழக்கம். இங்கு அவ்வாறில்லாமல் ஆண், பெண் இருவர் சிற்பங்கள் ஒன்றாகக் காணப்படுவதால், இது ஒரு சதிக்கல்லாக இருக்கக்கூடும். அல்லது மனைவியோடு காட்டப்பெற்ற வீரனின் நடுகல்லாக இருக்கக்கூடும்.



இரண்டாம் கல்திட்டையிலும் நான்குபுறமும் பலகைக்கல் சுவர்களும், முன்புறம் திறப்பு வாயிலும் உள்ளன. இங்கும் ஒரு நடுகல் சிற்பம் உள்ளது. அது வெளிப்புறத்தில் சாய்க்கப்பட்ட நிலையில் வைக்கப்பட்டுள்ளது. இதிலும் ஆண், பெண் உருவங்கள் உள்ளன. உருவங்கள் தெளிவாக இல்லை. ஆடை, அணிகள் புலப்படுகின்றன. பெண்ணின் இடப்புறம் காலடியில் ஒரு சிறிய மனித உருவம்போல் தோன்றுகிறது.

**மாடுகட்டிப்பாளையம் பெருங்கற்காலச் சின்னங்கள்**



பனியம்பள்ளியை அடுத்துள்ள மாடுகட்டி ப்பாளையத்தில் தனியார் நிலத்தில் ஐந்து கல்வட்டங்கள் காணப்படுகின்றன. மூன்று கல்வட்டங்கள் நல்ல நிலையிலும், ஒரு கல்வட்டம் அரைவட்டப்பகுதியாகச் சிதைவுற்றும், மற்றொன்று கற்கள் சிதறிய நிலையிலும் உள்ளன.

**பெள்ளாதி கல்லறை, பன்றி குத்திப்பட்டான் கல்**

கோவை மாவட்டம் காரமடைக்கருகில் பெள்ளாதி ஊரின் ஓடைக்கரையை ஒட்டித் துளசி மாட வடிவில் கல்லால் செய்யப்பட்ட கல்லறை ஒன்று காணப்படுகிறது. இது மூன்று பகுதியுடைய இக்கல்லறை முதல் பகுதி, தூணின் அடித்தளக்கல். எவ்வித வேலைப்பாடும் இன்றி ஒரு பீடத்தின் பணியை மட்டுமே செய்யும் வகையில் கரடு முரடாகக் காணப்பட்டது. இரண்டாவது பகுதி, இந்தப் பீடத்தின் மேல் நிறுத்தியது போன்ற அமைப்பில் வேலைப்பாடுகளுடன் கூடிய அழகான நடுப்பகுதி. இதில், கீழே சிறிதளவு, கோயிலின் அதிட்டானத்தைப் போன்றதோர் வேலைப்பாடு காணப்படுகிறது. அடுத்துள்ள பெரிய பரப்பில் கோயிலின் தேவகோட்டத்தைப் போன்ற ஒரு கோட்டத்தில், கையில் வெண்ணை உருண்டையை வைத்துக்கொண்டிருக்கும் குழந்தைக்கண்ணன், குழலூதும் கண்ணன், காளிங்கப் பாம்பின் தலையில் தன் வலக்காலை வைத்து ஆடுகின்ற கண்ணன், இரு பக்கங்களிலும் இரு யானைகள் சூழ்ந்தவாறுள்ள திருமகள் என முழுச் சிற்பங்கள் காணப்படுகின்றன. மூன்றாவது பகுதியாக, கோயிலின் கூரைப்பகுதியில் காணப்படும் கர்ண கூடுகளை ஒத்த அமைப்பு உள்ளது. அதன்மேற்பகுதியில், கோயில் விமானத்தின் கிரீவப்பகுதியில் காணப்படும் சிற்பங்களைப் போன்று சிற்பங்கள்.

ஒரு பக்கம், வராகம், கூர்மம், மீனம் ஆகிய தசாவதாரச் சிற்பங்கள். மற்றொரு பக்கத்தில், சங்கு-சக்கரம். இன்னொரு புறம் இராம, நரசிம்ம, வாமன அவதாரச் சிற்பங்கள். துளசிமாட வடிவில் உள்ள இந்த அமைப்பு கல்லறையாக இருக்கலாம்

இவ்வூரில் உள்ள தர்மராஜா கோயில் வளாக வேப்பமரத்தின் அடியில் பன்றிகுத்திக்கல் சிற்பம் ஒன்று தரையில் பதிக்கப்பட்டுள்ளது. சிற்பத்தின் மீது எண்ணெய் பூசி வழிபடப்பட்டு வந்தாலும் சிற்பத்தின் உருவம் ஓரளவு தெளிவாகவே உள்ளது. இடப்புறமாகக் கொண்டை உள்ளது. நீண்ட செவிகள் உள்ளன. தோள் வளையும், முன்கை வளையும் புலப்படுகின்றன. கழுத்தில் மாலைகள் உள்ளன. இடை யாடைக்கச்சில் குறுவாள் காணப்படுகிறது. பன்றியின் வாய்ப்பகுதியும், கால்களும் நன்கு புலப்படுகின்றன. வீரன் கையில் ஒரு பெரிய வாளைக் கொண்டு பன்றியைக் குத்துகிறான்.



**உக்கடம் புலிகுத்திக்கல்**

கோவை உக்கடம் பகுதியில் அமைந்துள்ள வாலாங்குளத்தின் தென்கரையை ஒட்டியுள்ள புறவழிச்சாலையில தென்கரைச் சரிவில் கீழிறங்கிச் சென்றதும் ஒரு சிறிய திடலில் ஒரு பெரிய அரசமரத்தடியில் புலிகுத்திக்கல் உள்ளது. ஏறத்தாழ நாலரை அடி உயரத்தில் மூன்றடி அகலத்தில் முக்காலடிப் பருமன் கொண்ட தடித்த பலகைக்கல்லில் வடிக்கப்பட்டிருந்த புலிகுத்திக்கல்லின் பலகைக்கல் இரு அடுக்குகளாகப் பிரிக்கப்பட்டு கீழடுக்கில், வீரன் ஒருவன் ஈட்டியால் புலியைக் குத்திக்கொண்டிருப்பதுபோல் ஒரு சிற்பமும், மேலடுக்கில், இரண்டு பெண்கள் கைகளைக் கூப்பி வணங்கிய நிலையில் நின்றுகொண்டிருக்கும் சிற்பமும் கணப்படுகின்றன.வீரனின் முகம் முன்புறம் நோக்கியவாறும் கால்களின் நிலை முன்புற நோக்கில்



இல்லாமல் பக்கவாட்டில் புலியை எதிர்கொள்ளும் கோணத்திலும் உள்ளது. வீரன் தன் தலை முடியை அவனது வலப்புறத்தில் கொண்டையாக முடிந்துள்ளான். செவிகளில் காதணிகள் உள்ளன. கால்களில் கழல் அணிந்திருப்பதாகக் காணப்படுகிறது. இடையில் அரையாடை அணிந்துள்ளான். இடைக்கச்சில் குறுவாள் காணப்படுகிறது. கீழாடை முழங்கால் வரை உள்ளது. எதிரில் புலியின் உருவம், அவனது உயரத்துக்குச் சமமாகத் தன் பின்னங்கால்களைத் தரையில் ஊன்றி நின்று, முன்னங்கால்களால் வீரனைத் தாக்கியவாறு காணப்படுகிறது. புலியின் வால் மேல்புறமாக உயர்த்திய நிலையில் உள்ளது. புலியின் உடல் நீளமாகக் காணப்படாததும், அதன் தலை சற்றுப் பெரிதாகக் காணப்படுகிறது. மேலடுக்கில், பெண்கள் இருவரும் தங்கள் தலை முடியை இடப்புறமாக முடிந்திருக்கின்றனர். காதில், கழுத்தில், கைகளில், காலில் அவர்கள் அணிந்திருக்கும் அணிகள் தெளிவாகப் புலப்படவில்லை. அவர்களது ஆடை அமைப்பும் புலப்படவில்லை. இந்த நடுகல் சிற்பம் மதுரை வீரன் சாமி என்னும் பெயரால் வழிபடப்பட்டு வருகிறது.

**மாதம்பட்டி புலிகுத்திக்கல்**



கோவை-மாதம்பட்டியில் உள்ள அன்னியூரம்மன் கோயில் வளாகத்தில் புலிகுத்திக்கல் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. தரைக்கு மேல் நான்கு அடி உயரமும், மூன்று அடி அகலமும் கொண்ட ஒரு தடித்த பலகைக்கல் சிற்பம். வீரனின் முழு உருவமும் புலியின் முழு உருவமும் செதுக்கப்படவில்லை. வீரனின் தொடைப்பகுதி வரையிலும், புலியின் முன்னங்கால்களின் அருகில் நெஞ்சுப்பகுதி வரையிலும் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. மீதிக் கீழ்ப்பகுதி தரையின் கீழ் இருக்கக் கூடும். உறுதியாகச் சொல்வதற்கில்லை. இவ்வகைப் புலிகுத்திக்கற்களில் வழக்கமாக வீரனின் சிற்பம் இடப்பக்கமும், புலியின் சிற்பம் வலப்பக்கமும் இருக்கும். இங்குள்ள நடுகல்லில் இந்த அமைப்பு மாறியுள்ளது. வீரனின் இடக்கையிலிருக்கும் வாள், புலியின் வாய்ப்பகுதியில் நுழைந்து தலைப்பகுதியில் வெளிப்படுகிறது. வீரன் தன் இன்னொரு கையிலும் ஓர் ஆயுதத்தை ஏந்தியுள்ளது போல் காணப்படுகிறது. இச்சிற்பத்தில், புலியின் வால் காணப்படவில்லை. வீரன் தலைக்கொண்டை பெரிதாக நீண்டுள்ளது. செவியொன்றில் பெரிதாக ஓர்

அணிகலன். இடையில் குறுவாள் உள்ளது. தொடை வரையிலும் ஆடை மடிப்புகள் காணப்படுகின்றன. வீரனின் இடப்பக்கம் ஒரு பெண்ணின் முழு உருவமும் செதுக்கப்பட்டுள்ளது. பெண்ணின் கொண்டை, கணுக்கால் வரையுள்ள ஆடை ஆகியன தெளிவாகக் காணப்படுகின்றன.

**சடையம்பாளையம் சதிக்கல்**

உடுமலை வட்டம் பெரியபட்டிக்கருகில் சடையம்பாளையம், கண்டியம்மன் கோயில் வளாகத்தில் பஞ்சகன்னியர் சன்னதிக் கருவறையில் சதிக்கல் சிற்பத்தொகுதி உள்ளது. அதில், மூன்று ஆண் உருவச் சிற்பங்களும், இரண்டு பெண்ணுருவச் சிற்பங்களும் காணப்படுகின்றன. வீரர்களில் ஒருவர் தன் வலப்பக்கத்தில் வாளைத் தரையில் பதித்து வைத்தவாறு கைகூப்பி வணங்கும் நிலையில் உள்ளார். இன்னொரு வீரர் தம் இடக்கையைத் தொடையில் பதித்தவாறும் வலக்கையில் ஒரு மதுக்குடுவையைப் பிடித்த நிலையிலும் காணப்படுகிறார்கள். மூன்றாவதாக ஒரு வீரர் தண்டம் போன்ற ஒன்றைத் தரையில் பதித்துவைத்தவாறு கைகூப்பி வணங்கும் நிலையில் உள்ளார். இவருடைய இடைக்கச்சில் குறுவாள் காணப்படுகிறது. ஆண்கள் இடப்புறமாகவும், பெண்கள் வலப்புறமாகவும் கொண்டை முடிந்துள்ளனர். ஆண், பெண் அனைவரும் காதணிகளும், கழுத்தணிகளும் அணிந்திருக்கிறார்கள். அனைவரது ஆடை அமைப்பிலும் அழகுறக் காட்டப்பட்டுள்ளன. இது நாயக்கர்காலச் சிற்பங்களாகும்.



**து.சுந்தரம், கோவை**

## 78:15 எலயமுத்தூர் வீரக்கம்பம்

**உ**டுமலையை அடுத்துள்ள எலயமுத்தூர் என்னும் சிற்றூரில் தொட்டிச்சியம்மன் கோயில் என்னும் பெயருடன் மாலக்கோயிலில் மரத்தால் ஆன இரண்டு வீரக்கம்பங்கள் அழகான தோற்றத்துடன் நிற்கின்றன. இவை ஒன்பது அடுக்குகள் கொண்டவை. அடுக்குகள் அனைத்திலும், வீரர்கள்,



பெண்கள், குதிரைகள் ஆகிய உருவங்களுடன் போர்க்காட்சிகளும், இறையுருவங்களும் மிகவும் நேர்த்தியாக வடிக்கப்பட்டுள்ளன. நான்கு புறங்களிலுமாக முப்பதுக்கும் மேற்பட்ட அடுக்குகளில் சிற்பங்களை நுண்மையாகச் செதுக்கியிருக்கிறார்கள் என்பது சிறப்புக்குரியது.

**து.சுந்தரம்**,கோவை
**அ.சதாசிவம்**,உடுமலை

## 78:16 குதிரை வீரன் நடுகல்:

**தே**னி மாவட்டம், பெரியகுளம் வட்டம், வடுகப்பட்டி அருகே 17-18ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த குதிரை வீரன் சிற்பம் உள்ளது. விருமாண்டி என்ற பெயரில் வழிபாட்டில் உள்ள இவ்வீரக்கல் புடைப்பாக உள்ளது. இச்சிற்பம் நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாகும். தலைக்கொண்டையும் காதில் குண்டலங்களும் வலது கையில் ஈட்டியையும் உயர்த்தி பிடித்து குதிரையை செலுத்தும் நிலையில் இச்சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.



**மு.கனகராஜ்**,பெருங்குடி

## 78:17 மேலக்கால் கழுமரம்

மதுரையில் இருந்து 18 கி.மீ தொலைவில் மேலக்கால் அரசு பெண்கள் மகப்பேறு மருத்துவமனை வளாகத்துக்குள் சுமார் 3 அடி உயரத்தில் கல் கழுமரம் ஒன்று உள்ளது. இதை கருப்புசாமி என்று மக்கள் வழங்குகின்றனர். இந்த கல் கழுமரத்தில் முன் பகுதயில் சூல் போன்ற ஒரு குறி காணப்படகிறது. மருத்தவமனைக்கு பிரசவத்திற்காக வரும் பெண்கள் தங்கள் கைகளில் அணிந்தள்ள



கண்ணாடி வயைல்களை இந்த கல் கழுமரத்தின் பின்புறம் கழற்றி வைத்து விட்டு வணங்கிச் செல்கின்றனர்.

**ஆர்.ருக்மாங்கதன்,** மதுரை

## 78:18 இந்திராநகர்நடுகல்



**சே**லம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் ஆறகழூர், இந்திராநகர் என்ற இடத்தில் வசிஷ்ட நதியின் கரையில் நடுகல் ஒன்று உள்ளது. கால்களில் வீரக்கழல், இடுப்பில் குஞ்சத்து டனும் மடிப்புகளுடன் கூடிய பட்டாடை, மார்பில் சன்னவீரம், இடக்கரத்தில் வில்லும் வலக்கரத்தில் அம்பும் ஏந்திய நிலை, முதுகில் அம்பறாத்துணி கழுத்தில் கண்டசரம் போன்ற தடித்த இரு கழுத்தணிகள், அலங்காரம் செய்யப்பட்ட தலைமுடி, சிதைந்த நிலையில் முகம், ஆகியவற்றுடன் சமபங்க நிலையில் உள்ள இச்சிற்பத்தின் இடப்புறத்தில் குத்தீட்டி ஒன்றை நட்டு வைத்தாற்போன்று காட்சியும் உள்ளது. 10 -11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம். சன்னவீரம் என்பது வீரர்கள் அணியும் வீரச்சங்கிலியாகும். இது நடுகல்லில் அரிதாகவே காணப்படும்.

**பொன்.வெங்கடேசன்,** ஆறகழூர்

# கருத்துப்பரிமாற்றம்

## 79. கலசபாக்கம் அத்திமல்லன் கல்வெட்டு

எ.சுப்பராயலு, கோயம்புத்தூர்
இரா.பூங்குன்றன், காட்பாடி

இவ்விதழில் கல்வெட்டுப்பகுதியில் வெளிவந்துள்ள கலசபாக்கம், அத்திமல்லன் கல்வெட்டு (எண் -5) உயரமான பலகைக்கல்லில் வெட்டப்பட்டுள்ளது. கலசபாக்கம் ஊரைச் சார்ந்த போக்குவரத்துப் பணி ஒய்வு பெற்ற திரு. ராஜேந்திரன் அவர்கள் இக்கல்வெட்டைக் கண்டுபிடித்து ஆற்றுப் படுகையிலிருந்து தோண்டி வெளிக்கொணர்ந்தார். அதை அவர் முனைவர் பூங்குன்றனுக்குத் தெரிவித்து. தன் தம்பி திரு. முருகன் மூலம் அளித்த ஒளிப்படங்களிலிருந்து கல்வெட்டு பாடம் எங்களால் படித்தெழுதப்பட்டது. இக்கல்வெட்டைக் கண்டுபிடித்த திரு. ராஜேந்திரன் குடும்பத்தினருக்கு மிகவும் நன்றி.

சோழ அரசன் பரகேசரிவர்மன் (உத்தமசோழன் ஆகலாம்), 3வது ஆட்சி ஆண்டில் ( பொ.ஆ. 973.) வெளியிடப்பட்ட இக் கல்வெட்டு பங்களநாட்டு சிற்றரசரான கங்கரைப் பற்றிய கல்வெட்டுகளுள் முக்கியமானது. கல்வெட்டின் முற்பகுதி (வரி 1-44) வடமொழியில் கிரந்த எழுத்திலும் பிற்பகுதி (45-61) தமிழிலும் உள்ளது. அத்திமல்லன் என்ற பிரிதிவிகங்கரையன் தன்னாட்டில் இருந்த காமாலை என்ற ஊரில் எடுத்த விஷ்ணு கோயிலில் விளக்கு, பூசை, ஆண்டு விழா ஆகியவற்றின் பொருட்டு அவ்வூரின் வரி வருவாய் (ஆயதி) முழுவதையும் தேவதானமாகக் கொடுத்தான் என்று தமிழ்ப் பகுதி சொல்கிறது. இதே செய்தி வடமொழிப்பகுதி வரி 16-44யிலும் உள்ளது. காமாலை இன்றைய கலசபாக்கம் ஆக இருக்கவேண்டும். இக்கோயிலில் விஷ்ணு பள்ளிகொண்ட நிலையில் இருந்தார் என்கிறது. கோயில் இப்பலகைக்கல் கிடைத்த இடத்துக்கருகில் இருந்திருக்கவேண்டும்.

பங்கள நாடு பல்லவர் மற்றும் சோழர் காலத்தில் (சுமார் 800 முதல் 1300 வரை) ஏறக்குறைய வடக்கே வேலூரிலிருந்து தெற்கே திருவண்ணாமலை வரை வேலூர், போளூர் வட்டங்களை உள்ளடக்கிய ஒரு சிற்றரசு நாடாக விளங்கியது. இக்கல்வெட்டில் அத்திமல்லன் கல்லடுப்பூர் எல்லை வரை (மர்ய்யாதி) ஆண்டுவந்தான் என்று குறிக்கிறது. இச்செய்தி வேலூர் பொற்கோவில்- பெண்ணத்தூர் செல்லும் வழியிலுள்ள

சோழவரத்தில் உள்ள ஒரு கல்வெட்டிலும் உள்ளது. (கீழே: கல்வெட்டு 4). இந்தக் கல்லடுப்பூர் காஞ்சிபுரத்துக்கு அருகில் இருந்த ஒரு ஊராக இருக்க வாய்ப்புண்டு. இதை மேலும் ஆய்வு செய்தல் வேண்டும்.

கல்வெட்டின் வடமொழிப்பகுதி அத்திமல்லன் முன்னோர் பற்றிச் சொல்கிறது. இவர்கள் குவளாலபுரத்தில் (இன்றைய கோலார் நகரம்) ஆண்ட கங்கர் குலத்திலிருந்து தோன்றிய கிளைக்குலத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லிவிட்டு கீழ்க்கண்ட கொடிவழியைத் தருகிறது:

(1) கம்பவர்ம்ம மஹகங்கன்

(2) மஹ தேவன்

(3) கங்கமார்த்தாண்டன்

(4) வயிரி

(5) ஹஸ்திமல்லன் (தமிழில் அத்திமல்லன்).

இந்த வரிசை வேறு சில இடங்களில் கிடைக்கும் கீழ் வரும் ஐந்து கல்வெட்டுகள் தரும் உதிரிச் செய்திகளை தொகுத்துக் கூறுவது போல் உள்ளது.

1) சோழபுரம். எபிகிராபியா இண்டிகா, 7, பக்கம் 193. பல்லவ கம்பவர்மன், பொஆ 877. --- கங்க வம்சத்தைச் சேர்ந்த ராஜாதித்யன் இறந்தபின் அவன் மகன் மஹதேவன் தந்தை நினைவாக பள்ளிப்படை எடுத்தான் என்ற செய்தி.

2) திருப்பழனம். தென்னிந்திய கல்வெட்டுகள், 13, எண் 319. சோழன் முதல் ஆதித்தன், பொஆ. 897. --- பங்கள நாடுடைய மஹதேவர் மகனார் கங்கமாத்தாண்டர் ஆகிய செம்பியன் பிரிதிவிகங்கரையர் ...

3) சோழபுரம். எபிகிராபியா இண்டிகா, 7, பக்கம் 195. இரட்ட அரசன் கன்னரதேவன் (மூன்றாம் கிருஷ்ணன்), பொஆ. 949. --- பங்கள நாடுடைய வயிரி அடியந் மகனார் அத்திமல்லர் ஆகிய கன்னரதேவ பிரிதிவிகங்கரையர் ....

4) சோழபுரம், எபிகிராபியா இண்டிகா, 7, பக்கம் 196. சக ஆண்டு 875 = பொஆ. 953. --- அத்திமல்லர் ஆன கன்னரதேவ பிரிதிவிகங்கரையர் கல்லடுப்பூர் மஜ்ஜாதி ஆளா நிற்க ...

5) திருமலை (போளூர்). தென்னிந்திய கல்வெட்டுகள், 23, எண் 65. மேற்படி அரசன், பொஆ. 958. --- கன்னரதேவ பிரிதிவிகங்கரையர் தேவியார் கங்கமாதேவியார் ....

மேற்கண்டவற்றில் முதல் கல்வெட்டு, கலசபாக்கம் கல்வெட்டு தரும் முதல் இரண்டு அரசர்களையும், இரண்டாவது 2 மற்றும் 3ஆம் அரசரையும், மூன்றாவது 4 மற்றும் 5ஆம் அரசரையும், மற்றவை இரண்டும் 5ஆம் அரசரையும் குறிப்பிடுகின்றன. கலசபாக்கம் கல்வெட்டு தான் கங்கமார்த்தாண்டன் மகன் வயிரி (முழுப்பெயர் வயிரி அடியன்) என்பதைத் தெளிவுபடுத்துகிறது. முதல் அரசன் கம்பவர்ம மஹா கங்கனுக்கு இன்னொரு பெயர் ராஜாதித்தன் என்பது கல்வெட்டு 2-இலிருந்து தெரிகிறது. இவன் பல்லவ கம்பவர்மன் கீழ் சிற்றரசனாக இருந்ததால் கம்பவர்ம்ம மஹகங்கன் என்று பட்டம் பெற்றான் என்று சொல்லலாம். இரட்ட அரசன் கன்னரதேவன் 949-50இல் தொண்டை நாட்டை சோழரிடமிருந்து கைப்பற்றி 967 வரை ஆண்டான். அந்த நேரத்தில் அவன் கீழ் சிற்றரசனாக இருந்த அத்திமல்லனுக்கு கன்னரதேவ பிரிதிவிகங்கரையன் என்ற பட்டம் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும். ஆக, இக்கல்வெட்டு மூலம் பொது ஆண்டு சுமார் 877ஆவது முதல் 970 வரை ஆண்ட ஐந்து பங்களநாட்டு கங்க மன்னரை அறிந்துகொள்கிறோம்.

# 80. மீண்டு வந்த மன்னர் இராஜராஜன், ஒலோகமாதேவியார் பிரதிமைகள்

சு.இராசவேலு,தஞ்சாவூர்

**நீ**ண்ட பல முயற்சிகளுக்குப் பிறகு தஞ்சாவூர் பெருவுடையார் கோயிலில் இருந்து கடத்தப்பட்ட இராஜராஜனின் செப்புத் திருமேனியும் அவரது பட்டத்து அரசி ஒலோகமாதேவியின் செப்புத்திருமேனியும் இப்பொழுது தஞ்சைக்கு மீண்டும் கொண்டு வரப்பட்டுள்ளன. இத்திருமேனிகள் இராஜராஜன் காலத்திலேயே செய்யப்பட்டு இக்கோயிலில் வழிபாட்டிற்கு வைக்கப்பட்டவை.

தஞ்சாவூர் இராஜராஜீஸ்வரம் கோயிலைக் கட்டித் திருக்குடமுழுக்கு செய்யும்பொழுதே இக்கோயிலுக்கு இராஜராஜ சோழனும் அவரது மனைவிகளும் அரசு அலுவலர்களும் பொன்னும் பொருளும் பெருமளவில் கொடுத்தனர். இக்கோயிலுக்கு இராஜராஜனின் 29 ஆவது ஆட்சியாண்டுவரைக் கொடுக்கப்பட்ட 60 செப்புத் திருமேனிகள், அணிகலன்கள், பொன், மாணிக்கம்,வைரம், முத்து, பவளம் போன்ற அனைத்துமே துல்லியமாக அவற்றின் எடையளவு உயர அளவு போன்றவற்றுடன் குறிக்கப்பட்டுள்ளன.

இராஜராஜன் காலத்தில் அளிக்கப்பட்ட இறைத்திருவுருவங்களையும் சமயப் பெரியார்கள் மற்றும் அரச, அரசியர் உருவங்களைப் பொன்னாலும் செம்பாலும் செய்து இக்கோயிலுக்கு அளித்துள்ளனர். இறைவுருவங்களைக் குறிப்பிடும்பொழுது அவற்றைச் செப்புத் திருமேனிகள் என்றும் சமயப்பெரியோர்கள் மற்றும் இராஜராஜன், ஒலோகமாதேவியர் உருவங்களைக் குறிப்பிடும்பொழுது பிரதிமம் என்றும் வேறுபடுத்தியே கல்வெட்டுகளில் சுட்டியுள்ளமை போற்றுதலுக்குரியது. இறைவனுக்கும் மனிதராக இருந்து உயர்ந்தவர்களுக்கும் பொன் மற்றும் செப்பு மேனிகளைச் செய்யும் பொழுது அவற்றின் உயரம் அவற்றின் பீட அமைப்பு திருமேனிகளின் அமைப்பு கனமானதா அல்லது வெற்றிடம் கொண்டதா ஆகிய விவரங்களும் அவற்றிற்கு அளிக்கப்பட்ட அணிகலன்கள் முத்து, வைரம்,வைடூரியம், பவழ அணிகலன்கள், பொன்னால் ஆன உருத்ராட்ச மாலைகள் ஆகியவற்றின் எடையளவுகளையும் நீள, அகலங்களையும் துல்லியமாகக் கல்வெட்டுகளில் குறித்துள்ளார்.

தற்பொழுது குஜராத்தில் அஹமதாபாத் கௌதம் சாராபாய்

தனியார் நிறுவன அருங்காட்சியகத்திலிருந்து மீட்டு வரப்பட்டுள்ள இராஜராஜனின் பிரதிமமும் ஒலோகமாதேவியின் பிரதிமமும் இக்கோயிலில் முதன்மை அதிகாரியாக இருந்த ஸ்ரீகாரியம் பொய்கைநாட்டு கிழவன் ஆதித்தன் சூரியன் என்பவரால் இராஜராஜன் காலத்திலேயே கொடையாக அளிக்கப்பட்டது. இராஜராஜனின் செப்புத்திருமேனி மற்றும் அவரது மனைவி ஒலோகமாதேவியின் செப்புத் திருமேனி கல்வெட்டுகளில் பெரிய பெருமாள் பிரதிமம் என்றும் ஒலோகமாதேவியின் பிரதிமம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

இராஜராஜனின் பிரதிமம் பாதம் முதல் கேசம் வரை ஒரு முழம் நான்கு விரலரை உயரமாகவும் அதன் கீழ்ப்பகுதியில் பீடப் பகுதி சமசதுரமாக பதினொரு விரல் நீள அகலமுடையதாகவும் உயரம் 6 தோரை கொண்டும் அமைக்கப்பட்டது. ராஜராஜன் உருவத்தையும் பீடத்தையும் இடையில் இணைக்கும் பூ அமைப்பான கவிழ்ந்த பத்மம் ஐந்து விரல் இரண்டு தோரை உயரமுடையது. இதேபோன்று ஒலோகமாதேவியின் பிரதிமமும் மூன்று கூறுகளாக அமைக்கப்பட்டது. அடியில் பீடம், அதன் மேல் பகுதி கவிழ்ந்த தாமரை அமைப்பு அதன் மேல் இரண்டு கைகளுடன் கனமாக அமைக்கப்பட்ட அரசியின் உருவம் அமைக்கப்பட்டது. ஒலோகமாதேவியின் உயரம் இருபத்து இருவிரல் இரண்டு தோரையும் பத்மம் ஐந்து விரல் உயரமும் அதன் கீழ் உள்ள பீட அமைப்பு சதுர அமைப்பில் 90 விரல் நீள அகலமும் 5 விரல் இரண்டு தோரை உயரமுடையதாகவும் அமைத்து இணைக்கப்பட்டுள்ளதை கல்வெட்டுகள் குறிக்கின்றன.

இவ்வுருவங்கள் அனைத்துமே மூன்று பகுதிகளாக அமைக்கப்பட்டு நேர்த்தியான முறையில் இணைக்கப்பட்டுள்ளமை சிறப்புக்குறியது. இவற்றில் உருவ அமைப்பு மட்டும் கனமாக செய்யப்பட்டவை. மனித உருவ மேனிகள் இரண்டு கைகளையும் இறைவுருவங்கள் நான்கு கைகள் மற்றும் அதற்கும் அதிகப்படியான கைகளைப் பெற்றவையாகவும் சோழர் காலத்தில் செய்யப்பட்டன.

கோயில் அலுவலர் ஆதித்தன் சூரியன் இந்த இரண்டு பிரதிமைகளுடன் மேலும் 5 பிரதிமைகளை கோயிலுக்குக் கொடுத்துள்ளார். அவை நம்பி ஆரூரன் என வழங்கப்பட்ட சுந்தரமூர்த்தி நாயனார், பரவை நங்கை, திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் ஆகிய பிரதிமைகளையும் இராஜராஜன் மற்றும் ஒலோகமாதேவி பிரதிமைகள் வணங்கும் சிவனாகிய சந்திரசேகரரின் திருமேனியையும் அளித்துள்ளார். சந்திரசேகரர் திருமேனி கடவுள் உருவமாதலால் நான்கு கைகள் உடையவராக

வார்க்கப்பட்டுள்ளார். இராஜராஜனின் பிரதிமைக்கும் ஒலோகமாதேவியார் பிரதிமைக்கும் பொன் அணிகலன்களாக கைவளைகளும் காதில் அணிகின்ற குதம்பைகளும் வழங்கப்பட்டமை கல்வெட்டில் பட்டியலிடப்பட்டுள்ளது.

தமிழகத்திலிருக்கும் பல கோயில்களிலிருந்து செப்புத் திருமேனிகளும் கற்சிற்பங்களும் பெருமளவில் உலகின் பல பகுதிகளுக்குக் கடத்தப்பட்டு விற்கப்படுகின்றன. இது பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வருகின்றன. திருமலைச்சேரி என்னும் ஊர் வேலூர் அருகில் உள்ள ஒரு சிறிய ஊர். இவ்வூரிலுள்ள சிவன் ஆலயத்தை ராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணன் பராந்தக சோழனின் மூத்த மைந்தன் ராஜாதித்யனைத் தக்கோலப் போரில் வென்றதின் நினைவாகக் காளப்பிரிய தேவர் என்னும் பெயரில் கட்டியுள்ளான். அரிய சிற்பங்களையும் இக்கோயிலில் வைத்துள்ளார். அவ்வாறு வைக்கப்பட்ட ஐந்து தலையுடைய சதாசிவர் அல்லது மகேஷர் என்ற சிற்பம் தமிழகத்தில் இருந்த அரிய சிற்பமாகும். ராட்டிரகூடக் கலைக்கு தமிழகத்திலிருந்த ஒரே சிற்பம் இக்கோயிலின் வயல் வெளியில் கோயிலின் அருகில் சிறிது உடைந்த நிலையில் இருந்தது. இதன் அருமை தெரிந்த கடத்தல் கும்பல் இதனை கடத்தி சென்னையில் தாம்பரம் அருகில் ஒரு கிட்டங்கியில் வைத்து இருந்தனர். அங்கிருந்த இச்சிலையுடன் ஏராளமான சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டு மீட்கப்பட்டது. அதற்கான வழக்கும் நீதி மன்றத்தில் நடத்தப்பட்டது. அவ்வழக்கு முடியும் வரை அனைத்து சிற்பங்களும் சென்னை அருங்காட்சியக வெளியில் வைக்கப்பட்டிருந்தன. வழக்கில் அச்சி சிற்பம் பற்றியும் தென்னிந்திய சிற்பக்கலை பற்றியும் அவற்றின் வரலாற்றைத் தெரியாத வட இந்திய அதிகாரிகளின் சாட்சியத்தால் நிரூபிக்க இயலாமல் மீண்டும் சிலை கடத்தும் கும்பலுக்கே சாதகமாக்கப்பட்டு, அவற்றை எடுத்துச் செல்ல அனுமதியும் வழங்கப்பட்டது. இப்பொழுது அச்சிற்பமும் பிற சிற்பங்களும்



**காணாமல் போன மகேஷர் சிற்பம்-திருமலைச்சேரி**

எந்த நாட்டில் உள்ளது என்பது அறியக்கூட இயலவில்லை.

இதுபோன்று ஏராளமான சிலைகள் வெளிநாடுகளுக்கும் தனிநபர்களுக்கும் விற்கப்பட்டன. தற்பொழுது நீதி மன்றமும் பொன் மாணிக்கவேல் போன்ற கடமையும் நேர்மையும் மிக்கவர்களும் இணைந்து செயல்படுவதால் நமது அரும்பொருட்கள் பல மீட்கப்பட்டு வருகின்றன. தமிழகத்தைச் சார்ந்த தொல்லியல் மற்றும் சிற்பக்கலை, கட்டடக்கலை தொழில் நுட்பங்களை நன்கறிந்த தொல்லியல் அறிஞர்களை இக்குழுவில் இணைக்க வேண்டும் என்பதே இதில் படிப்பினை. அவ்வாறு தமிழக வரலாற்றை கல்வெட்டுகளை கோயில் சிற்பக்கலை ஆகியவற்றை அறிந்தவர்களை சிலைதடுப்புக் குழுவில் சேர்க்க வேண்டும். இதன் மூலம் இதுவரை காணாமல் போன சிற்பங்களையும் செப்புத் திருமேனிகளையும் நம்மால் மீட்டெடுக்க முடியும்.

கடந்த இருபது ஆண்டுகளுக்கு முன் தொல்லியல் துறையில் கோயில்களில் இருக்கின்ற செப்புத் திருமேனிகளைப் பதிவு செய்யும் பதிவு அலுவலர்கள் இருந்தனர். இவர்கள் மத்திய அரசின் நிதியுதவியில் மாவட்டம்தோறும் செப்புத் திருமேனிகளை பதிவு செய்து அவற்றைப்பற்றிய விவரங்களைக் குறித்தனர். ஆனால் தற்பொழுது தமிழகத் தொல்லியல் துறையில் பதிவு அலுவலர்களும் தொல்லியல் அலுவலர்களும் கல்வெட்டு அலுவலர்களும் பெருமளவில் இல்லாத நிலையே உள்ளது. தமிழகத் தொல்லியல் துறையில் முதல நிலை இயக்குநர் முதல் பதிவு அலுவலர், தொல்லியல் கல்வெட்டு அலுவலர்கள் அருங்காட்சியகக் காப்பாட்சியர்களின் காலியான இடங்களை நிரப்புதல் வேண்டும். தொல்லியல் படித்த இளைஞர்களை அப்பணிகளில் சேர்த்தல் வேண்டும். மீண்டும் பதிவுஅலுவலர்கள் பதவிகளை உருவாக்கி மாவட்டந்தோறும் அரும்பொருட்களை மின்னாக்கம் செய்து பதிவு செய்தல் வேண்டும். அதற்காக ஓய்வு பெற்ற தொல்லியல் அலுவலர்களையும் தொல்லியல், கல்வெட்டியல் பேராசிரியர் களையும் தற்காலிகமாக பணியமர்த்தம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்தால் மட்டுமே எஞ்சியுள்ள நமது கலைப் பொக்கிஷங்களை நம்மால் காப்பாற்ற முடியும். இதனை தமிழக அரசு கருத்தில் கொண்டு செயலாற்றினால் தமிழர் பண்பாட்டுக் கூறுகளையும் கலைக்கூறுகளையும் அரும்பொருட்களையும் செப்புப் படிமங்களையும் வரலாற்றையும் பாதுகாக்க முடியும்.

# புதிய வெளியீடுகள்

Buddhist Remains of South India (TamilNadu): Dr.D.Dayalan-2017. Sterling Publications (P) Ltd, New Delhi, ISBN 9788120794955. Demi 1/4 pp 270 + XXII + CXIV maps and plates.




தமிழகத்தில் அறியப்பட்டபுத்த மததொல்எச்சங்கள், இடங்கள் மற்றும் பிறதகவல்களை முறையாக ஆணவப்படுத்தி வெளிவரும் முதல் நூல் என்றே இதனைக் குறிப்பிடலாம். ஏறத்தாழ 100 இடங்களை அகர வரிசையில் தந்து அங்கு அறியப்படும் ஏராளமான சிற்பங்கள், செப்புத்திரு மேனிகள், தொல்பொருட்கள், கல்வெட்டுகள், வரைபடங்கள் இதனில் ஆவணப்படுத்தப்படுள்ளன. அருங்காட்சியகச் சேமிப்புகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு இடத்திற்கும் 17 வகைப்பிரிவுப்பட்டிகளில் விவரங்கள் பட்டியலிட்டுத்தரப்பட்டுள்ளன. அவ்விடங்களின் இருப்பு நிலப்படத்தில் இடம்பெறும் அட்சரேகை, தீர்க்கரேகைக் குறியீட்டு எண்களுடன் (Geo-coordinates) குறிப்பிடப்பட்டு இந்நூலில் தரப்பட்டுள்ளமை கூடுதல்சிறப்பாகும்.

அருங்காட்சியகங்களில் உள்ள சிற்பங்கள் பாதுக்காப்பாக இருந்த போதிலும் பரவலாக ஊர்ப்பரப்புகளில் காணப்படும் சிற்பங்கள் கவனிப்பார் இன்றியே உள்ளன. பலசிற்பங்கள் தலை இல்லாமலும் முகம்சிதைந்து முள்ளன. சிலவற்றின் தலை மட்டுமே உள்ளனவும் பதிவு செய்யப்பட்டுள்ளன. சிற்பங்களில் பதியப்பட்டுள்ள எழுத்துப் பொறிப்புகளும் இந்நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. புத்தரின் உள்ளங்கையில் தர்மச்சக்கரம் பொறிக்கப்பட்டுள்ளமை ஒருபடத்தில் காட்டப்பட்டுள்ளது. காஞ்சி எகாம்பரநாதர் கோயில் மதில் சுவரில் புத்தரின் தமிழகத்தில் பல்வகையாக இருந்திருக்கும் என்று ஊகிக்க முடிகிறது. சிற்பங்களின் காலம் மேற்சொன்ன 17 பிரிவுப்பட்டியலில் தனிப்பட ஒருபட்டியாக இடம்பெற்றுள்ளது. காவேரிப்பூம் பட்டினம் அகழாய்வில் கிடைத்த தொல்லெச்சங்கள் சொல்லப்படும் போது அகழாய்வு கட்டடப் பகுதியின் வரைபட

மும்பிறவும் இடம்பெற்றுள்ளன. விக்கிரமம் என்ற பட்டுக்கோட்டைப் பகுதியில் புத்தடிக் கொல்லையில் உள்ள மூக்கு உடைத்த சிற்பத்தைக் குறிப்பிடும் போது அங்கு புதையலாக கிடைத்த சீனக் காசுகளையும் குறிப்பிட்டு அவற்றின் படங்களும் வெளியிடப்பட்டுள்ளன. போளுவாம்பட்டியில் கிடைத்த சுடுமண் உருவத்தலைகள் புத்தர், மைத்ரேயர் என்றும் ஊகமாக அறியப்பட்டுள்ளதால் அவையும் இந்நூலில் ஐயக் குறிப்புகளுடனேயே பதிவு செய்யப்பட்டுள்ளன. திருவாரூர் மாவட்டம் செல்லூரில் கிடைத்து இன்று சென்னை அருங்காட்சியகத்தில் உள்ள அரசபீடத்தில் இசைக்கலைஞர்கள் சூழ அமர்ந்துள்ள புத்தரின் செப்புத்திருமேனி ஏழரை செ.மீ அளவே உயரமுடையதாயினும் . நல்லஉழைப்பில், பல்வேறு ஆர்வலர்களிடம் தொடர்பு கொண்டு பல இடங்களுக்கும் நேரில் சென்றுபடங்களுடன் ஆவணப்படுத்தப்பட்டுள்ள இந்நூல் தமிழக சமயவரலாற்றுக்கும் கலை வரலாற்றுக்கும் நல்ல தொருவரவாகும்.

**சு. இராசகோபால், சென்னை**

**செ.இராசு,தமிழ்க் கல்வெட்டுப் பாடல்கள்,2016,கொங்கு ஆய்வு மையம், 58/2 பாலக்காட்டுத் தோட்டம், புதிய ஆசிரியர் குடியிருப்பு வழி, ஈரோடு, 638011, பக்கங்கள்-284, விலை ரூ.200/-**

உலகமறிந்த கல்வெட்டு அறிஞரும் அனைவராலும் புலவர் அய்யா என வழங்கப்பெற்று வரும் பேராசிரியர் செ. இராசு அவர்கள் தொடர்ந்து ஆய்வுலகத்திற்கு கல்வெட்டு சார்ந்த நூல்கள் எழுதி வருகின்றார். அவ்வரிசையில் கல்வெட்டுப் பாடல்கள் குறித்த இந்நூல் மிகச் சிறந்த நூலாக வெளிவந்துள்ளது. தமிழகத்தில் இதுவரை கிடைத்துள்ள 50,000 தமிழ்க் கல்வெட்டுக்கள் தமிழக அரசியல் வரலாற்றையும் சமூக பொருளாதார வரலாற்றிற்கும் வளம் சேர்ப்பவை. இவற்றுள் பாடல்காளாக அமைந்த கல்வெட்டுகள் பல, இந்திய மொழிகளில் இதுவரை வந்துள்ள கல்வெட்டுகளில் பாடல்களாக வந்துள்ள கல்வெட்டுகளில் தமிழ் மொழிக் கல்வெட்டுகளே அதிகமானவை. பொதுவாக சோழர் கால மெய்க்கீர்த்திகள் பாடல்களாக கொண்டிலங்குவது முதலாம் இராஜராஜன் காலம் முதல் தொடங்கப்பெற்றன. ஆனால் அதற்கும் முன்பாகவே பல்லவர் கால கல்வெட்டுகளில் சிறிய அளவிலான பாடல் கல்வெட்டுகள் இடம் பெறுகின்றன. வட இந்தியாவில் வடமொழிக் கல்வெட்டுப் பாடல்களை எழுதுவதற்கு என தனித்துவம் பெற்ற புலவர்கள் இருந்ததை சமுத்திரகுப்தரின் அலகாபாத் தூண் கல்வெட்டும்

சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியின் அய்ஹொளே கல்வெட்டும் குறிப்பிடும். தமிழ்ப் பாடல் கல்வெட்டுகள் சிலவற்றில் அத்தகைய குறிப்புகள் சில உள்ளன.

தமிழக கல்வெட்டுகளில் காணப்படும் பாடல்களைத் தொகுக்கும் முயற்சியில் முதன்முதலாக ஈடுபட்டவர் அறிஞர் மு. இராகவையங்கார் சுட்டத்தக்கவர். இவர் எழுதிய சாசனத் தமிழ்க்கவி சரிதம் என்ற நூலும் அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி வெளியிட்ட சாசனச் செய்யுள் மஞ்சரியும் குறிப்பிடத்தக்கவை. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தாரால் வெளியிடப்பட்ட மெய்க்கீர்த்திகள் என்னும் நூல் தமிழ் அரசர்களின் புகழ்பாடும் மெய்க்கீர்த்திப் பாடல்களை கொண்டு அமைந்தவை. இவ்வறிஞர்களினை பின்பற்றி தற்பொழுது வெளிவந்துள்ள தமிழ்க் கல்வெட்டுப் பாடல்கள் என்னும் நூல் புலவர் செ. இராசு அவர்களால் அரிதின் முயன்று வெளிவந்துள்ள சிறப்பான நூல். இந்நூலில் இதுவரை வெளிவராத புதிய கல்வெட்டுப் பாடல்கள் வெளிவந்துள்ளன. இந்நூலில் சோழர் காலம் முதல் தொடர்ந்து பல்வேறு அரச மரபுகளின் கால கட்டத்தைச் சார்ந்த கல்வெட்டுப் பாடல்கள் வந்துள்ளமை சிறப்புக்குரியது. புலவர் அய்யாவின் முயற்சிகளில் வெளிவந்துள்ள நூல்களில் இதுவும் ஒரு முத்தான நூல் எனக் குறிப்பிடலாம்.

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

**தொல்குடி வேட்டுவர் சமூக ஆவணங்கள், ஆசிரியர்: ப.ஆனந்தகுமார், அல்லாள இளையான் அறக்கட்டளை, 91 ரக்கியாவலசு, மொளசி அஞ்சல், நாமக்கல் மாவட்டம் 637210, விலை ரூ. 375/-**

தமிழக வரலாறு பெரிதும் அரசியல், பெருவேந்தர்கள், சமயங்களை மையமாகக் கொண்டே எழுதப்பட்டுள்ளது. தமிழகத்தின் சமூக வரலாறு , சான்றுகள் பலவற்றை முறையாகத் திறனாய்விற்கு உட்படுத்தி, பாகுபாடின்றி எழுதப்படவேண்டும். இதற்கு வரலாறு, நாட்டுப்புறவியல், தொல்லியல், கல்வெட்டியல் இலக்கியம், மானுடவியல் என்ற பல புலங்களின் உதவி அவசியம். தமிழகத்தில் பல வகையான இனக்குழுக்கள் வாழ்ந்துவந்துள்ளன . இவற்றின் தொடர்ச்சி இன்று வாழும் சமூகங்களிடயே உள்ளது. இக் குழுக்களின் சான்றுகள் பல தமிழக ஆவணங்களில் விரவிக்கிடக்கின்றன. தமிழக வரலா ற்றாவணங்களில் குறிப்பிடப்பெறும் பல குழுக்களில் வேட்டுவர் இனத்தினர் ஒருவராவர். இந்நூல் தமிழக வரலாற்று ஆவணங்களில் வேட்டுவர் குறித்த ஆவணங்களைத் தொகுத்து வழங்குகிறது.

நூலின் அறிமுகப் பகுதியில் வேட்டுவர் குறித்த பல கருத்துகள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன. குறிப்பாக இந் நூலில் அளிக்கப்பட்டுள்ள வேட்டுவர் குறித்த ஆவணங்கள் ஆய்வாளர்களுக்கு மிகவும் பயனுள்ளவையாக இருக்கும். தமிழகச் சமூக, மானுடவியல் ஆய்வுகளில் ஈடுபடுபவர்களுக்குச் சான்றுகளை வழங்கும் இது மிகவும் பயனுள்ள ஒரு தொகுப்பு நூலாகும். ஒளிப்படங்கள் யாருடையவை என்ற தகவலை அளித்திருக்கலாம். ஒளிப்படங்கள், மைப்படிகள் தெளிவாக அளிக்கப்பட்டுள்ளன.

**வீ.செல்வகுமார்**, **தஞ்சாவூர்**

**சம்புவராயர்காசுகள் - ஆறுமுகசீதாராமன், 2017. தனலட்சுமிபதிப்பகம், 12 இராஜராஜன்நகர், மானேஜிப்பட்டிதெற்கு, தஞ்சாவூர் - 613004. பக்கம் 48 ஆர்ட்பேப்பர். விலை ரூ 120/-**

நூலாசிரியர் கடந்த 30 ஆண்டுகளாகத்தான் சேகரித்த சம்புவராயர் காசுகள் பற்றி வெளியிட்ட செய்திக் குறிப்புகளின் தொகுப்பு இந்நூல். 59 காசுகள் மற்றும் ஒரு முத்திரையின்படங்கள், அவற்றின் அளவு, உலோகம், எடை, கிடைத்தஇடம், அவற்றில் உள்ள பொறிப்பு விளக்கம் ஆகிய விவரங்களுடன் இந்நூல் அமைந்துள்ளது. சம்புவராயர்கள் சிவனிடம் கொண்ட ஈடுபாடு காரணமாக சிவனின் பெயரான 'சம்பு' என்பதைத் தங்கள் குலப்பெயராகக் கொண்டவர்கள். சிவனின் வாகனமானகாளையே இவர்களது அரசசின்னமாகவும் விளங்கியது. இவர்களது தேவனூர், புலியூர்கல் வெட்டுகளில் காளையின் உருவம் உள்ளமை இதனை உறுதி செய்கிறது. சோழர், பிற்காலப்பாண்டியர், தெலுங்குச்சோழர், விஜயநகரர் ஆட்சிக்காலங்களில் சிற்றரசர்களாகவும் அதிகாரிகளாகவும் விளங்கிய இவர்கள் பொ. ஆ 1236 முதல் 1379 முடிய தனியரசர்களாக விளங்கினர். இவர்களின் எழுவரின்பெயர்களும் ஆட்சிக்காலமும் பட்டியலாக இன்நூலில்தரப்பட்டுள்ளது. இவர்களது பெயர்கள்காசுகளில் தெலுங்கு, தமிழ், நந்திநாகரி ஆகியஎழுத்துக்களில் குறிப்பாக ஓரிரு எழுத்துக்களுடன் காணப்படுகின்றன. 'வீ', 'னாராயண', 'ராஜிநாராயண'என்பவை வீரசம்பன், ராஜநாராயணன் ஆகியசம் புவராயமன்னர்களைக்



குறிக்கிறது என்றும் 'ஹரிஹாராய' என்று உள்ளவை விஜயநகரர் மற்றும் மூன்றாம் இராஜநாராயணசம் புவராயர் கூட்டாட்சியில் வெளியிடப்பட்டவை என்று காட்டுகிறார். காளை மற்றும் குத்துவாள் உருவங்கள் சம்புவராயர்களின் சாசுகளில் பெரும்பாலும் இடம் பெறுகின்றன. *43* காசுகள் வரைகாளை காணப்படுகிறது. காளை இல்லாதுள்ளகாசுகள் விஜயநகரர் கூட்டாச்சியில் வெளியிடப்பட்டவை என்ற கருதுகோளில் காசுகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் மட்டுமே அறியப்பட்டசம் புவராயர் காசுகள் இவரதுதேடலால் இந்நூலின்வாயிலாக பல்வேறுவகைக் காசுகளாக இன்று படங்களுடன் அறியத்தரப்படுவது நல்லமுயற்சியாகும். இதுமேலும்சேர்த்தல்-நீக்குதல் என்றவகையில் ஆய்வுகள் தொடர வழிவகுக்கும் என்பது கண்கூடாகும்.

**சு.இராசகோபால்,** **சென்னை.**

**கோ. எழில் ஆதிரை,. செம்பியன் மாதேவி கலைக்கோயில்கள், தொகுதி-2 (செம்பியன் மாதேவி) 2016, ரோகினி நூலகம், 6, பெருமாள் வடக்கு வீதி, வெளிப்பாளையம், நாகப்பட்டினம், 611001, பக்கம்150, விலை-150/-**

செம்பியன் மாதேவி கலைக்கோயில்கள் நூல் வரிசையில் இந்நூலாசிரியரால் வெளியிடப்படும் இரண்டாவது நூல் இந்நூல். சோழ மாதரசிகளுள் இறைப்பற்றும் கலைப்பற்றும் மிக்க செம்பியன் மாதேவி உத்தம சோழனின் தாயார் ஆவார். தன் கணவர் கண்டாரதித்தரின் சைவப்பற்றினைப் பின்பற்றி தமிழகத்தில் பல கோயில் திருப்பணிகள் செய்தவர். அழிவுரும் நிலையில் இருந்த பல தளிகள் இவரது முயற்சியால் கற்றளியாக மீட்டெடுக்கப்பட்டவை.

அவ்வகையில் இவரது காலத்தில் கட்டப்பட்ட செம்பியன் மாதேவி ஊரிலுள்ள கோயில், சிற்பக் கலை அழகும் கட்டடக்கலை நுட்பமும் மிக்க கோயிலாகும். செம்பியன் மாதேவியின் உன்னத கலைத்தொண்டில் ஒரு மைல் கல் இக்கற்றளி. செம்பியன் மாதேவியால் உருவாக்கப்பட்ட இவ்வூரினை அந்தணர்கள் குடியிருக்கும் சதுர்வேதி மங்கலமாக்கி பல கொடைகளை அளித்துள்ளார்.

இவ்வூர் கைலாசநாதர் கல்வெட்டுகள் எடுத்தியம்பும் பல அரிய செய்திகளை ஆய்வு செய்து இந்நூலில் விளக்கியுள்ளமை பாராட்டத்தக்கது. கட்டடக்கலை சிற்பக்கலை சிறப்புகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளது மாணவர்களுக்கும்

ஆய்வாளர்களுக்கும் பயன்படக்கூடியது. தனது களப்பணி மூலம் பெறப்பட்ட முடிவுகளையும் இந்நூலில் குறிக்கப்பட்டிருப்பது சிறப்புக்குரியது.

**சு.இராசவேலு, தஞ்சாவூர்**

**திருவந்திபுரம் ஸ்ரீ தேவநாதசுவாமி கோயில் வரலாறு, ஆசிரியர்: மா. சந்திரமூர்த்தி, கோ,முத்துசாமி, மணிவாசகர் பதிப்பகம் 31 சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை 600108 ,விலை-175/-**

தமிழகத்தில் அமைந்துள்ள கோயில்கள் பல வரலாற்றுச் சான்றுகளைச் சுமந்து நிற்கின்றன. கோயில்கள் குறித்த ஆய்வுகள் பல நடத்தப்பெற்றுள்ளன. இந் நூல், கடலூருக்கு அருகில் உள்ள திருவந்திபுரம் தேவநாத சுவாமி கோயிலின் வரலாறு, கோயில் அமைப்பு, தலபுராணம், கல்வெட்டுகள், கட்டடக்கலை, படிமக்கலை, திருவிழாக்கள், ஆகியவற்றை விளக்குகின்றது. நூலில் அளிக்கப்பட்டுள்ள, பெருமாளின் பெயர் மதுசூதனன் அல்ல மதிசூதனன் என்ற கல்வெட்டுச் செய்தி வழி விளக்கம் சுவையானது. ஆனால், பெருமாளின் மதுசூதனன் என்ற பெயர் மது-கைடபர்களை வதம் செய்ததால் வந்ததாகும். கல்வெட்டுகளில் உள்ள வரலாற்றுச் செய்திகள் விரிவாக அளிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளின் மூல பாடங்களில் ஒரு சிலவற்றை அளித்திருக்கலாம். பல நல்ல வண்ண நிழற்படங்கள் தரப்பட்டுள்ளன. ஆய்வாளர்களுக்கும், பக்தர்களுக்கும் ஒரு பயனுள்ள நூல்.

**வீ.செல்வகுமார்,தஞ்சாவூர்**

**'ஜம்பைகரியகாளியம்மன்பதிப்பகம்' - புலவர் அ. பழனியப்பன், 2017, ஸ்ரீவாணிஅச்சகம், 261-பழனி ஆண்டவர்கோயில்தெரு, பவானி.**




ஓலைச் சுவடிகளில் பதிவாகியுள்ள சதகம், அந்தாதி, பிள்ளைத் தமிழ் முதலிய சென்ற நூற்றாண்டு இலக்கியங்களை பதிப்பித்து வரும் புலவர் அ. பழனியப்பன் இச்சிறிய பதிக நூலையும் பதிப்பித்துள்ளார். ஈரோடு மாவட்டம் பவானியை அடுத்துள்ள ஜம்பையில் வாழ்ந்த கண்ணிழந்த இஸ்லாமியர் இயற்றிய பதிகம் இது. முகமது கனிராவுத்தர் மகன் காசீம்சாயுபு, அம்மைநோயால் கண்ணிழந்தவர். தனது தமிழ்ப்புலவர் நண்பர்களின் உதவியால்

கேள்விஞானத்தால் செய்யுள் இயற்றும் திறமை பெற்று ஆசுகவியாக விளங்கியவர். இப்பதிகத்தை இவர் சொல்லஜம்பையைச் சேர்ந்த ஆசு கவிப்புலவர் ஆறுமுக முதலியார் சுவடியில் பதிந்திருக்கிறார். விநாயகர் துதி அவையடக்கம் ஆகியவற்றோடு அமைந்த இப்பதிப்பகம்காளியின் தெய்வ உருவ அமைதிகளை சிறப்பித்துக் கூறிகாத்தருள வேண்டுகின்றது. தாள், அச்சுநூல்கள் அரிதாக இருந்தகாலத்தில் மனதிலேயே பயின்று பாடல்கள் இயற்றி ஓலைச்சுவடிகளில் பதிந்த தைப்பார்க்கும் போது அவற்றைப் பதிப்பிப்பதும், சுவடிகளைப் பாதுக் காப்பதும் எவ்வளவு இன்றிய மையாதது என்பதை இப்பதிகப்பதிப்பு கருதிப்பார்க்கச் செய்கிறது.

**சு.இராசகோபால்,** சென்னை.

**நந்தர், ரிஷிபுத்திரன், 2017, வெளியீடு நந்தர் பதிப்பகம், நாமக்கல், விலை ரூ.250/-**

ஆசிரியர் நந்தர் எழுதியுள்ள ரிஷிபுத்திரன் என்னும் நூல் சைவ சமயக் குரவர்களில் ஒருவரும் திருவாசகத்தை அளித்த மாணிக்கவாசகரின் வாழ்க்கை வரலாற்றை ஆய்வின் வழியாக எடுத்தியம்பும் நூலாக அமைந்துள்ளது. மாணிக்கவாசகர் காலம் குறித்து பல ஆய்வுகள் இதுவரை நடத்தப்பட்டு அவை வெளிவந்துள்ள நிலையில் இந்நூலாசிரியர் புதிய கோணத்தில் மாணிக்கவாசகரின் காலத்தையும் அவரது குலத்தையும் விரிவாக குறிப்பிடுகின்றார். அத்துடன் மாணிக்கவாசகருடன் தொடர்புடைய திருப்பெருந்துறைப் பெருமைகளையும் அங்குள்ள ஆத்மநாதர் கோயில் ஆகியவற்றை எடுத்துரைக்கின்றார். இந்நூலில் வேதங்களின் காலம் ஆகமங்கள் தோன்றிய காலம் ஆகியவற்றையும் சித்த மரபு குரு சிஷ்ய மரபு மற்றும் நந்திபரிவம்சம் ஆகியவற்றைப் பற்றியும் ஆய்வு செய்துள்ளார். மாணிக்க வாசகர் சித்தர்களின் குருவாக விளங்கிய திருநந்திதேவரின் அவதாரமே என உறுதிபடக் குறிப்பிடும் ஆசிரியர் மாணிக்க வாசகரின் அற்புத நிகழ்வுகளையும் சுட்டுகின்றார். தமிழக அரசின் முதல் பரிசை பெற்ற இந்நூல் அழகுற அச்சிடப்பட்டுள்ளது பாராட்டுக்குரியது.

**சு.இராசவேலு,தஞ்சாவூர்**

**திருவேள்விக்குடி ஸ்ரீ மணவாளேஸ்வரர் திருக்கோயில் வரலாறு, மா. சந்திரமூர்த்தி, அர.வசந்தக்கல்யாணி, 2016, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 160 பக்கங்கள், படங்கள் - 30, விலை.125/-**

திருவிளக்குடி என அழைக்கப்டும் திருவேள்விக்குடி காவிரியாற்றின் வடகரையில் அமைந்த 23வது சிவ தலமாகும். இக்கோயிலைப் பற்றி பொ.ஆ.7ஆம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர், சுந்தரர் ஆகியோர் பாடியுள்ளனர். சோழர்கள் காலத்தில் இவ்வூர் குறுக்கை நாட்டு விடேல்விடுகு சதுர்வேதி மங்கலத்தில் இருந்துள்ளது. இவ்வூரில் அமைந்துள்ள ஸ்ரீ மணவாளேஸ்வரர் கோயில் முற்காலச் சோழர் கலைபானியில் முதலாம் ஆதித்தன்(பொ.ஆ.971-907) காலத்தில் கட்டப்பட்டுள்ள தாக அறியமுடிகிறது. பொ.ஆ.7ஆம் நூற்றாண்டிலிருந்து இன்று வரை இவ்வூர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராக இருப்பதை இந்நூல் விவரிக்கிறது. இங்குள்ள கோயிலின் கட்டடக்கலைப் பற்றி குறிப்பிடும் போது விமான அமைப்பை திராவிடக் கலையியல் சார்ந்த வகையைச சுட்டுக்காட்டி இவ்வமைப்பைப் பற்றி நூலசிரியர்கள் தெளிவாக விளக்குகிறார்கள். இக்கோயில் கட்டடக்கலைப் பற்றி விவரிக்கும் போது இங்குள்ள அர்த்த மண்டபம், மகாமண்டபம், தேவகோட்டம், தூண்கள், இராஜகோபுரம் பற்றி ஒவ்வொரு பகுதியிலும் விரிவாக குறிப்பிடுகின்றனர். மேலும் கட்டடக்கலை பற்றி குறிப்பிடும் போது சில கல்வெட்டுகளை பதிவு செய்வது சிறப்புக்குறியது. கோயிலில் உள்ள சிற்பங்களை கருவறை தேவகோட்டச்சிற்பங்கள், அர்த்த மண்டபக் கோட்டச் சிற்பங்கள், சுற்றுப்பிகாரச் சிற்பங்கள், பரிவாரச் சிற்பங்கள், புடைப்புச் சிற்பங்கள், விமானச் சிற்பங்கள், கோபுரச் சிற்பங்கள் என விவரிப்பதும், செப்புத்திருமேனிகளை வகைப்படுத்துவதும் நூலாசிரியர் மா. சந்திரமூத்தி, அர.வசந்தகல்யாணி ஆகிய இருவரும் கலையியல் துறையில் நீண்டகால அனுபவம் பெற்றவர்கள் என்பதை இந்நூல் வழி வெளிப்படுத்தியுள்ளனர். மேலும் இக் கோயிலைப் பற்றி நூலில் 30க்கும் மேற்பட்ட ஒளிப்படங்களை இணைத்திருப்பதும் களஆய்வு மூலமாக வரலாற்றை வெளிக்கொணந்துள்ளதும் பாராட்டுக்குரியது. இறுதிப் பகுதியில் கோயிலில் உள்ள ஐம்பத்து இரண்டு கல்வெட்டுகளை காலவரன்முறை செய்து அரசர்களின் வரலாற்றை கால வரியாக அமைத்திருப்பது ஆய்வு மாணவர்களுக்குப் பயனுடையது.

**பா.அருண்ராஜ்,தஞ்சாவூர்**

**மா.சந்திரமூர்த்தி, க.ஆ.கவிதா, சென்னை வேளச்சேரி, செல்லியம்மன் திருக்கோயில் சப்த மாதர்கள் ஆலய வரலாறு, கலைத்தாய் பதிப்பகம், 19, ரோஜா தெரு, குறிஞ்சி நகர், போரூர், சென்னை - 600 116 , பக்கம்.48, விலை-30/**

தமிழகத்தில் பழமையும் பெருமையும் வாய்ந்த ஏழு கன்னியர் என வழங்கப்படும் சப்த மாதர்கள் குறித்து சிறு சிறு கட்டுரைகள் டக்ளஸ் பேரட் போன்ற ஆங்கில இதழ்களில் அழகிய படங்களுடன் விரிவாக கடந்த காலங்களில் ஆய்வறிஞர்களால் வெளியிடப்பட்டன. தமிழில் மிக அரிதாக சிறு தெய்வங்கள் குறித்தும் எழு கன்னியர் குறித்தும் நூல்கள் குறைவானவை. இவை சிற்பக்கலை அடிப்படையிலும் எழுதப்படாத நிலையில் இந்நூல் சிற்பக்கலை இயலில் அனுபவம் மிக்க ஆசிரியரால் வெளியிடப்பட்டுள்ளது வரவேற்கத்தக்கது. சென்னைக்கு அருகிலுள்ள வேளச்சேரியில் அமைந்துள்ள செல்லியம்மன் ஆலயம் பல்லவர் கால சுவடுகளைப் பெற்ற பழமையான திருக்கோயில் வெளிச்சேரி என கல்வெட்டுகளில் அழைக்கப்படும் இப்பகுதியில் சாலைப் பகுதியிலேயே பெரும் நெரிசலுடன் அமைந்துள்ள பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் எழு கன்னியர் குறித்த சிற்பக்கலைக் கூறுகளை தெளிவாக எடுத்தியம்புகின்றனர் ஆசிரியர்கள் இருவரும். படிமக்கலை வரலாற்றிற்கு குறிப்பாக சப்த மாதர் குறித்து ஆய்வு செய்வோருக்கு ஓர் அறிமுக நூலாக இந்நூல் அமையும் .

**சு.இராசவேலு,தஞ்சாவூர்**

**ஆடிப்புலியூர் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி திருக்கோயில் வரலாறு, மா. சந்திரமூர்த்தி,2017, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 128+32 பக்கங்கள், படங்கள் - 63, விலை.125/-**

ஆடிப்பலியூர் திருவாரூர் மாவட்டம், குடவாசல் அருகில் காவிரியாற்றின் கிளை நதியான முடிகொண்டான் ஆற்றின் தென்கரையில் இயற்கை பொங்கும் சூழலில் அமைந்த சிறப்புமிக்க ஊராகும். பொதுவாக தமிழர் வழிபாட்டில் பெருந்தெய்வ வழிப்பாட்டிற்கு முன்னரே சிறு தெய்வ வழிபாடு இருந்திருக்கிறது. இவ்வூரில் அமைந்துள்ள ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி கோயில் சிறுதெய்வ வழிபாட்டின் அடையாளமாக இங்குள்ள மக்கள் வழிபட்டுவருகின்றனர். இக்கோயில் காலத்தால் பிற்பட்டதாக இருந்தாலும் கோயிலில் தொடக்க காலத்தில் அங்காளம்மன், பாவடைராயன், மதுரைவீரன், கருப்பனசாமி, இருளன், காட்டேரி, பேச்சியம்மன், முன்னடியான் ஆகியவை

சிறுதெய்வ சுடுமண் உருவங்களாக இருந்துள்ளன. அங்காள பரமேஸ்வரி கோயிலில் தாண்டவராய மூர்த்தி, அகோர வீரபத்திரர், மதுரை வீரன், பொம்மி, வெள்ளையம்மாள், பாவடைராயன், கருப்பணசாமி, இருளன், காட்டேரி, பேச்சியம்மன், தூண்டில் வீரன் ஆகிய சிறு தெய்வங்களுக்கு தனித்தனி ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளதையும் ஆலயங்களின் கட்டட அமைப்பையும் அவற்றின் அளவுகளுடன் நூலாசிரியர் விவரித்துள்ளார். இக்கோயில் சிற்பங்களை அங்காளம்மன், வலம்புரி விநாயகர், பைரவர், தாண்டவராயமூர்த்தி, இடம்புரி விநாயகர்,யோக ஆஞ்சிநேயர், பாலமுருகன், அகோரவீரபத்திரர், ஆட்டுத்தலை நக்கன், பாவாடைராயன், இருளன், ரேனுகாதேவி சிற்பம், நாககன்னி ஆகியோரின் சிற்பங்களை நூலாசிரியர் உயரம், அகலம் என்று செ.மீ அளவுகளில் துள்ளியமாக அளந்து படிமக்கூறுகளை ஆராந்துள்ளது சிற்பக்கலை ஆய்வின் மீது இந்நூலாசிரியர் ஆழங்கால்பட்ட அறிவை வெளிப்படுத்துகிறது. இங்குள்ள சுதைச்சிற்பங்களை செவிவழிச் செய்தி கொண்டு தொன்ம வரலாற்றை விவரிப்பது சிறு தெய்வ வழிப்பாட்டின் முக்கியத்துவத்தை காட்டுகிறது. இவை தவிர இவ்வூரில் உள்ள பிற கோயில்கள் பற்றியும் ஆராந்துள்ளார். காலத்தால் பிற்பட்டதாக இக்கோயில் இருந்தாலும் நூலாசிரியர் சிறுதெய்வ வழிப்பாட்டின் தொன்மங்களையும், கோயிற் சிற்பம் மற்றும் கட்டடக்கலை கூறுகளையும் வரலாற்று முறையில் ஆராய்ந்திருப்பது பாரட்டுக்குரியது.

**பா.அருண்ராஜ்,தஞ்சாவூர்**

**கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டுகள்: இல. தியாகராஜன் 2017. கங்கைகொண்ட சோழபுரம் மேம்பாட்டுக்கழக வெளியீடு. பக்கங்கள் 208+48 பக்க வண்ணப்படங்கள். விலைரூ: 550.**

வடக்கே கங்கை வரையிலும் கிழக்கேகடாரமும் தெற்கே இலங்கையும் மேற்கேபல பழந்தீவுகளையும் வென்ற இராசேந்திர சோழனின் வாழ்வு போர்க்கள வாழ்வே. இதற்கிடையில் இவ்வளவு பெரியநகரையும் கோயிலையும் உருவாக்கிய செயல்வியப்பிற்குரியது. இக்கோயிலுக்கு அவனது காலத்திலேயே கொடைகள் நல்கப்பட்ட போதிலும் அவைகல் வெட்டாக ஆவணப்படுத்தவாய்ப்பில்லாமல் போயிற்று. பொ.ஆ. 1033-34ல் அவன் கொடுத்த கொடைகளும் பொ.ஆ 1038, 1048களில் முதலாம் இராஜாதிராஜன் கொடுத்த கொடைகளும் பொ.ஆ. 1068ல் வீரஇராஜேந்திரன் கொடுத்த கொடைகளும் ஒருசேரத் தொகுக்கப்பட்டு இக்கோயிலில் 216 நீண்டவரிகளில்

கல்வெட்டாகப் பதியப்பட்டுள்ளன. அதுபோலவே பொ.ஆ. 1892ல் தொடங்கி அண்மைக்காலம் வரையில்கங்கை கொண்ட சோழபுரத்தில் படியெடுக்கப்பட்ட 48 கல்வெட்டுகள் பாதிவாசகத்துடனும் பாதிகுறிப்புகளுடனும் முழுமை பெறாதது சில பல தொகுதிகளில் பரவலாக வெளியிடப்பட்டிருந்தன. வீரராஜேந்திரன் போல இந்நூலாசிரியர் ஒரு முழுத்தொகுப்பாகத் தொகுத்துள்ளார். மேலும்கங்கை கொண்ட சோழபுரம் குறித்த குறிப்புகளுடன் தமிழகத்தில் பரவலாக 62 இடங்களுக்குமேல் காணப்படும் கல்வெட்டுகளையும் இந்நூலில் சேர்த்தி ருப்பது நல்ல தொருபணியாகும். இருபகுதி களாக அமையும் இந்நூலில்கல் வெட்டுகள் காலவரிசையில் தொகுக்கப்பட்டு முன்பதிப்புக் குறிப்புகளுடனும் கல்வெட்டுச் செய்திகுறிப்புகளுடனும் இடம்பெற்றுள்ளமைபயன் படுத்தும் எவருக்கும் ஒரு எளிய வசதியாக அமைகிறது. ஊர்ப்பெயர், தெய்வப்பெயர், அரசர்கள், அரசுசார்ந்தோர், கொடைகள், நாட்டுப்பிரிவுகள், வரிகள், அளவைகள், மாளிகைகள், வேளங்கள் ,வணிகம்,




சமூகப்பிரிவுகள், நீர்ப்பாசனம் என்று கல்வெட்டுச் செய்திகள் பகுக்கப்பட்டுச் சிறப்புச் செய்திகள் தடித்த எழுத்துக்களில் தந்துள்ளமை செய்திகளை வாசிப்போர் மனதில் எளிதாகப்பதிவு செய்கின்றன. இராசேந்திர சோழனேதன் பெயரில் இந்நகரையும் கோயிலையும் உருவாக்கித்தலை நகரை தஞ்சையிலிருந்து இங்கு கொண்டு வந்தான் எனினும் அவனுக்கும் பல ஆண்டுகள் முன்னதாகவே தஞ்சாவூரிலிருந்து இவ்வூருக்கு பராந்தக சோழனின் காலத்தில் (பொ.ஆ. 929) வணிகர்கள் குடிபெயர்ந்து வந்துள்ளனர். இதனை இங்கு நிலத்தடியிலிருந்து மீட்கப்பட்டகல் வெட்டு குறிப்பது சிறப்பான வரலாறாகும் (வ,எண் 1). பொ.ஆ 929 முதல் 1917 வரையிலும்சோழர், பாண்டியர், விஜயநகரர், செஞ்சிநாயக்கர், காலாட்கள் தோழ உடையார் என்று பல்வேறு காலக்கட்ட அரசியல், சமூக, கலைவரலாற்றை ஒரே ஊரை மையமாகக் கொண்டு ஆய்வு செய்ய இத்தொகுப்பு பெரிதும் துணைபுரிகிறது. கல்வெட்டுகளின் படங்களும் மைப்படிகளின் படங்களும் நிறைய இந்நூலில் உள்ளன. ஸ்ரீரங்கம், திருவண்ணாமலை தஞ்சாவூர் எனப்பெரிய கோயில்களுக்குக் கல்வெட்டுத் தொகுதிகள் வந்துள்ள நிலையில் இத்தொகுப்பு இன்னும் பலபெரிய கோயில்கள் மற்றும் ஊர்களின் கல்வெட்டுத்

தொகுப்புகளை ஊக்குவிக்கும் என நம்பலாம். இவ்வகையில் தமிழகக்கல் வெட்டாய்வு, ஆய்வாளர்களிடையே இன்னும் முனைப்புப் பெறும் என்றும் கருதலாம்.

**சு.இராசகோபால், சென்னை.**

**ஏமப்பூர் வேதபுரீஸ்வரர் கோயில், சி.இராகவன், 2017, மங்கையர்க்கரசி பதிப்பகம், விழுப்புரம், 106 பக்கங்கள், 18 டெம்மி, படங்கள் -13, விலை.80/-**

தென்பெண்ணை ஆற்றின் தென்கரையில் வேதபுரீஸ்வரர் கோயில் திருநாவுக்கரசரால் வைப்புத்தலமாக பாடப்பட்ட சிவத்தலமாகும். இக்கோயில் பல்லவர்கள், இராஷ்டிரகூடர்கள், சோழர்கள் ஆகியோர்களின் காலக் கல்வெட்டுகளை நூலாசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். இக்கோயிலில் உள்ள இருபத்தியொரு கல்வெட்டுகளைக் கொண்டு இவ்வூரின் வரலாற்றை விவரித்துள்ளார். இப்பகுதியின் வரலாற்றை பொ.ஆ.7ஆம் நூற்றாண்டு முதல் பொ.ஆ.13ஆம் நூற்றாண்டு வரை பல்லவர், இராஷ்டிரகூடர், சோழர் என காலவரிசைப்படுத்தி விரிவாக எழுதியுள்ளது பராட்டுகுறியது. இவ்வூர் கல்வெட்டுகளை பிற ஊர்களில் காணப்படும் கல்வெட்டுகளையும் ஆங்காங்கே பல இடங்களில் சுட்டுகாட்டி விளக்குகிறார். இரண்டாவது பகுதியில் கல்வெட்டுகளைக் கொண்டு கால வரிசைப்படி விளக்குவதும், அவற்றிற்கு நோக்கீடுகளை கொடுப்பதும் வரலாற்றுக்கு வழுசேர்க்கிறது. கோயில் கட்டடக் கலை பற்றி குறிப்பிடும் போது ஒவ்வொரு கட்டடக்கலை அமைப்பையும் களஆய்வு செய்ர் நீளம், அகலம் போன்றவற்றை துள்ளியமாக அளவிட்டுக் குறிப்பிடுவது சிறப்புக்குறியதாகும். சிற்பக்கலைப் பற்றி குறிப்பிடும் போது கருவரை தேவகோஷ்ட படிமங்கள், அர்த்த மண்டப தேவகோட்ட படிமங்கள், அர்த்த மண்டபச் சிற்பங்கள், பரிவார ஆலயச் சிற்பங்கள், செப்புத் திருமேனிகள் , சுதைச்சிற்பங்கள் என சிற்பங்களின் படிமக் கூறுகளை விளக்கமாக நூலசிரியர் வெளிப்படுத்துவது இக்கோயிலில் உள்ள சிற்பங்களின் கலைத்திறனையும், காலம்தோறும் ஏற்பட்ட கலை வளர்ச்சியையும் அறிந்துக் கொள்ள முடிகிறது. இறுதியாக இக்கோயிலில் வழக்காறுகளாகக் கொண்டுள்ள வழிபாட்டு முறைகளையும் நிர்வாகத்தையும் குறிப்பிடுகிறார். மேலும் இக்கோயிலில் உள்ள கட்டடகலை, சிற்பங்கள், கல்வெட்டு என பதினைந்து புகைப்படங்களை இணைத்திருப்பது வரலாற்றை கள ஆய்வு மூலம் எழுதுவது முழுமைப் பெறும் என்பதை நூலாசிரியர் காட்டியுள்ளார். தமிழகத்தில் உள்ள பல

கோயில்கள் இன்றளவும் அதனுடைய வரலாற்றை வெளிப்படா வண்ணம் உள்ளன. இந்நூலாசிரியர் போன்று தமிழரின் பாரம்பாரிய கோயில்களின் வரலாற்றை எழுதுவது இவர் முன்னோடியாக இருப்பது பாரட்டுக்குறியதாகும்.

**பா.அருண்ராஜ்,** தஞ்சாவூர்

**அரியலூர் மாவட்டக் கல்வெட்டுகள், செப்பேடுகள் தொகுதி-2: இல.தியாக ராஜன் - 2017. மீனாட்சி இராமசாமி கல்வி நிறுவனங்கள் / காமரசவல்லி பதிப்பகம், பக்கங்கள்566 (8+496+64) விலைரூ750/-**

இந்ததொகுதியில் *502* கல்வெட்டுகளும், *2* செப்பேடுகளும் வாசகம், முன்பதிப்பு, குறிப்புரை மற்றும் ஊர் வாரியாகக் காலவரிசையில் தரப்பட்டுள்ளன. கங்கைகொண்ட சோழபுரம், காமரசவல்லி, கீழப்பழுவூர், கீழையூர், கோவிந்தப்புத்தூர், திருமழபாடி, மேலப்பழுவூர் ஆகிய ஊர்க்கல்வெட்டுகள் இவை. கல்வெட்டுகளில் காணப்படும் கோயில் பெயர்,தெய்வப்பெயர், ஊர்ப்பெயர், மன்னர்கள், சமூகப்பிரிவுகள், அளவைகள், நீர்ப்பாசனவசதிகள், நாட்டுபபிரிவுகள் என்ற தலைப்புகளில் ஒவ்வொரு ஊர்க்கல்வெட்டிலிருந்தும் செய்திகள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.'சினசிந்தாமணிப் பெருந்தெருவில் இட்டு திரிகிற செக்கில் நாள் ஒன்றுக்கு உபையமாக அளக்கும் எள் எண்ணை நாழி' (வ.எண் *77*); 'மகா போதி பிறந்துடைய வாமற்கு' (வ. எண்.*77*); 'இம்மடத்துக்கு ஸேஷமாக நீர்வரத்துத் தந்த கமுகத் தோட்டம்' ; 'பெருங்குசவனுக்கு நிசதம் மூன்று குடுவையும் நிசதம் மூன்று சட்டியும் மற்றும் வேண்டும் கலமும் இடக்கொடுத்த பங்கொன்று' (வ.எண். *117*);'கல்லுவித்த திருமஞ்சணக்கிணறு ஏத்தமிட்டுக் கன்றுகாலிக்கு இறைப்பதாகவும்' (வ.எண். *105*); 'தாலச் செம்மைப் பொன் இருபத்தைய்ங் கழஞ்சு' (வ.எண். *225*) என எல்லாக் கல்வெட்டுகளின் இடையேயும் வாசகவரிகளை தடித்த எழுத்தில் தருவது இந்த*502* கல்வெட்டுகளின் செய்திகளையும் அறிய முனைப்புத் தருகிறது. பல கல்வெட்டுகளை நேரடியாகவும், மைப்படிகளுடனும் படமெடுத்து இந்நூலில் தெளிவாக இணைத்திருப்பது கல்வெட்டுகளைத்தொல்லெழுத்து களிலேயே படிக்க முயல்வோர்க்கு நல்லதொரு பயிற்சி ஏடாக இந்நூலைக் காட்டுகிறது. பல ஆர்வலர்கள், ஆய்வாளர்கள், வல்லுநர்களின் களப்பணிகளும் இந்நூலில் படங்களாகச்



சேர்க்கப்பட்டுள்ளன. இது தமிழகக் கல்வெட்டாய்வை முன்னெடுப்பவர்களுக்கு நல்ல ஊக்கம் தரக்கூடியசெயலாகும். ஒவ்வொரு வரலாற்றாய்வாளரும், குழுவினரும் இந்நூலைப் பெற்றுப் பெரிதும் பயனடையும் வகையில் இத்தொகுப்பு அமைந்துள்ளது.

**சு. இராசகோபால்,** **சென்னை.**

**மதுரை சுல்தானியர் காசுகள், ஆறுமுக சீதாராமன், அப்துல் ரசூல் யூசுப், தனலட்சுமி பதிப்பகம், 12, இராஜராஜன் நகர், மானோஜிப்பட்டி தெற்கு, தஞ்சாவூர் 613004, பக்கம்-64, விலை150/-**

கடந்த நூற்றாண்டில் தமிழகத்தில் நாணயங்கள் பற்றிய ஆய்வுகள் சில குறிப்பிட்ட ஆய்வறிஞர்களால் மட்டுமே செய்யப்பட்டு நூல்கள் வந்தன. தமிழகத்தில் வட இந்தியாவில் கிடைக்கின்ற நாணயங்கள் போன்று அதிக அளவில் புதையல்கள் கிடைக்காமையும் அரச மரபுகளின் நாணயங்கள் குறைந்த அளவே கிடைத்தமையாலும் இந்நிலை இருந்து வந்தது. முப்பதைத்தைந்து ஆண்டுகளாக தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் கிடைத்த நாணயங்களைச் சேகரித்து தமிழகத்திலும் அதிக அளவில் நாணயங்கள் அரச மரபுகளாலும் குறுநில மன்னர்களாலும் வெளியிடப்பட்டன என்பதை கண்டறிந்து தொடர்ந்து பல நூல்கள் வெளியிட்டு வருகின்ற இந்நூலின் ஆசிரியர் மதுரை சுல்தானியர் காசுகள் என்னும் தலைப்பில தற்பொழுது கிடைத்த பல நாணயங்களை பட்டியலிட்டு அவற்றின் தன்மைகளையும் குறியீட்டுச் சின்னங்களையும் அவற்றில் எழுதப்பட்டுள்ள எழுத்தமைதி பெயர்கள் பட்டங்கள் ஆகியவற்றை பொருளுடன் விளக்குகின்றார். ஏற்கனவே மதுரை சுல்தானியர் காசுகளை அவர் சில நூல்களில் வெளியிட்டிருந்தாலும் நாணயவியல் ஆய்வில் இக்காசுகள் புதிய வரவுகள். புதியதாகக் கிடைக்கின்ற காசுகளை மரபுவழிப்பெயரில் தனித்தனியாக ஆய்வு செய்து உடனுக்குடன் ஆய்வுலகம் பயன்பெறும் வகையில் வெளியிடுகின்ற ஆசிரியர் தக்க ஒளிப்படங்களை உரிய விளக்கங்களுடன் வெளியிடுவது பாராட்டுக்குரியது. 14 ஆம் நூற்றாண்டில் மதுரையை தங்களது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்த தில்லி சுல்தானியர்களின் பிரதிநிதிகள் வெளியிட்ட நாணயங்கள் குறித்து விரிவாக இந்நூல் ஆய்வு செய்கின்றது. அந்த வகையில் இந்நூலும் நாணயவியல் ஆய்விற்கு முத்திரைப் பதிக்கும் நூலாக அமைந்துள்ளது என்பதில் ஐயம் ஏதும் இல்லை.

**சு. இராசவேலு,** **தஞ்சாவூர்**

# தொல்லியல் கழக 27ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் செயலர் அறிக்கை

**த**மிழகத் தொல்லியல் கழகத்தின்27 ஆம் ஆண்டுக் கருத்தரங்கமும் ஆவணம் -28 ஆம் இதழ் வெளியீட்டு விழாவும் அரியலூர் மாவட்டம், கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள மீரா மஹாலில் 22,23-07-2017 ஆகிய இரண்டு நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. இக்கருத்தரங்கை கங்கை கொண்ட சோழபுரம் மேம்பாட்டுக் குழுமத்தின் தலைவரும் நமது கழகத்தின் உறுப்பினருமான பொறியாளர் திரு. இரா. கோமகன் அவர்கள் உள்ளூர் செயலராக இருந்து சிறப்புடன் நடத்தினார். தொடக்க விழா மற்றும் ஆவணம் இதழ், பிற நூல்கள் வெளியீட்டு விழா நிகழ்வுகள் முதல் நாளன்று இனிதே நடைபெற்றது.

திரு. இரா.கோமகன் மற்றும் கழகத்தின் செயலர் சு.இராசவேலு அவர்கள் வரவேற்புரை நல்க தொல்லியல் கழகத்தின் வரலாற்றையும் தமிழகத் தொல்லியல் ஆய்வுக்கு ஆவணம் அளித்துள்ள பங்களிப்பையும் கருத்தரங்க நோக்க உரையையும் கழகத்தின் நிறுவனரும் பேராசிரியருமான எ. சுப்பராயலு அவர்கள் மிகச் சிறப்பாக நிகழ்த்தினார்கள். இந்நிகழ்வில் சீர்வளர் மெய்யப்ப தேசிய சுவாமிகள், கோவிலூர் மடம், ஆவணம் இதழ்-28 மற்றும் பிற நூல்களை வெளியிட அவற்றை பாண்டிய நாட்டு வரலாற்றுப் பேரவை புரவலர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள் பெற்றுக்கொண்டு சிறப்புரை நிகழ்த்தினார்கள்

இவ்விழாவில் சென்னைப் பல்கலைக்கழகப் பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறையில் மிகச் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பேராசிரியர் ப. சண்முகம் அவர்களின் தொல்லியல் பணியைப் பாராட்டும் நிகழ்வும் நடத்தப்பட்டது. பேராசிரியர் ப.சண்முகம் அவர்களின் பெயரிலமைந்த அமராவதி என்னும் பாராட்டு நூல் வெளியிடும் இனிதே நடத்தப்பட்டது. பேராசிரியர் சண்முகம் அவர்களை தொல்லியல் கழகத்தின் மூத்த பேராசிரியர்களும் அவருடைய மாணவர்களும் பாராட்டிப் பேசினர். இதனைத் தொடர்ந்து கழகத்தின் உறுப்பினர்கள் எழுதிய பல நூல்களும் வெளியிடப்பட்டன. அறிஞர்கள் பலர் வாழ்த்துரை வழங்க தொடக்க விழா இனிதே நிறைவேறியது.

தொடக்க விழாவைத் தொடர்ந்து கழகத்தில் நிறுவப்பட்ட தி.ந.சுப்ரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

வரிசையில் சொற்பொழிவை முனைவர் டி. தயாளன் தலைமையில் புதுச்சேரி மத்தியப் பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர் கா. இராஜன் அவர்கள் உரை நிகழ்த்தினார். இதனைத் தொடர்ந்து சிறப்புச் சொற்பொழிவாக மத்திய தொல்லியல் துறையைச் சார்ந்த தொல்லியல் கண்காணிப்பாளர் திரு. பி.எஸ். ஸ்ரீராமன் அவர்கள் கீழடி அகழாய்வு குறித்து உரை நிகழ்த்தினார்.

முதல் நாள் பிற்பகல் கருத்தரங்க அமர்வுகள் இனிதே நடைபெற்றன. முதல் அமர்வு பேராசிரியர் ப.சண்முகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இரண்டாவது அமர்வை முனைவர் சொ. சாந்தலிங்கமும் மூன்றாம் அமர்வை பேராசிரியர் சு. இராசவேலுவும் நடத்தினர். இவ்வமர்வுகளில் உறுப்பினர்களின் புதிய கண்டுபிடிப்புகள் குறித்த கட்டுரைகள் பல பேசப்பட்டன.

இரண்டாம் நாள் நிகழ்வில் காலை 7 மணியளவில் உறுப்பினர்கள் அனைவரையும் கங்கை கொண்ட சோழபுரம் சுற்றியுள்ள வரலாற்றுப் புகழ்பெற்ற இடங்களுக்கு சிற்றுலாவாக அழைத்துச் சென்றனர். இவ்வேற்பாடுகளை உள்ளூர் செயலர் பொறிஞர் கோமகன் செய்திருந்தார். கங்கை கொண்ட சோழபுரத்துடன் தொடர்புடைய பல பகுதிகளை உறுப்பினர்கள் அனைவரும் கண்டு களித்தனர்.

இரண்டாம் நாள் காலை 10 மணி அளவில் கோவிலூர் ஆதினம் நிறுவிய அறக்கட்டளைச் சொற்பொழிவை முனைவர் சு.இராஜகோபால் தலைமையில் தமிழகத் தொல்லியல் ஆய்வுத் துறையில் இருந்து பணி ஓய்வு பெற்ற உதவி இயக்குநர் முனைவர் தி. சுப்பிரமணியன் அவர்கள் ஆற்றினார்கள். இதனைத் தொடர்ந்து கருத்தரங்கின் நான்காம் அமர்வு முனைவர் செந்தி நடராஜன் அவர்கள் தலைமையில் நடத்தப்பட்டது. ஐந்தாம் அமர்வை பேராசிரியர் ந. அதியமான் தலைமை ஏற்று நடத்த கருத்தரங்க அமர்வுகளில் கட்டுரைகள் பல அளிக்கப்பட்டு அமர்வுகள் இனிதே முடிவுற்றன. அன்று மாலை நிறைவு விழாவும் கருத்தரங்கிற்கு முன்னதாக நடைபெற்ற கல்வெட்டுப் பயிற்சியில் பங்கு பெற்றவர்களுக்கு சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. பொதுக்குழுவிற்குப் பின் இரண்டு நாள் கருத்தரங்கம் அத்துடன் இனிதே முடிவுற்றது.

**சு.இராசவேலு,**

**செயலர், தொல்லியல் கழகம்**

# நன்றி

**இவ்விதழில் இடம் பெற்றுள்ள கண்டுபிடிப்புகளை எழுதியுள்ள ஆசிரியர்களுக்கு கள ஆய்வில் உதவிபுரிந்த கீழ்கண்ட அனைவருக்கும் கட்டுரை ஆசிரியர்களின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

1. **பெரிய குட்டி மடுவு நடுகற்கள்** - முனைவர்கள் ர.பூங்குன்றன், சு.இராசகோபால், திருகோவை து.சுந்தரம். திரு.சுகவனமுருகன்
2. **ஏற்காடு செம்மநத்தம் வட்டெழுத்து நடுகல்**-முனைவர்கள் ர.பூங்குன்றன், சு.இராசகோபால், து.சுந்தரம்
3. **வெங்கலம் கல்வெட்டுகள்** - திரு.அரும்பாவூர் மகாத்மா செல்வபாண்டியன்
4. **புத்தூர்** - முனைவர் சு.இராசகோபால்
5. **குளிபிறை கல்வெட்டு** - திரு.கரு. இராசேந்திரன்
6. **பனிக்கன் வயல் கல்வெட்டு (புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுகள்)** - திரு.குன்னக்குறும்பி க.சேதுபதி
7. **மங்காநல்லூர் கல்வெட்டுகள்**- திரு. கேசவன் ஸ்ரீராம், முனைவர். சு.இராசகோபால்
8. **சீதப்பால் பாறைக் கல்வெட்டு**-திரு.நாஞ்சில் பைசல்
9. **கொட்டாரம் கல்மண்டபக் கல்வெட்டு** - செட்டு வெள்ளாளர் ஊர்த்தலைவர் ஓவியர் கோபாலகிருஷ்ணன். திரு. ச.அனந்தசுப்பிரமணியன் காடையூர் தாய்க்கல் சிற்பம் - திரு. நா.கணேசன், பொறியாளர், அமெரிக்கா.
10. **ஆச்சிப்பட்டி பாளையக்காரர் காலத்து நடுகற்கள்** - நந்தகுமார், இராமபட்டணம் ஜமீன்.
11. **எலயமுத்தூர் அடுக்குநிலை வீரக்கம்பம்:** திரு. இளங்கோவன்.
12. **கோவில் பொறையூர் கல்வெட்டு** - திரு. சேது, திருவண்ணாமலை
13. **தேவஸ்தானம் கல்வெட்டுகள்**- வினோத், திருச்சிராப்பள்ளி
14. **திருச்சிராப்பள்ளி மலைக் கல்வெட்டு**- முனைவர் யதிஸ் குமார், திரு. ஆரோக்கியம்,வினோத், திருச்சிராப்பள்ளி

15 **எலயமுத்தூர் அடுக்குநிலை வீரக்கம்பம்**- திரு.இளங்கோவன், துரை. பாஸ்கரன். பனியம்பள்ளி நடுகல்,து- துரை.பாஸ்கரன்

16. தியாகாராஜன் எழுதிய கல்வெட்டுகள் குறித்த கட்டுரைகளுக்கு தகவல் கொடுத்த திருவாளர்கள் வெ. பாண்டுரங்கன், குமரவேல்,

முனைவர். செந்தில் குமார், மாணவர்கள் கி. நவீன், க.விக்னேஷ், ப.ஜெகநாதன், தி.கார்த்திகேயன், கோயில் குருக்கள் து.சிவசுப்பிர மணியன்

17. **களக்குடி நடுகல்**–அளித்த செ. முனிஸ்வரன்

18. பனமண்ணசெப்பேடு மூலத்தை எஸ். ராஜேந்து, கோழிக்கோடு அவர்கள் முதலில் பதிப்பித்துள்ளார்

19. தேவஸ்தானம் மற்றும் கீழைக்குறிச்சி கல்வெட்டுகளை மையொற்றி ஒளிப்படங்கள். பா.பாலமுருகள். மைசூர்.

20. முக்குணம் உரல் கல்வெட்டு எஸ்.ராமச்சந்திரன்,சென்னை

# அஞ்சலி



**திருமுடி அசோக்குமார்**
**16.10.1961 - 20.10.2017**

**தொ**ல்லியல் கழகத்தின் புரவலாக இருந்து புதுச்சேரியில் 1999ஆம் ஆண்டு நடைபெற்ற தொல்லியல் கழகத்தின் 10ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் சிறப்புற நடைபெற பெரிதும் ஒத்துழைத்து பல உதவிகளைச் செய்த திருமுடி அசோக்குமார் அவர்கள் 20.10.2017 அன்று இயற்கை எய்தினார். சென்னை அருங்காட்சியகத்திற்கு பல அரும்பொருட்களை நன்கொடையாக வழங்கியுள்ள இவர். புதுவை பிரெஞ்சு இந்திய நிறுவனத்துடன் மிகுந்த தொடர்பு உடையவர். இவர்1964 முதல் 1971 வரை புதுவையின் நாடாளுமன்ற உறுப்பினராகவும் இருந்துள்ளார். பாகூர் சு.குப்புசாமியையும், வில்லியனூர் ந. வெங்கடேசனையும் கல்வெட்டுத் துறைக்கு ஆற்றுப்படுத்தியவர். இவரது இழப்பால் வாடும் அவரது குடும்பாத்தாருக்கும், நண்பர்கள் குழாத்திற்கும் தொல்லியல் கழகம் தனதுஆழ்ந்த இரங்களைத் தெரிவித்துக் கொள்கிறது.



**திரு. எம்.எஸ். இராம்ஜி**
**11-05-1980 - 12-03-2018**

**த**மிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையில் பல்கலைக்கழக நல்கைக் குழுவின் இராஜீவ் காந்தி தேசிய நல்கையின் கீழ் முதுநிலைஆய்வு மாணவராக விளங்கிய திரு. எம்.எஸ். இராம்ஜி அவர்கள் சிறிது காலம் உடல் நலக் குறைவு ஏற்பட்டு கடந்த 12-03-2018 அன்று இயற்கை எய்தினார். திரு. இராம்ஜி அவர்கள் 11-05-1980 அன்று அரியலூர் மாவட்டம் கீழக்குளத்தூரில் பிறந்தவர். கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையில் முதுகலை முடித்தபின் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் முதுநிலைப் பட்டயம் கல்வெட்டு மற்றும் தொல்லியல் பாடத்திலும் தேர்ச்சிபெற்றார். அரியலூர் பகுதியில் தொல்லியல் கள ஆய்வுகள் மேற்கொண்ட இவர் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் ஆவார். இவரது இழப்பை இழந்து வாடும் இவரது குடும்பத்தாருக்கு தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள்

**அருண்ராஜ்**.பா(675),தஞ்சாவூர்

**இந்திரஜித்**.கு(878),பேராவூரணி

**இரமேஷ்**.ஆர்(477),கயபாக்கம்

**இரமேஷ்**.இரா (412)சென்னை

**இரமேஷ்**.பி(668),சென்னை.

**இரமேஷ்குமார்**.ச.மு(508), அவிநாசி

**இரவீந்திரன்**.கோ(216),கோயம்புத்தூர்

**இராசவேலு**.சு(12),தஞ்சாவூர்

**இராசேந்திரன்**.கரு(16),மேலப்பனையூர்

**இராஜன்**.க(2),பாண்டிச்சேரி

**இரவிச்சந்திரன்**.பெ(376),அரியலூர்

**இளங்கோ**.ஆ,குளிபிறை

**உத்திராடம்**.கோ(286),சென்னை.

**கலைச்செல்வன்**.வை(789),சேலம்

**கனகராஜ்**.மு(708),பெருங்குடி

**காயத்திரி**.சி.ஆர்(362),சென்னை

**கார்த்திகேயன்**.இரா(665),ஒரத்தநாடு

**கார்த்திகேயன்**.த(859),அரியலூர்

**கிருஷ்ணமூர்த்தி**.ச(234),சென்னை

**கோவிந்தராஜ்**.செ.(274),கிருஷ்ணகிரி

**சக்திபிரகாஷ்**.பி(872),ஈரோடு

**சங்கர்**.அ.(421),தஞ்சாவூர்

**சதாசிவம்**.அ(639),உடுமலைப்பேட்டை

**சந்திரா.சு.(577),**மதுரை

**சீனிவாசன்.கே(746),**ஒமலூர்.

**சுகவனமுருகன்(250),**காவேரிப்பட்டினம்

**சுந்தரம்.து(556),**கோயம்புத்தூர்

**சுப்பராயலு.எ(1),**கோயம்புத்தூர்

**சுப்பிரமணியன்.தி(77),** மூக்கம்பட்டி

**சுபாஷனி.இரா.(780),**சென்னை

**சுரேஷ்.க(596),**சிறுநேசலூர்

**செந்தாமரை.செ.(582),**மதுரை

**செந்தில்வேலன்.ஜெ(810),** மகாதானபுரம்

**செந்தீ நடராசன்.(300),**நாகர்கோவில்

**சேகர்.இரா(527),**வேலூர்

**ஞானகுரு.செ(879),**உடையாளூர்

**ஞானசேகரன்.ஆ(760),**போடிநாயக்கனூர்

**தங்கதுரை.த(440),**பாத்தம்பட்டி

**தியாகராஜன்.இல(50),**அரியலூர்

**திருமூர்த்தி.கோ(93),**சென்னை

**தேவிஸ்ரீ.கி.(662),**தஞ்சாவூர்

**நாகராசுகணேசுகுமார்.வே(682),**அனுப்பர்பாளையம்

**நாகராஜன்.ப.த(673),**சென்னை

**நெடுஞ்செழியன்.வே.(651),**திருவண்ணாமலை

**பரந்தாமன்.சீ.(720),**கிருஷ்ணகிரி

**ப்ரியாகிருஷ்ணன்.(622),**சென்னை.

**பவானி.மா(256),**தஞ்சாவூர்

**பவுசியாபேகம்.ச.இ,**சத்தியமங்கலம்

பாபு.கு(559),புதுச்சேரி

பார்த்திபன்.வே(856),திருச்சிராப்பள்ளி

பாலமுருகன்.ச.(709),வேங்கிக்கால்

பாலமுருகன்.பா(543),மைசூர்

பூங்குன்றன்.இரா (25),காட்பாடி

பூபாலன்.ப(230),இராணிப்பேட்டை

பெரியார் மன்னன்,பி வாழப்பாடி

பெருமாள்.அ.க(542),நாகர்கோயில்

பெருமாள்.கோ(831),மாசிநாயக்கன்பட்டி

பொன்னம்பலம்,சி(757),சேலம்

பொன்னுசாமி.க(776),பல்லடம்.

மங்கையர்கரசி.வீ(57),விழுப்புரம்.

மாணிக்கராஜ்.சி (569),பொடிநாயக்கனூர்

முத்துக்குமார்(443),திருவப்பூர்

முருகன்.ந(771),திருச்சிராப்பள்ளி

யதீஸ்குமார்.வி.ப.(398),திருச்சி

ரமேஷ்குமார்.ச.மு(508),அவிநாசி

ராஜா.ஆ.(480)தஞ்சாவூர்

ராஜாமுகமது.ஜெ(116),புதுக்கோட்டை

ராஜேஷ்.மு.(339),பெங்களூரு

ருக்மாங்கதன்.ஆர்(784),மதுரை

விசயவேணுகோபால்.கோ(48),புதுச்சேரி

வீரராகவன்.சி(447),விழுப்புரம்

வீரராகவன்.நா.(447),பெங்களூரு

வெங்கடேசன்.ந(265),வில்லியனூர்

**வெங்கடேசன்.பொன்(719),ஆறகளூர்**

**வேலுசாமி,வி.ஏ,(873),சென்னை.**

**ஜான்பீட்டர்.பி,(198),சேலம்**

**ஜீவநாராயணன்(829),பெத்தநாயக்கன் பாளையம்**

**ஸ்ரீதரன்.கி.(13),சென்னை**

**Archaeological Society Thanjavur - 613010**
**RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2018**

| Receipts | Amount | | Payments | Amount |
|---|---|---|---|---|
| To Opening Balance | | | Courier & Postage | 9,427 |
| Cash in hand | 14,881 | | Stationery | 7,327 |
| | | | Xerox | 1,240 |
| Cash at Bank | | | Printing Charges | 1,08,145 |
| Indian bank | 1,528 | | Salary | 15,000 |
| SBI | 5,726 | | Audit Fees | 1,500 |
| BOI | 11,477 | | Honorarium | 10,000 |
| Book Sales | 17,519 | | Frieght Charges | 370 |
| Membership Fees | 1,00,000 | | Travelling Expenses | 144 |
| Donation | 9,000 | | Sundries | 5,085 |
| Interest | 47,662 | | Bank FD Commission | 235 |
| Grant (ICHR Newdelhi) | 8,000 | | Fixed Deposit | 5,91,000 |
| Fixed deposits | 6,52,000 | | Closing Balance | |
| | | | Indian Bank- (529) | 5,952 |
| | | | BOI - (442) | 14,336 |
| | | | SBI - (159) | 5,557 |
| | | | Cash in Hand | 92,475 |
| TOTAL | 8,67,793 | | TOTAL | 8,67,793 |



## ARCHAEOLOGICAL SOCIETY THANJAVUR - 613010

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2018

| | | | | | |
|---|---|---|---|---|---|
| To | Courier & Postage | 9,427 | By | Book Sales | 17,519 |
| | Stationery | 7,327 | | Membership Fees | 1,00,000 |
| | Xerox | 1,240 | | Donation | 9,000 |
| | Printing Charges | 1,08,145 | | Interest | 47,662 |
| | Salary | 15,000 | | Grant (ICHR Newdelhi) | 8,000 |
| | Audit Fees | 1,500 | | | |
| | Honorarium | 10,000 | | | |
| | Freight Charges | 370 | | | |
| | Travelling Expenses | 144 | | | |
| | Sundries | 5,035 | | | |
| | Bank FD Commission | 235 | | | |
| | Excess of Income over Expenditure | 23,709 | | | |
| | TOTAL | 1,82,181 | | TOTAL | 1,82,181 |



**ARCHAEOLOGICAL SOCIETY THANJAVUR - 613010**

**BALANCE SHEET AS ON 31st MARCH 2018**

| LIABILITIES | AMOUNT | ASSETS | AMOUNT |
|---|---|---|---|
| Fund A/c | 7,28,021 | Furniture Stand Cupboard | 18,700 |
| | | Fixed Deposit | 5,91,000 |
| | | Indian Bank | 5,952 |
| | | BOI | 14,336 |
| | | SBI | 5,557 |
| | | Cash in Hand | 92,475 |
| TOTAL | 7,28,021 | TOTAL | 7,28,021 |

**Tamilnadu Archaeological Society Fund Account**

| | | |
|---|---|---|
| 01.04.2017 | By Opening Balance | 7,04,312 |
| 31.03.2018 | By Excess of Income over Expenditure | 23,709 |
| 01.04.2018 | By Opening Balance | 7,28,021 |



# ஆவணம்

An International Journal of Archaeological society

## தொல்லியல் கழகம், தஞ்சாவூர்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கலவெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

*ஆவணம்* இதழ்கள் 1 முதல் 23 வரை இருப்பு இல்லை

*ஆவணம்* 24-27 ரூ 350/-(இதழ் ஒன்றுக்கு)

*இடைக்காலத் தமிழ் நாட்டில் நாடுகளும்,ஊர்களும்* (பொ.ஆ.800-1300) ரூ100/-

*தமிழ் நாட்டு எழுத்து வளர்ச்சி* ரூ.150/- *சிலையும் கலையும்:* ரூ.300/- *முருகு:* ரூ.300/-

ஆகிய நூல்கள் விற்பனைக்கு உள்ளன.

தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை, அல்லது பணவிடை வழியாக செயலர்/பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.2,000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.4,000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/- செயலாளருக்கு அனுப்பி வைக்கவேண்டும்

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ.100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழை நேரிலும் பெற்றுக் கொள்ளலாம் அல்லது அஞ்சலில் பெற ரூ.100/- பணவிடை அனுப்பவும். மேலும் தொடர்புக்கு:


முகவரி:

**செயலர்/பொருளாளர்**

**தொல்லியல் கழகம்**

**மே/பா.கடல்சார் வரலாறு மற்றும் கடல்சார் தொல்லியல் துறை**

**தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 010.**

**Contact:**

**Archaeological Society**

**C/o. Department of Maritime History & Marine Archaeology**

**Tamil University, Thanjavur - 613 010.**

**E.Mail : editoraavanam@gmail.com, இணையதளம்: www.aavanam.org**




ISSN 0975-1831